(ரவீந்திரநாத டாகுரின் நூற்றொரு கவிதைகள்)

தமிழாக்கம்:

*த. நா. குமாரஸ்வாமி*


சாகித்திய அக்காதெமி

*புது தில்லி*

# ரவீந்திரர் கவிதைத் திரட்டு

# ரவீந்திரரின் கவிதைகள்

எக்காலத்தும் தனிப் பெருமையுடன் ஓங்கி நிற்கும் இலக்கிய கருத்தாக்களில் ஒருவர் ரவீந்திரநாத டாகுர். அவருடைய நூல்களின் எண்ணிக்கை பெரிய அளவினது. இவ்வகையில் அவருக்கு இணையாக நிற்கும் எழுத்தாளர்கள் வெகு சிலரே. ஓராயிரத்திற்கு மேற்பட்ட கவிதைகள், இரண்டாயிரத்திற்குக் குறையாத கீதங்கள், நூற்றுக்கணக்கான சிறு கதைகள், நாவல்கள் பல, நாடகங்கள், சமயம் கல்வி அரசியல் இலக்கியம்பற்றிய கட்டுரைகள் அநேகம், அவருடைய நூல்களுள் அடங்கும். மனிதனுக்குச் சுவை பயக்கும் அத்தனை துறைகளிலும் அவருக்கு ஈடுபாடு இருந்தது. தரத்திலும் சரி, வெகு சிலரே அடைந்துள்ள ஆக்கத்தின் சிகரத்தை அவர் எய்தியுள்ளார். விரிவானதும், பல்வகைச் சிறப்புக்கள் நிரம்பியதுமான அவருடைய படைப்புக்களை நோக்கும்பொழுது, உலக சரித்திரத்திலேயே அவர் உயர்விடம் பெற்றிருப்பதை யாவரும் மெச்சிப் பாராட்டுவதில் வியப்பே இல்லை.

உலகில் ஒரு மேதை தோன்றுவதற்கான காரணத்தை இயம்புவது சற்றுக் கடினமே. சாதாரணமாக, இத்தகையோர் தோன்றுவதே அபூர்வம். மக்கள் மனத்துள் உலவும் கருத்துக்களையும், அவர்களுக்கே புலனாகாத உணர்ச்சிகளையும் வெளியே எடுத்துக் கூறும் ஆற்றல் இத்தகைய மேதைகளுக்குரிய தனிச் செயலாகும். மக்களுடன் இணையும் வாய்ப்பு இவர்களுக்கு ஏற்படுகிறது. இத்தகையோர் தோன்றும்பொழுது உலகோர் வியந்து இவர்களைப் பாராட்டுவதற்கு இதுவே முக்கிய காரணமாக அமைகின்றது.

இந்தத் தொடர்பினால் மேதையும் பயன் பெறுகின்றான். மக்கள் உள்ளத்தில் குமிழ்த்தெழும் தெளிவற்ற அவாக்கள், குழப்பமான உணர்ச்சிகள் இவற்றிலிருந்து அமோக வன்மையும் உரமும் இம்மேதைகளுக்குக் கிடைக்கின்றன. இவ்விரு வழியிலும் ஒரு மேதைக்குரிய அடையாளம் டாகுரிடம் சிறப்பாக விளங்கியது. பண்பில் அவர் தனிப்பட்டு நிற்பவர் என்பதில் ஐயமே இல்லை. அதே சமயம் எவர் பொருட்டு அவர் வாழ்ந்

தாரோ, எவர்பால் அன்பு செலுத்தினரோ, அம்மக்கள் வாழ்விலேயே அவர் வேரூன்றி இருந்தவர். டாகுர், ஒரு விதத்தில் அதிர்ஷ்டசாலி என்றே கூறலாம். அவர் பிறந்த காலமும், இடமும் அவரது மேதா விலாசம் வளர்வதற்கு உதவி செய்தன. மேலை நாட்டுப் புதுமைக் கருத்துக்கள் அமைதியான இந்தியர் வாழ்க்கையில் ஓர் அதிர்ச்சியை மூட்டின. புதிய விழிப்பின் வேகம் நாடெங்கணும் பரவத் தொடங்கியது. இந்தத் தாக்குதல் வந்த புதிதில் இந்தியச் சிந்தனைப் போக்கே ஒருவித மயலுக்குள் சிக்கியது. புதுமையை ஏற்ற சீர்திருத்தக்காரர்கள், தொடக்கத்தில் மேலை நாகரிகத்தைப் பின்பற்றும் குருட்டு உபாசகர்களாயினர். ஆய்ந்து பாராத இப் புதுமை மோகம், டாகுர் பிறந்த சமயம் மெல்ல மறையத் தலைப்பட்டது. ஆனால் மேலை நாட்டிலிருந்து எடுத்துக்கொண்ட கொள்கைகள் இன்னும் வலுவாகவே பற்றிக்கொண்டிருந்தன. அதே சமயம் தொன்மையான இந்தியப் பண்பாட்டை அறிந்து அதை ஏற்கும் ஆர்வமும் வளர்ந்து வந்தது. ஆகவே, உலகின் மேலை - கீழை இரு பகுதிகளின் சிறந்த பண்புகளை அணைத்துக்கொண்டு ஒரு மேதை தோன்றுவதற்கான காலம் வந்தது. காலம் மட்டுமா, இடமும் வாய்ப்பாக அமைந்தது. இந்தியாவின் மற்றப் பாகங்களைவிட வங்காளமே மேலை நாட்டுக் கொள்கைகளைத் தன்னுள் ஆழப் பதித்துக்கொண்டது. வங்கத்தில் இப் புதுமைப் புரட்சி கல்கத்தா நகரில்தான் குறிப்பாகத் தோன்றியது. டாகுரின் மேதை மலர்வதற்கு அவருடைய குடும்பச் சூழ்நிலையும் துணை புரிந்தது. அவருடைய குடும்பத்தினரே இப்புது விழிப்பின் முதல் வழிகாட்டிகள். இந்தியாவின் பழைய சம்பிரதாயத்தைப் புறக்கணிக்காமல் அவர்கள், இப் புதுமை அறைகூவலை ஏற்றுக்கொண்டனர். டாகுர் அந்தண மரபில் தோன்றியவராதலால் தொன்மையான இந்திய ஐதிக்கியங்களையும், இலக்கிய வளத்தையும், வடமொழி வாயிலாக நுகர்ந்த சமய உண்மைகளையும் தார்மிக தத்துவங்களையும் ஏற்றிருந்தார். ஜமீன்தார் வகுப்பைச் சேர்ந்தவரானதால் இடைக் கால இந்திய மரபுகளை நன்கு உணர்ந்து மொகல் சாம்ராஜ்யத்தின் கலப்புப் பண்பாட்டையும் தயக்கமின்றி எடுத்துக்கொண்டார். அக்காலத்து அந்தண ஜமீன்தார்களைப்போல் அவர் இருந்தாலும், அவர்களிடம் காணுதற்கரிதான, அதாவது, காலத்தின் மாறுதலை - புதுப் போக்கினை - ஓர்ந்து ஒழுகும் சக்தியும் அவரிடம் இருந்தது.

இந்தியாவின், ஆரம்ப, மத்திய கால ஐதிக்கியங்களில் திளைத்திருந்த அவருடைய குடும்பத்தவர் மேலை நாட்டுக் கல்வி, போதனை, வாழ்வுமுறை இவற்றை ஏற்றுப் பரப்புவதில் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர். வழி வழியாக வரும் இந்த அறி

வின் ஈட்டமும், போராட்டமற்ற, தயக்கமற்ற மனப்பாங்கும் டாகுரிடம் தோன்றுவதற்கு அவருடைய குடும்பச் சூழலே தக்க காரணமாக நிற்கிறது. அவருடைய சமகாலத்தவர் வேற்றுமைப் படுத்தும் நோக்குக் கொண்டிருந்தமையால் தமக்குள்ள ஆற்றலைப் பாழ்படுத்திக்கொண்டனர். இப்போக்கைத் தவிர்த்துத் தம் முன் இரு ஓட்டத்தையும் இணைத்துத் தனிச் சிறப்புடன் நின்றார் டாகுர். பழங்காலம், இடைக்காலம் இவற்றிற்குரிய மதிப்பினை உதறிவிடாமல் புது யுகக் கருத்துக்களை ஏற்றது அவருடைய பாக்கியம் என்றே கூறவேண்டும். உணர்விற்கு மேலை நாட்டையே எதிர்நோக்கித் தம் பழமைப் பண்பாட்டின் தொடர்பை விலக்கி, தேசீய வாழ்வில் வேரூன்றாமல் பலர் இருந்தனர். எவ்வளவு ஆற்றல் மிக்கவராய் இருந்தும் என்ன, மக்களுடன் தொடர்பற்றதால் அவர்களது அறிவுக் களஞ்சியம் வறண்டு போயிற்று. உணர்வின் ஊற்று வற்றிவிட்டது. இந்திய மக்கள் வாழ்விலோ, இலக்கியத்திலோ அத்தகையோர் இடம் பெறாமல் போனதற்கு இதுவே காரணம் பகரும். ஒரு மேதை தன் இனத்தவரின் உள்ளக் கிடக்கையுடன் ஒன்றுவதால் பெறும் சக்தியை அவர்கள் இழந்து நின்றனர்.

டாகுர், மக்கள் மனப்பாங்குடன் ஒன்றுவதற்கு மற்றொரு காரணமும் உண்டு: இளமையில் அவர், மாதக் கணக்கில் பத்மா ஆற்றின் மணற்பரப்பில் படகில் வசித்தபொழுது, அக்கம் பக்கத்து எளிய நாட்டுப்புற மக்களுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தார். இங்கு அவர் பார்த்த மனித வாழ்க்கை நாட்டின் தொன்மை வரலாற்றில் வேரூன்றிப் பெருகுவதாகும். மத்திய காலத்தில் உருவெடுத்த நகர வாழ்வைவிட ஊர்ப் புறத்துப் பண்பாடு மக்கள் வாழ்க்கையை ஒட்டிப் படர்வதாகும். நகர மாந்தர் கண்டறியாத ஓர் உலகினுள் நுழைந்து பார்க்கும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. தம் நாட்டு மக்கள்பால் ஆழ்ந்த பற்றுதல் கொள்ள இதுவே அவரைத் தூண்டியது. இந்த எளிய மக்கள் கண்ட நிறைவாழ்வே டாகுரின் பன்முகமான இலக்கியப் படைப்புக்கு உணர்வைத் தந்து ஊட்டம் அளித்த ஊற்றுக் கசிவெனலாம்.

டாகுரின் வாழ்க்கையையும் அவருடைய ரசனைகளையும் நோக்குங்கால் அவருடைய மேதையின் விசித்திர வன்மையைக் கண்டு வியப்பில் ஆழ்கிறோம். சாராம்சத்தில் அவர் ஒரு கவிஞரே என்றாலும், கவிதை புனைவதுடன் அவருடைய ஆர்வம் நின்று விடவில்லை. அவருடைய இலக்கிய ஆக்கங்கள் பலதரப்பட்டவை என ஏற்கனவே கூறியுள்ளோம். அவருக்குள்ள திறமை முழுவதையும் இலக்கியம் ஒன்றே பயன்படுத்திக்கொண்டு

விடவில்லை. அவர் சிறந்த பாடகரும், உயர்வகை ஓவியரும் ஆவார். இதனுடன், கல்வி, சமயம், அரசியல், சமூகம், தருமத்தின் மறுமலர்ச்சி, பொருளாதாரப் புனர் நிர்மாணம் இவை போன்ற துறைகளிலும் அவர் குறிப்பிடத் தகுந்த பணிகள் புரிந்துள்ளார். உண்மையாகவே, இத்துறையில் அவர் ஆற்றியன ஏராளம். அதனால், இன்றைய பாரதத்தை உருவாக்கியவருள் ஒருவராக அவர் திகழ்கிறார்.

வாழ்விலெங்கும் ஓர் ஒற்றுமை நிலவுவதை உணர்ந்தவர் டாகுர். அவருக்குள்ள பெருவன்மை இவ்வுணர்விலிருந்தே தோன்றியதாகும். தமது லட்சியத்திலும், பண்பாட்டிலும் பேதம் காணும் நோக்கில் அவர் தம் ஆற்றலைப் புகுத்தவில்லை. வாழ்க்கை, கலை இவற்றிற்கு இடையே வேற்றுமை உண்டென்பதை டாகுர் ஒப்புக்கொள்ளாதவர் என்றால், அது வியப்பே அன்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் புதியதோர் அழகு வழிபாடு ஐரோப்பா எங்கும் வெற்றியுடன் பரவியது. வாழ்க்கையுடன் தொடர்பை நீக்கிக் கலையைக் கலைக்காகவே பயில வேண்டுமென்று அம்மக்கள் கருதினர். இவ்வழிபாட்டில் கலைஞனது ஆர்வத்திற்குச் சின்னமாக விளங்கியது கலைஞனின் முயற்சியால் எழுந்த 'மணி மண்டபம்'. இக் கனவுலகினைக் கண்டு களிப்பவர் கலைஞனும் கவியுமே ஆவார் என்பது அவருடைய கொள்கை. வாழ்வைப் புறக்கணித்து நிற்கும் கலையை டாகுர் என்றுமே ஒப்புக்கொள்ளாதவர். வாழ்வின் ஒரு விகாசமாகவே அழகினை அவர் வழிபட்டார். அதனுடன், அழகுணர்ச்சியற்ற வாழ்க்கை வாழ்வாகாது என்ற கருத்துடையவர் டாகுர். அவர் வரைக்கும் கவிஞனுக்குரிய தருமம் மனிதனுக்குரிய தருமமுமாகும்.

## II

உலகத்தின் சிறந்த கீதி கவிஞருள் டாகுரும் ஒருவர். உள்ளூறும் உணர்ச்சிப் பெருக்கு, தெள்ளிய சொல் நயம் இவற்றுடன் இழையும் யாப்பின் இசை யாவும் அவருடைய பாக்களில் காணும் தனிச் சிறப்புக்கள். படித்த பின்பு சொற்களை மறப்பினும் அச் செய்யுட்களின் இனிய சந்தம் வாசகனுடைய காதில் ஒலித்துக்கொண்டே இருக்கும். உணர்ச்சி வேகம், அணியின் அழகு, யாப்பின் அமைதி இம்மூன்றின் இணக்கம் அவருடைய கன்னி முயற்சிகளிலேயே தோன்றியது. 'நிர்ஜரேர் ஸ்வப்நபங்க' (அருவியின் கனவு கலைந்தது) என்பது இருபதாண்டு நிரம்புவதற்குள்ளேயே அவர் புனைந்ததாகும். இன்றளவும் அது வங்க மொழியிலேயே, ஏன், எம்மொழியிலுந்தான் சிறந்த பாடலாகத்

திகழ்கிறது. ஓசை இனிமையிலும் தீவிர உணர்ச்சியிலும் மட்டு மல்ல, உவமைச் சிறப்பிலும் அதற்கு இணையானது ஒன்றில்லை எனலாம். மனிதனும் இயற்கையும் பிரிக்கவொண்ணு வகையில் இழையும் அழகினை அது எடுத்துக் காட்டுகிறது. மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையே தென்படும் இந்த ஒருமைப்பாடு, டாகு ரின் வாழ்க்கை முழுவதிலும் அவருடைய கவிதைகளில் காணும் ஒரு சிறப்பு அம்சமாகவே இருந்து வருகிறது.

அவரைவிட இம் மண்மீது காதல்கொண்ட புலவன் எவனுமே இருந்திருக்க முடியாது. இரவு-பகல், சுழலும் பருவங் கள் இவற்றின் பல்வேறு பாவங்களைப்பற்றி அவர் வருணிக்காத பாட்டுக்களே இல்லை எனலாம். வங்கத்தின் இயற்கை எழிலும், அதன் ஒலிகளும், அதன் நாட்டுப்புறக் காட்சிகளும் அவருடைய மாய கீத வலையில் சிக்கிய பொருள்களாகும்.

காளிதாசன் காலந் தொட்டு, பாரதப் பாவாணர்கள் கார் காலத்தையே மிகச் சிறப்பாகப் பாடியுள்ளனர். நூற்றுக்கணக் கான கவிதைகளிலும் கீதங்களிலும் டாகுர் இந்த மாரியின் பல்வகை உருவங்களையும் பாவங்களையும் படம் பிடித்துள்ளார். உண்மையிலேயே, மழையைப்பற்றிய அவர் பாடல்களை அருமை நிதியமெனப் போற்றுகிறோம் நாம். மழைத் துளியை எதிர் நோக்கும் வறண்ட மாநிலம், முதல் தூற்றலைக் கண்ட களிப்பில் இன்மணம் பரப்பும் மண்ணகத்தின் மூச்சு, பசும் புற்றளிரில் தோன்றும் உயிர்த் துடிப்பு, ஒளிர் வைகறைப் பொழுதை மறைத்திடும் முகிற் கூட்டம், நிழலின் கோலம் புனையும் அந்தி வேளை, இரவு முழுவதும் ஓயாது கொட்டும் மழையோசை இவை போன்ற இன்னும் எத்தனையோ சித்திரங்களை நம் முன் நிறுத்துகின்றன டாகுரின் மாயக் கவிதைகள். மனித உள்ளத் தில் ஊசலாடும் இன்ப துன்பங்களை வைத்து அவற்றில் மிடைந்து விடுகிறார். அந்நிலையில் மனிதனும் இயற்கையும் தத்தம் உணர்ச்சிகளுடன் ஒன்றி ஒருமித்து நிற்கும் காட்சியைத்தான் காண்கின்றோம். மற்றப் பருவ காலங்களை, டாகுர் பாடாம லில்லை; சரத்காலம், இளவேனில் இவற்றின் பல்வேறு பாவங்களை வருணிக்கும் கவிதைகள் உண்டு. பல செய்யுட்களில், இளவேனி லின் கட்டுக்கு அடங்காத வெறி, கடும்பனியிலிருந்து விடுபட்ட அதன் இன்பச் சிலிர்ப்பு, பொங்கி எழும் மலர்களின் வண்ணப் பொலிவு, ஓசை இவை யாவும் பிரதிபலிக்கின்றன. இளவேனில் தரும் இன்பத்தையும் உயிர் வேகத்தையும்மட்டும் அவை நிரூபிக்கவில்லை. நிலைத்து நில்லா அதன் செவ்வியின் நினைவையும் நமக்கு எழுப்புகின்றன. டாகுரின் பல கவிதைகளில் சரத்ருது அதன் முதிர்ந்த நிறைவுடன், மழை விலகிய அதன் தூய

வானுடன், தனி அழகோடு விளங்குகிறது. அவருடைய சிறந்த கீதி நாட்டியம், வீண் வேலையால் சோர்வுற்ற மனிதன் விடுதலை பெற்று அமைதியைக் காண விழைவதை வைத்துப் பின்னியதாகும். அதன் உரிப் பொருளாகச் சரத் காலத்தையே எடுத்துக் கொண்டார் டாகுர். குளிர் காலத்தையும் கடுங் கோடையையும் அவர் மறந்துவிடவில்லை. பிரசித்தி பெற்ற தம் செய்யுள் ஒன்றில் டாகுர் இந்த முதுவேனிலை, புது வாழ்வினை எதிர்நோக்கிக் கடுந் தவம் புரியும் துறவியாகவே உருவகப்படுத்தியிருக்கிறார்.

இயற்கை எழில் நிரம்பியதென்றதனாலேயே டாகுர் இம் மாநிலத்தின்மீது பற்றுக் கொண்டுவிடவில்லை. மனிதன் வாழும் இடமாகவே நினைத்து அதன்மீது அன்புகொண்டார். மனிதரிட முள்ள இந்த அன்பை அவர் பல பாட்டுக்கள் வாயிலாக வெளிப் படுத்தினார். மனித உள்ளத்தில் காணும் எந்த உணர்வுக்கும் அவரிடமிருந்து எதிரொலி வந்தது. இன்ப துன்பத்தின் பல சூழ்நிலைகளில் திரண்டிடும் இந்த அன்பின் விளையாட்டை மறக்க வொண்ணாத சொல்லோவியங்களாகத் தீட்டிவிடுகிறார்.

சோகம், வேதனை, பிரிவாற்றாமை இவை தத்ரூபமாக அவருடைய காவியங்களிலே பொருளாக அமைவதைக் காண நாம் திகைப்புறுகிறோம். மனிதனின் மனவெழுச்சிக்கு உறு துணையாக இயற்கை வந்து நிற்பதை உணர்கிறோம். போராட் டமும் கடின முயற்சியும் நிரம்பியது வாழ்வு; அது நிறைவான தன்று எனக் கவிஞருக்குத் தெரியும். இத்தனை குறைகளும் இத்தனை கஷ்டங்களும் ஏக்கங்களும் இருப்பதனாலேயே மண்ணக வாழ்வு மனிதனுக்குப் பிடித்ததாகிவிடுகிறது என்று கவி நமக்கு எடுத்துரைக்கிறார்.

டாகுர் வரைக்கும் இவ்வுலகு, மனிதன் தன் பூரண வாழ்விற் காக முனைந்து பாடுபடும் ஓர் ஆடரங்கு மட்டுமன்று. மனிதன் தன் அநுபவங்கள் வாயிலாகச் சீரிய பொருளைத் தேடி அலை வதைக் கண்டு மனமிளகி அவனுக்கு ஆசி தரும் அன்புமிகு அன்னை யாகவும் பாவனை செய்கிறார் இம்மண்ணகத்தை. டாகுர் துறவி யல்லர்; உடல் நுகரும் பலவகைப் பயனைத் தவறென நினைக்கும் ஒரு கொள்கையை அவர் ஏற்கவில்லை. இதனால் அவர் வெறும் சிற்றின்பப் பிரியர், போகநுகர்ச்சி விரும்புபவர் என்பதல்ல. வாழ்வின் முழுப்போலிவெல்லாம், நிறைவும் வளமும் மிக்க அநுபவங்களைப் பெற விழைவதென்பதை அவர் நன்கு உணர்ந்த வர். நிறை வாழ்வினைக் குறித்த இவ்வேட்கை அவருடைய கவிதைகளில் மீண்டும் மீண்டும் தொனிக்கின்றது. 'வஸுந்தரா' (மாநிலத் தாய்) என்ற கவிதையில் இம்மண்ணகத்தில் திகழும் உயிர்ச்செம்மையையும், பொங்கி எழும் தொன்மைமிகு சக்தி

யுடன் மனிதனுக்குள்ள உறவையும் விழைந்து பாடுகிறார். அவருடைய சிறந்த பனுவலில் ஒன்றான 'ஸ்வர்க்க ஹஇதே பிதாய்' (சொர்க்கத்தினின்று விடைபெறுதல்) என்றதில் நிச்சலமான சொர்க்கத்துடன், மண்ணக வாழ்வில் சிரிப்பும் கண்ணீரும் கலந்து தோன்றும் அநுபவத்தின் இனிமையை ஒப்பிட்டுப் பார்க்கிறார். டாகுருக்கு எவ்வகை வாழ்க்கை பிடிக்கும் என்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ!

டாகுர் 'பாட்டுக்கொரு புலவன்'. இயற்கையிடம் காதலும், உயிரினத்துடன் கொள்ளும் ஓர் உறவுணர்வும் அவர் இயற்றிய பல பாடல்களுக்கு உயர்வகை நாடகத்தன்மையை நல்கியுள்ளன. ஆழ்ந்த மனிதப்பற்றும், நேர்மையைக் குறித்து வேட்கையும் உடைய அவருக்குச் சமூகம், அரசியல் இவற்றை நிலைக்களனாகக் கொண்ட பிரச்னைகளில் ஈடுபாடு மூண்டது. ஒரு சிறு அநுபவத்தை யொட்டிய நிகழ்ச்சியாக இருக்கும்; ஆனால் அதையே அவர் உலகு பரந்த பொருளைத் தரும் உயர்வகைக் காவியமாக அமைத்துவிடுவார். தம் நாட்டவரிடம் காணும் பொறாமை, பொச்சரிப்பு, மூடநம்பிக்கை இவற்றை எண்ணி நகையாடும் வகையில் வியங்கியச் சுவை மலிந்த ரசனைகள் பல இயற்றியுள்ளார். அவற்றுள் இரண்டொன்றைத் தவிர மற்ற ரசனைகளில் ஆத்திரத்தைவிட மனிதத் தனிமையில் அவருக்குள்ள பற்றுதலே அதிகமாகத் தென்படும். அவர் பாடிய தேச பக்திப் பாடல்களில், உலக மாந்தருக்கான ஒரு பரந்த மனப்பான்மை அல்லவோ ஒலிக்கின்றது! டாகுருக்கு நாட்டுப்பற்று என்பது, தம் நாட்டவர், தம் நாடு இவற்றைக் குறித்து அன்பைக் காட்டும் நேர்முகப் பண்பாகும்; பிற நாட்டவரிடம் துவேஷம் கொள்ளும் எதிர்மறைத் தன்மையே அன்று. 'குரு கோவிந்த்' என்ற கவிதை அதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். அதில், நாட்டினர் பாலும் நாட்டிடமும் பூணும் அன்பு, உலக மாந்தர் பால் வழிந்தோடும் அன்பின் பெருக்காக மாறுவதைக் காணலாம். மனிதத் தன்மையில் உள்ளன அனைத்தும் அவர் ஏற்றுக் கொண்டவையே. 'ப்ரபாஸி' (நாடோடி) என்ற செய்யுளில் 'யாதும் ஊரே யாவரும் அன்பரே' என்ற உன்னத தத்துவத்தை நிலைநிறுத்துகிறார் கவியரசர். மனிதர் யாவரும் ஒரு குலத்தவர் என்ற பரந்த மனப்பான்மை இன்று நம் பாரத தேசீய கீதத்தில் மிக அழகாக எதிரொலிக்கிறது. அக்கவிதையில் டாகுர், பாரதத்தின் பாக்கியத்தை நிர்ணயிக்கும் கடவுளர் எல்லா இனத்தவர் உள்ளத்திலும் உறைபவரென்றே புகழ்ந்து பாடுகிறார்.

மனிதர்பால் டாகுர் கொண்ட அன்புணர்வு, அவரையும் அறியாமல் கடவுள்பால் அன்பாக மாறிவிடுகிறது. அவரது

கற்பனை போன்ற ஓர் அநுபவத்தில் இயற்கையும் மனிதனும் இழைவதை நாம் முன்னரே சுட்டியுள்ளோம். மனித வாழ்வி லிருந்து இந்தக் கடவுள் தன்மை வேறுபட்டதென்றோ, தொலை வில் நிற்பதென்றோ அவர் நினைக்கவே இல்லை. அவர் வரைக்கும் அன்பே கடவுளாம். சேயிடம் தாய்க்குள்ளதும், இனியாளிடம் காதலனுக்கு மூள்வதுமான இந்த அன்புணர்ச்சியே கடவுளுக்குச் சமர்ப்பிக்கும் பேரன்பாகும். இத்தகைய மனவெழுச்சி ஞானியின் ஆனந்தாநுபூதியில் மட்டும் தோன்றுவதில்லை. மனிதனுடைய அன்றாட வாழ்க்கை முறையிலும் தோன்றுவ தாகும். உலகினை உய்விக்கும் சாதாரண வாழ்க்கை உறவு களின் மூலமும் கடவுளை அடைய வாய்ப்புள்ளதை டாகுர் அடிக்கடி எடுத்துக் கூறுகிறார். வைணவக் கவிகளிடமும், ஸூபி ஞானிகளிடமும் டாகுர் இத்தத்துவ உண்மைகளைப் பெற்றார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. சுயாநுபூதியாய் வெளிவந்த அவருடைய உவமை மரபுகள் ஆதாரபூர்வகமானவை. இயற்கை யின் பல பாவங்களுக்கு ஏற்ப நுண்ணிய உணர்வுகளுடன் இழை யும் இக்கவிதைகள் உலக இலக்கியத்திலேயே அரியவை.

அவருடைய அத்யாத்மிகக் கவிதைப் பண்பைப்பற்றி ஒரு வார்த்தை: கீதாஞ்சலி முதன்முதல் ஆங்கில மொழிபெயர்ப் பில் வந்தபோது, போரால் அலுத்துக் கசந்துபோன உலகினுக்கு அமைதியின் மந்திரத்தை ஏந்தி வரும் திவ்விய கானமாகவே மேலை நாடுகள் அதை வரவேற்றன. எவரும் எளிதில் புரிந்து கொள்ளும் உவமைகளும், தெள்ளிய நடையும், சீரிய பொருளும் இக்கவிதைகளுக்குத் தனி மதிப்பைத் தந்தன. ஏதோ ஒரு புதிய உலகைக் கண்டதுபோன்ற உவகையையும் வியப்பினையும் உண்டுபண்ணின இவை. ஆனால் மூல வங்கமொழியில் படித்த வாசகர்களுக்கு, இள வயதில் டாகுர் தொடங்கிய ஒரு காவிய சாதனை பரிபக்குவ தசைக்கு வந்திருப்பதைத்தான் இவை உணர்த்தின.

மனிதன், இயற்கை இவர்கள்பால் அவருக்கு வளர்ந்த அன்புணர்ச்சியானது படிப்படியாகத் தன்னையும் அறியாமலே இறைவனிடம் பற்றுதலாக மாறியது. வாழ்வில் அவருக்கு ஏற்பட்ட ஆழ்ந்த அநுபவங்களால் அவருடைய கவிதைப் பொருள்களுக்கும் உருவகங்களுக்கும் கனிந்ததொரு செவ்வி தோன்றியது. இவ்வநுபவங்களால், வாழ்வே பரம ரகசியம் சூழ்ந்ததென்ற மறுக்க முடியாத உண்மை அவருக்குப் புல னாகியது. மனித வாழ்வில் தென்படும் உருக்கமும் வியப்பும் அவருடைய கற்பனைச் சிருஷ்டிகளுக்குப் புதியதொரு தெளிவை யும் நெகிழ்வையும் தந்தன. டாகுர் பிற்காலத்தில் பாடியுள்ள

கவிதைகளில் காணும் சிறப்பான அம்சம் அக்கவிதைகளில் மண்டிக் கிடக்கும் எளிமையே. தொடக்கத்தில் அவருடைய கவிதைகள் வடமொழியின் சொற் சந்தச் செறிவிலிருந்து நிரம்பத் திரட்டிக்கொண்டன. அவற்றின் பொருளும், உணர்ச்சிகளும் தொன்மையான பாரத இலக்கியங்களின் மணம் மல்குவன. பழையதொரு பொருளுக்குப் புதிய மெருகை அவர் கொடுத்திருப்பினும், அவை பண்டைய இதிகாச புராணங்களுடன் இயைபுடையனவாகும். மனிதன், கடவுள் இருவருக்குமே சமர்ப்பணமான அவருடைய பிற்காலக் கவிதைகள் சொல்லாடம்பரம் அற்றவை. மனித வாழ்வில் நடக்கும் ஒரு சிறு சம்பவத்திலும் அவர் தெய்விக அநுபூதியைக் காண்பாராயினர். இவை போன்ற கவிதைகளில், மக்கள் பேசும் எளிய அன்றாட மொழியையே அவர் எடுத்தாண்டார். முதுமையில் அவர் இயற்றிய பல பாடல்களில் இந்தத் தெய்விக அநுபூதியே நம்முன் வந்து நிற்கின்றது. அவற்றில் துல்லியமான சொற்பிரயோகங்களைக் காணலாம். தூய இசையின் நாதமென மனத்துள் பதிந்து நம்மை அவை வியப்பில் ஆழ்த்துகின்றன.

டாகுர் தம் வாழ்வு முழுவதும் சற்றும் தளராது மெய்ப்பொருளை ஆராய்ந்தவர் என்பதை நாம் மறக்கமுடியாது. நம் குறை குற்றங்களை மூடி மறைக்க நாம் எழுப்பிக்கொள்ளும் கரவு, பொய் என்னும் மதிலை அவரது அறிவின் கூர்மை உடைத்தெறிந்தது. அவருடைய ஆக்கங்களை மூலமொழியிலேயே நுகராதவருக்கு அவர் எழுத்தில் உள்ள வன்மையும் வீரியமும் எங்ஙனம் தெரியும்? மொழிபெயர்ப்பாக வந்துள்ள அவருடைய கவிதைகள் இங்கொன்றும் அங்கொன்றுமாய் எடுத்துத் தொகுத்தவையே. இதனால் அவருடைய அறிவின் விரிவை உணர்த்தும் கவிதைகள் பல விட்டுப்போயுள்ளன. மூல மொழியில் காணும் பீடு நடையைக் குறைத்து வெறும் தழுவலாகவே இம் மொழிபெயர்ப்புகள் உள்ளன.

இளம் பருவத்திலேயே டாகுருக்கு மனிதனிடமும் அவனை நடத்தும் விதியிடமும் ஓர் அக்கறை பிறந்திருந்தது. அவர் எழுதிய 'ஸந்த்யா ஸங்கீத' என்ற கவிதைத் திரட்டில் வரும் கவிதைகளிலிருந்து, வாழ்க்கைப் பிரச்னைகள்மீது அவர் ஆழ்ந்த கவனம் செலுத்துவதைக் காண்கின்றோம். தன்னலம் மிக்க மனிதர் அன்பின் முகமூடி அணிவதால் என்ன அவலமெல்லாம், விகாரமெல்லாம் தோன்றுகின்றன என்பதை இயல்பறிவால் நன்குணர்ந்தவர் டாகுர். 'நைவேத்திய' என்ற கவிதைக் கோப்பில் இத்தத்துவ நோக்கே தீவிரமாக ஊடுருவி உள்ளது. பின்னர், 'பலாகா' (கொக்கு) என்ற காவியத் தொகையில்

அறிவின் ஒளியும் உள்ளத்துணர்வும் எவ்வளவு அழகாக இழை கின்றன! அறிவுடன் உணர்வு சேருவதால் வறண்ட தத்துவ விசாரங்களும் இனிமை சொட்டும் காவிய சிருஷ்டிகளாக மாறுவதை, 'பலாகா' செய்யுட்கள் உணர்த்திடும்.

டாகுர் தம் இறுதி நாள்வரையில் புதுப் புது அநுபவங்களை யும் புதுப்புதுச் சொல் மரபுகளையும் ஆய்ந்து வந்தவர். அறுபது ஆண்டு எல்லைக்கு வந்தபோழுது, அவர் தம் இளவயதில் எழுதிய ஒப்பற்ற கவிதைகளுக்கு நிகரான பாடல்கள் அவரிடமிருந்து பெருக்கெடுத்து வந்தன. வேதனையில் புடமான ஆழ்ந்த உணர்ச்சி களையும், நசைகளையும் இவை வெளிப்படுத்தின. சுய அநுபவங் களை நெருங்கித் தொடும் இக்கவிதைகள் தோன்றிப் பத்தாண்டு கள் கழித்து அவருடைய பாக்கள் பக்குவமும், மனிதப்பான்மை யும் கொண்டு விளங்குகின்றன. அவரது இளவயது ரசனைகளில் தென்பட்ட சொற்செறிவு, அலங்காரச் சிறப்பு இவ்விறுதிக்காலத் துச் சிருஷ்டிகளில் சொற்செட்டும், சிந்தனைத் திட்பமுமாகப் பரிணமிக்கின்றன. இறுதியில் அவர் பாடிய சில கவிதைகளில் பொதிந்துள்ள உறுதியும், ஒரு ஞானத்தெளிவும் நம்மை வியப் பில் ஆழ்த்துகின்றன. கவி வாழ்க்கையை அதன் குறைகளுட னும் நம்பிக்கைகளுடனும் அமைதியாக ஏற்று அதன் முடிவான பயனைப் புதுமையுடன் ஆராயும் ஆர்வம் அவருக்கு இருந்தது.

## III

ஆயிரத்துக்குமேல் செய்யுட்களும், இரண்டாயிரத்துக் குக் கிட்டத்தட்ட இன்னிசைப் பாடல்களும் டாகுர் இயற்றினார். அவருடைய முதல் நூல் வெளி வந்தபொழுது அவருக்கு வயது பதினைந்தே. தம் கடைசிக் கவிதையை அவர் தம் மரணத் தறுவாயில் எழுதினார். இவற்றை உன்னுங்கால் பரந்துபட்ட அவருடைய நூல்களிலிருந்து ஒரு செய்யுட் கோவையைத் தொகுப்பது எவ்வளவு கடினம் என்பது தெரியவரும். உண்மையில் ஒரு கவிதைத் திரட்டை அமைப்பது அப்படி எளிதான காரிய மன்று. அத்தகைய தொகுப்பு, அதைத் தேர்ந்து எடுக்கும் ஆசிரியனின் ருசியைத்தான் வெளிப்படுத்தும். எல்லோருக்கும் சுவை பயக்கும்வண்ணம் அது அமையுமென்று எதிர்பார்க்க முடியாது. வெளி நாட்டவருக்கு மட்டுமல்ல; வங்கத்துக்கு வெளியே உள்ள மற்ற இந்தியர்களுக்கும் இது பொருந்தும். நம் நாட்டுக்கே இது இரு வழிகளில் துரதிர்ஷ்டமாகும். பாரத நாட்டுப் பெரும் புலவரின் சீரிய ஆக்கங்களைப் பாரதத் தில் இன்னும் பெரும்பாலானோர் தெரிந்துகொள்ளாமல் இருக் கின்றனர். பாரத நாட்டின் இந்தக் கவிதைச் சாதனையை

அறிந்து போற்றக்கூடிய வாய்ப்பு வெளி நாடுகளுக்கு அளிக்கப் படவில்லை. ஆகவே, டாகுரின் நூல்களிலிருந்து புதியதொரு திரட்டை உருவாக்குவது உலக நலனுக்கும், நம் நாட்டு நலனுக்கும் மிக அவசியமானதே. சாகித்திய அக்காதெமியார் இக்கடின முயற்சியை ஏற்று, தேர்ந்தெடுத்த கவிதைகள், பாட்டுக்கள், நாடகங்கள், நவீனங்கள், சிறுகதைகள், கட்டுரைகள் அடங்கிய டாகுரின் நூல்திரட்டு எட்டினை வெளியிடுவதாக இருக்கின்றனர். டாகுரினுடைய அறிவின் விரிவையும், ஆழத்தையும், சக்தியையும் எல்லா இந்திய மொழிகள் வாயிலாகவும் வாசகர்களுக்கு உணர்த்துவதே அவர்களின் முதல் நோக்கமாகும். மற்றொன்று - இரண்டாம் பட்சமாக - இதேபோல் வெளிநாட்டு வாசக நண்பர்களுக்கு இந்த விருந்தினை அளிப்பதேயாம்.

நூற்றொரு கவிதைகள் அடங்கிய இத்திரட்டு, திட்டமிட்டுள்ள எட்டுத் தொகைகளில் முதலாவதாகும். வங்க மொழியில் உள்ள மூல கவிதைகள் தேவநாகரி எழுத்தில் அச்சேறி வெளியிடப்பட்டன. பின்னர்ப் பாரதத்தின் முக்கிய மொழிகளில் பெயர்க்கப்படுகின்றன. அதன் பிறகு, உலகத்துப் பிரதான பாஷைகளில் ஆக்கப்படும். வட இந்திய மொழிகளிடையே நெருங்கிய தொடர்பு இருப்பதால் டாகுரின் தாய் மொழியான வங்காளியைப் பயிலாதவர்கூட அவருடைய கவிதைகளைப் படித்து ஓரளவு நுகர்ந்து இன்புற முடியும். மொழியோடு நிற்கவில்லை இந்த் உறவு. பொதுவான சூழ்நிலை, பொதுவான விஷயங்கள், பொதுவான அநுபவங்கள் இவற்றின் அடிப்படையில் எழும் உணர்ச்சியிலும் நோக்கிலும் இந்த உறவு இந்தியரிடையே நிலவி வருகிறது. தென்மொழியை எடுத்துக்கொண்டால், மொழி வேறுபாட்டால் சிரமங்கள் பல இருப்பினும், இதே உணர்ச்சியும் ஐதிக்கியப் பற்றும் அம்மொழி பேசும் மக்களிடையேயும் தென்படுவதால், இது சாத்தியமே தான். இதுபோன்ற மொழிபெயர்ப்புக்களின் உதவிகொண்டு தேவநாகரி எழுத்தில் தந்துள்ள டாகுரின் மூல கவிதைகளை ஓரளவு எல்லா வாசகர்களும் படித்து அவற்றில் காணும் அழகினை - உவமை நயங்களை - நுகர்வர் என்பதில் ஐயமே இல்லை. பின்னர், இந்தக் கவிதைகள் மற்ற உலகமொழிகளில் பெயர்த்து வரும்போது, இதுகாறும் வெளிவந்த அவருடைய நூல்கள் தந்துள்ளதற்கு மேலாகவே டாகுரின் ஆக்கங்களைப்பற்றித் தனிப்பட்டதும் தெளிவானதுமான அறிவு மக்களிடையே இதனால் பரவுமென்று நம்புகிறோம்.

கவிதைகளை 101 என்ற எண்ணிக்கையுள் அடக்கியது ஒரு புனித நோக்கைக் கொண்டு செய்ததன்று. இந்த எண்ணிக்கையை

இரட்டிப்பாக்கி இன்னும் சிறந்த கவிதைகளைச் சேர்க்கலாமென்றால், நான் அதை வரவேற்பவருள் ஒருவனாவேன். இந்தத் தொகுதியிலிருந்து சில செய்யுட்களை எடுத்துவிட்டு வேறு சிலவற்றைச் சேர்த்தால் நன்றாக இருக்குமென்று யாராவது குறை கூறுவாராயின் அதையும் நான் ஒப்புக்கொள்வேன். ஒரு மகா கவியின் கவிதைத் திரட்டை உருவாக்கும்பொழுது இப்படி ஒரு கொள்கை வேறுபாடு நேர்வது நியாயமே. இந்தத் திரட்டைக் குறித்து ஒன்று கூறுவேன்: சிறந்த கவிதை வகையில் சேராதவை இதில் எதுவும் இடம் பெறவில்லை. இதில் வரும் டாகுரின் கவிதை ஒவ்வொன்றும் தனித் தனி வகையானது. தனித் தனி நடையில் செல்வது. வேறொரு காரணம்பற்றி இத் தொகுப்பில் டாகுரின் இசைப் பாட்டுக்களைச் சேர்க்கவில்லை. அவற்றுள் சிறந்த கவிதைப் பண்பு இருப்பினும், தனித் தொகுதி கொண்டு வருவதன் நிமித்தம் அவை விலக்கப்பட்டன.

'நிர்ஜரேர் ஸ்வப்நபங்க' (அருவியின் கனவு கலைந்தது) என்ற கவிதையுடன் தொடங்குகிறது இத்திரட்டு. தம் கவிதா சக்தி விழிப்புற்றதை இக்கவிதை விளக்குகிறதென டாகுர் கருதுகிறார். இதில் தொனிக்கும் ஒரு கவிதைப் பண்பே டாகுரின் நீண்ட இலக்கிய வாழ்வில் தொடர்ந்து வந்தது. சில சமயம் 'ஸோனார் தரீ' (பொன் ஓடம்), 'நிருத்தேச யாத்ரா' (குறிப்பிலாப் பயணம்) போன்ற கவிதைகளில் இந்தப் பண்புடன் ஆழ்ந்த அத்யாத்மிக வேட்கையும் தோய்வதைக் காணலாம். 'ஜேதே நாஹி திபோ, (போக விடேன்), 'வஸுந்தரா' (மாநிலத் தாய்), 'பாரத (புண்ணிய) தீர்த்த' என்ற கவிதைகளில் இந்தக் காவிய உணர்வு மனித நசைகளுடன் கலக்கின்றது. ஊர்வசீ, சபி (ஓவியம்), சஞ்சலா (சலனப் பிரபஞ்சம்) போன்ற பாக்கள், அறிவின் அமைதியும் ஐம்பொறி நுகர்வும் நிறைவாக இணைந்து இன்சுவை மிளிரும் இலட்சியக் கவிதையாகத் திகழும் 'ப்ரஹர சேஷேர் ஆலோய் ராஙா' (பொழுதின் கடையொளியில் வண்ணம் சேர்) என்ற பாட்டு ஆகியவை இத்தகைய இலட்சியக் கவிதைக்கு ஓர் எடுத்துக் காட்டெனலாம்.

மனிதனுடைய மகத்தான சாதனை, அவன் தனது சொந்தத் துயரினையும் உலகத்தின் மாபெருந் துயரினையும் வென்று நிற்பதென்பதே டாகுரின் கொள்கை. தன்னலத்தாலும், மனக்கிலேசத்தாலும் தோன்றும் துன்பங்களை மனிதன் வென்று வருகிறான்; நிலையில்லா இவ்வாழ்க்கையின் மீளா இன்னலிலிருந்து அவன் தலைதூக்கி நிற்கிறான். 'பிதாய் அபிசாப' (விடை பெறுகையிலே சாபம்) என்பதில் தேவயானி இட்ட சாபத்திற்கு மாறாக அவளுக்கு ஆசி கூறும் கசன், உண்மையில் சிறந்த மனிதப்

பண்புடையவனாகிறான். 'ப்ராஹ்மண' (அந்தணன்) என்ற கவிதையில் மனிதனுக்குரிய மாண்பெல்லாம் அவனது பிறவியினால் ஏற்படவில்லை, சற்றும் மனக் கசப்பின்றி உள்ளதை உள்ளபடி ஏற்பதில்தான் என்பதை ஆசாரியன் உணர்கிறான். 'ஜேதே நாஹி திபோ' (போக விடேன்) என்பதில், எல்லாம் அறிந்தவரெனத் தம்மை நினைத்துக்கொள்ளும் நரநாரியர் காணாத மனித இயல்பின் உண்மைக் கருத்தை ஒரு சிறுமி வெளிப்படுத்தி விடுகிறாள். 'காந்தாரீர் ஆவேதந' (காந்தாரியின் முறையீடு) 'கர்ணகுந்தீ ஸம்வாத' (கர்ணனும் குந்தியும்) இவ்விரண்டும், பாசம் நசை அச்சம் யாவையும் வென்று நிற்கும் மனிதத்தன்மையின் உயர்வைத்தான் அழுத்திச் சொல்கின்றன. சிறு கவிதையான 'திதி' (அக்காள்) என்பதிலும், 'ஜந்ம கதா' (பிறந்த கதை) என்பதுடன் தொடங்கும் பிள்ளைக் கவிதைகளிலும் மனித உறவில் உள்ள உருக்கமும் அழகும் அப்படியே பிரதிபலிக்கின்றன.

பாரதத்தின் தொன்மையான இலக்கியக் கருவூலத்திலிருந்து டாகுர், சுவைமிகு பகுதிகளையும் பொருட்செறிவுடைய ஐதிக்கியங்களையும் நிரம்ப எடுத்து ஆண்டுள்ளார். ஆனால், அவர் கைவண்ணத்தால் அவை புதுப் பொலிவு கொண்டன. காளிதாச கவியிடம் டாகுருக்கு அளவற்ற மதிப்பு. இவரிடமிருந்து எடுத்துக்கொண்ட விஷயத்தைத் தமக்கே உரித்தான பாணியில் திரித்து இன்றைய இலக்கியமாகச் செய்துவிட்டார் டாகுர்.

அவர் வரைக்கும், மேகதூத காவியம் புராண யுகத்து யக்ஷன் ஒருவன் பிரிவாற்றாது தன் இனியாளுக்கு விடும் தூது மொழியே அன்று; எக்காலத்திற்கும் எந்நாட்டிற்கும் உரிய காதலரின் உள்ள ஏக்கத்தை வெளிப்படுத்தும் ஒரு மூச்சேயாம். 'அஹல்யார் ப்ரதி' (அகலியை), 'ப்ரஷ்ட லக்ந' (நழுவிய சுபவேளை), ஸ்வப்ன (கனவு) என்ற கவிதைகளில், மறைந்துபோன பழங்காலத்தின் ஒரு சூழலை நம்முன் நிறுத்துகிறார். உடனேயே அவர், இந்த மறைந்த யுகம் இன்றும் நம் உணர்ச்சிகளிலும் பாவனைகளிலும் உயிர் பெற்று வருகின்றது என்பதைத் தெளிவுபடக் கூறுகிறார். 'மதந பஸ்மேர் பர்' (மாரவேள் நீறாகிய பின்) என்ற கவிதை, இக்காலத்திற்கும் அக்காலத்திற்கும், புராண கதைக்கும் இன்றைய வாழ்க்கைக்கும் இடையே காணும் உறவை மிக அழகாக எடுத்துரைக்கின்றது.

பிற்காலத்தில் எழுதிய சில பாட்டுக்களில் இப்படிப் பழங்காலத்து விஷயங்களுக்குப் புத்துயிர் புகுத்தி அப்படியே படம் பிடிக்கும் ஆற்றல் அவருக்கு உள்ளதைக் கண்டு நாம் வியப்படை

கிருேம். 'தபோ பங்க' (தவம் கலேதல்) என்பதில், புது வாழ்வில் தோன்றும் இன்பப் பெருக்கு முடிவில் வறண்ட துறவறத்தை செல்வதை வெளியிடும் ஒரு கதைக்குப் புது மெருகை அளிப்பதைப் பார்க்கிருேம்.

டாகுர், கவிதைக்குரிய பொருள்பற்றி மட்டும் ஆராய்ச்சி செய்யவில்லே; கவிதையின் யாப்பு அமைதிபற்றியும் நிரம்ப ஆய்ந்துள்ளார். தம் முன்னேர்கள் காட்டிய வழியை இத் துறையில் அவர் பின்பற்ற அஞ்சவில்லே. வங்க நாட்டு வைணவக் கவி மரபுகளேத் தாராளமாக அவர் எடுத்தாண்டார். பிஹாரிலால் போன்ற கவிஞர்களுக்குத் தாம் பெரிதும் கடமைப் பட்டிருப்பதாக அவரே ஒப்புக்கொள்கிருர். தான் வாழும் காலச் சூழ்நிலேயிலிருந்து தப்ப எவனுலும் ஆகாது; இந்த நியதியை மீறும் முயற்சி எதுவும் முடிவில் தோல்வியேயுறும்; ஒரு கவிக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை இல்லே என்ருகிவிடும். டாகுர் தம் காலத்துச் சமூக நிழலில் வளர்ந்தவர். ஆயினும் இந்த வளர்ச்சியே நாளடைவில் அவருக்கு அச்சூழலிலிருந்து மீளும் வழியையும் காட்டியது. தமக்குள்ள கவி புனேயும் சக்தியை உணர்ந்த பிறகு, வங்கக் காவிய உலகு புறக்கணித்த கவிதைப் பொருள், யாப்பு இவைபற்றிய பரீட்சையில் ஈடுபட அவர் தயங்கியதே இல்லே; கவிதைக்குரிய பொருள்களில் இது தகும், தகாது என்ற வேற்றுமைப்பான்மையை அறவே ஒழித்து நின்ருர். 'க்ஷணிகா'வில் காவியச் சுவையே இராத சாதாரண சம்பவங்களேக்கூடத் தம் மேதையினுல் எவ்வளவு அழகு ததும்ப வருணித்துள்ளார்! உள்ளத்தின் ஆழ்ந்த அநுபவங்களே எளிய சொற்களேக் கொண்டே கூற முடியுமென்ற கவி வொர்ட்ஸ் வொர்த்தின் கூற்றுக்கு டாகுருடைய பிற்காலக் கவிதைகள் பல, சான்று பகரும். அழுகை - சிரிப்பு, நகைச்சுவை, உள்ள நெகிழ்வு, ஏக்கம், ஏளனம் - துன்பம் இவை ஒன்ருேடொன்று பின்னி விளேயாடுகின்றன 'க்ருஷ்ண கலி' (கருமுகை), 'யதா ஸ்தாந' (உரிய இடம்) 'ஸேகால' (அந்தக் காலம்) என்ற பாக்களில் மனித உணர்ச்சிகளும் மனேபாவங்களும் கைகோத்துச் செல்வதைக் காணலாம்.

டாகுர் சாராம்சத்தில் ஒரு பாவலரே; ஆனுல் சில பொழுது வியங்கியச் சுவையாக இராவிடினும் ஏளனத்தின் கூர்மை அவரிடம் தென்படுகிறது. சமூகக் குறைகளே நையாண்டி செய்கிருர். ஏட்டுச் சுரைக்காய் வேதாந்திகள் என்பவர் வேறு எவருமில்லே, சிந்தனு சக்தியை இழந்தவர்தாம். 'ஹிங் டிங் சட்' என்பதில் டாகுர் இரக்கமின்றி வெற்று மனத்திரான இந்த அறிஞர்களேத் தீர்த்துக் கட்டிவிடுகிருர். 'துஇ பாகீ' (இரு

பறவைகள்) என்பதில், குமிழ்த்தெழும் வாழ்க்கையின் மூச்சை உயிரிலாப் பழக்க வழக்கங்கள் திணறச் செய்து சாக அடிக்கும் முறையைத்தான் ஏளனம் செய்கிறார். 'தேவதார் க்ராஸ்' (தேவதைக்குப் பலி) என்பதில் மனித தருமத்திற்கும், ஊறிப் போன மூட நம்பிக்கைக்கும் இடையே நடக்கும் போராட்டத்தையும், இறுதியில் மனிதன் நழுவவிட்ட பேருண்மை நிலவுவதையும் திறமையுடன் வருணிக்கிறார். 'அபமாநித' (இழிவுக்கு ஆளானோர்), 'தூலா மந்திர்' (புழுதிக் கோயில்) இவற்றிலும் மனிதராகப் பிறந்தவர் எவரும் சமம், எத்தொழிலும் சமகௌரவம் உடையது என்பதற்கான விளக்கம் வருகிறது.

கூர்ந்து ஆராய்வோர், இக்கவிதைத் திரட்டில் ரவீந்திரர் முதுமையில் எழுதிய கவிதைகள் அளவுக்குமேல் சேர்க்கப்பட்டுள்ளன என்று குற்றம் கூறலாம். இதில் உண்மை இராது போகவில்லை. 1928-இலிருந்து 1941வரை உள்ள கால அளவிற்கு இருபது செய்யுட்களுக்கு மேல் இதில் இடம் பெறுகின்றன. 1881-இலிருந்து 1924 வரையிலான காலத்திற்கு எண்பது கவிதைகளையே காண முடியும். இதற்கு ஒரு காரணமாவது: வங்க மொழியிலும், மொழிபெயர்ப்பாக வேறு மொழிகளிலும் டாகுரின் இளமைக் காலத்துக் கவிதைகளின் திரட்டுகள் பல உள்ளன. மற்றொரு காரணம், சொற்செட்டும் சிந்தனைத் தெளிவும் கொண்ட அவருடைய பிற்காலக் கவிதைகளுக்கு அதிக இடம் தருவது உசிதமாயிற்று. காவிய மரபும் பாவபுஷ்டியும் இந்தப் பிற்கால ரசனைகளில்தான் மிகவும் ஊடுருவியுள்ளன. டாகுர் தம் இளமையில் கணக்கற்ற காதல் கவிதைகள் புனைந்திருப்பினும் இந்த அபூர்வ உணர்வை மேல்வாரியாகவே அவை வருணிப்பனவாகும். உள்ளத்தைத் தொடும் அளவு அவை அமையவில்லை. இந்தக் கவிதைகளில் டாகுர் சொற்களையும், சந்தங்களையும் நவநவமாகப் புனைவதிலேயே கருத்தூன்றி இருந்தார். ஆனால், காதலின் நுட்ப நுகர்வுகளை அவர் எடுத்துரைக்கவில்லை என்று அவரிடம் குறை கண்டனர் சிலர். இது முற்றும் உண்மையன்று. ஏனெனின், 'ராத்ரே ஓ ப்ரபாதே' (இரவிலும் இளங் காலையிலும்), 'ஸ்வர்க்க ஹஇதே பிதாய்' (விண்ணுலகினின்று விடைபெறுதல்) இந்தக் கவிதைகளில் காதலுணர்வின் முழு வேகத்தையும் நாம் கண்டு மெய்சிலிர்க்கிறோம். ஆனால் இந்தக் கவிதைகளுடன் பிற்காலத்தில் அவர் எழுதியுள்ள கவிதைகளை ஒப்பிட்டுப் பார்த்தால் இளமை ரசனையில் ஆழமும் கவர்ச்சியும் துளியேனும் இல்லை என்பது புலனாகும். 'ஸ்தப்த ராதே ஏக திந்' (நள்ளென் இரவில் ஒரு நாள் நீ) அல்லது 'பாலோபாஷார் மூல்ய'

(காதலுக்குரிய மதிப்பு) என்ற கவிதைகளுக்கு நிகரானவை எம்மொழியிலும் இல்லையென்றே கூறிவிடலாம்.

படிப்படியாக உயரும் தீவிர உணர்வும் சிந்தனைச் செறிவும் ஒருபுறம் இருக்க, இறுதியில் அவர் புனைந்த கவிதைகளில் பரம ரகசியம் கவிந்த வாழ்க்கைப் பிரச்னை குறித்து அவரது நோக்குத் திரும்புவதைக் காணலாம். விசித்திரமும் வளமும் உடைய தாயினும் வங்க நாட்டுக் கவிதை குறுகிய எல்லைக்குள் வளர்ந்த தாகும். இந்த நிலையிலிருந்து அதை மீட்டு, அதற்கு உலகு பரந் ததும், புத்தம் புதியதுமான தன்மையைப் புகுத்திய பேருமை டாகுரையே சாரும். ஒரு வங்காளிக்குத் தரும் அபூர்வச் சுவையை அவருடைய கவிதை, அந்நியரான அமெரிக்கருக்கும் ஆங்கிலேயருக் கும் தருமென்பதில் ஐயமே இல்லை. டாகுரின் நீண்ட ஆயுட் காலத்தில் அகிலம் அணைக்கும் இந்த நோக்கும் சால்பும் பக்குவ மாகிக்கொண்டே வந்தன. மனிதனின் முயற்சிகளும், சாதனை களும் அவனுடைய அன்றாடத் தொழிலுடன் இணைந்து மனிதனின் உறவை ஸ்தாபிக்கும் பெருநோக்கை இக்கவிதைகளில் காணலாம். டாகுர் தம் இறுதி நாட்களில் அநுபவித்த உடல் வேதனையை எடுத் துரைக்கும் கவிதைகள் எவர் மனத்தையும் உலுக்கிவிடும். 'அவஸன்ன சேதனா' (சோர்வுறும் என் சிந்தையின்..) அல்லது 'ருண சோத' (கடன்தீர்த்தல்) என்ற கவிதைகளில் தென் படும் சொற்செட்டு அவரது இளவயதுக் கவிதைகளில் காணும் பகட்டிற்கு நேர்மாறானது. சொற் செட்டும் வரம்புக்கு உட்படும் தன்மையும் இருப்பதுடன் அவருடைய கடைசி ரசனைகளில் ஒரு நிறைவும் மண்டியிருந்தது. உலகம், வாழ்வு இவற்றுடன் அவரது உள்ளம் கொண்டிருந்த அமைதியையும் அவை வெளிப்படுத்தின. வேதனையும் துயரும் சூழ்ந்தது இவ்வுலகு; வாழ்வின் பின் சாவு நிழ லெனத் தொடர்கிறது. இவ்வளவு குறைகள் இருப்பினும் வாழ் விற்குரிய மதிப்பும் அர்த்தமும் போகவில்லை. 'ஏ ஜீவன ஸுந்த ரேர்' (அழகின் இனிமை மிகுந்த ஆசி தன்னை) அல்லது 'மதுமய ப்ருதிவிர் தூலி' (இனிமை மிக்கது இம்மண்ணின் புழுதி) என்ற கவிதை, இருள் கவிந்த மரணத்தினின்று நித்திய வாழ்வு வெற்றி யுடன் ஒளிரும் என்ற பேருண்மையைத்தான் காட்டுகிறது.

கவிஞனின் மனவளர்ச்சியை ஆராய்வது முடியுமானாலும் அது ஒரு கடினமான காரியமே. வாழ்க்கையின் பிற துறைகளில் சில நியதிகளுக்குக் கட்டுப்பட்ட நீடித்ததொரு உத்வேகத்தைக் காண்கிறோம். கவிதை விஷயத்தில் இந்த ஆவேசம் புரிபடாத தும் மர்மமுமான காரணங்களால் எழுந்து அடங்கிவிடுகிறது. கவிவாணர் சிலர் ஒப்பற்ற காவியங்களைத் தம் இளமையில்தான் புனைந்துள்ளனர். முதுமையின் பக்குவ தசைக்கு வரும்பொழுது

அவர்களுடைய ரசனையின் தரம் மட்டுப்பட்டுப் போகிறது. டாகுரும் இந்த விதிக்கு விலக்கானவரல்லர். இளமையில் அற்புதக் கவிதைகளைப் புனைந்த இவ்வாற்றல் முதுமைவரை அவருக்குக் குன்றாமல் இருந்தது. இதுவே அவர் எக்காலத்திலும் உதித்தவரான மகாகவிகளுள் ஒருவர் என்பதைத் தெளிவுபடுத்தும். இந்தச் சக்தியும் உணர்வும் அவருடைய சிறந்த பண்பாட்டிலிருந்து பெருகி வந்தவையாகும். இன்று பாரதப் பண்பாட்டில் காணும் பல வண்ண இழைகளைத் தம்மிடம் சேர்த்துக்கொண்டவர் டாகுர். பாரதத்துப் பலமுகமான வாழ்க்கையின் அழகினைத் தம் கவிதைகளில் கட்டிப்பிடித்த பெரும்புகழ் அவரையே அடையும்.

வட மொழி இலக்கியத்திலிருந்து அவர் ஏராளமாக மொண்டுகொண்டு, தம் வங்க மொழியைச் சொற்களாலும், புதுப் புது யாப்புக்களாலும் கருத்துக்களாலும் வளமுறச் செய்தார். வைணவக் கவிதைப் பண்பை ஸூபி மர்மவாதத்தோடு ஒன்று சேர்த்து நிறைவுபடுத்தினார். இடைக்காலத்தில் தோன்றிய சம்பிரதாயங்களையும் மரபுகளையும் பரிவுடன் நோக்கித் தம் கற்பனை செழிப்புற ஏற்றுக்கொண்டார். கூடவே, புறக்கணிக்கப்பட்ட நாட்டு மக்கள் வாழ்விலிருந்து தம் உணர்ச்சிக்கு ஊட்டம் தரும் விஷயங்களைத் திரட்டிக்கொண்டார். வங்க நாட்டுப்புறத்து மரபுகளும், மக்கள் மொழியில் காணும் உவமைகளும் அவருடைய கவிதைப் படாத்தில் ஊடு பாவாக இழையோடின. ஐரோப்பியச் சிந்தனை விழிகளும் பாவங்களும் வங்க இலக்கியத்தில் புகச் செய்தார். 'பலாகா' (கொக்கு) என்பதில் உள்ள பல பாட்டுக்களில் வரும் விறுவிறுப்பும் வீரியமும் ஐரோப்பியக் கவிதைப் பாணியிலிருந்து அவர் எடுத்துக்கொண்டவையே. எதுவும் நிலையற்றது: இது தொன்மையிலேயே மானிடன் கண்டறிந்த உண்மை. ஆனால் இதற்கு ஒரு புது வியாக்கியானம் தந்தார் டாகுர். பொருள் அனைத்தினும் மறைந்துள்ள ஒரு சலனத்தின் சின்னமே இது என்கிறார். பாரதத்தின் பண்டைய கலைச் செல்வமும், மொகல் யுகத்துப் பரந்த வழிகளும், வங்க நாட்டு மக்களின் எளிய வாழ்வில் காணும் அழகுணர்வும், இன்றைய ஐரோப்பா தந்த அறிவின் தீவிரமும் ஒன்றோடொன்று இழையும் ஒரு கலப்பிலிருந்தே டாகுரின் கவிதை உருவெடுத்ததாகும். எக்காலத்தையும், எந்தப் பண்பையும் அவர் ஏற்றவர். பல்வேறு விசித்திர பாவனைகளும், பலவண்ணமான பொருட் செறிவும் மிடைந்து இன்று அவருடைய காவியம் உலகு பரந்த தன்மையுடையதாயும் உள்ளத்தை ஈர்க்கும் வன்மைத்தாயும் பயிலப் பயிலச் சுவை பயப்பதாயும் அமைவதற்கு இதுவே காரணமாகும்.

ஹுமாயூன் கபீர்

கருணை மழைதனைப் பொழிந்திடுவேன்;
கற்சிறைதனைத் தகர்த்திடுவேன்;
உலகிடைத் திசைகெட்டுத் திரிந்திடுவேன்.
பித்தன்போலப் பாட்டிசைத்திடுவேன்.

சிகையினை விரித்து, மலரினைப் பறித்து
வானவில் வண்ணச் சிறகினை அடித்து
வெய்யவன் ஒளியினில்
உள்ளமதைக் கொட்டிடுவேன்.

குன்றுதோறும் பாய்ந்தே குதித்திடுவேன்;
தரணி எங்கணும் தாவிப் புரண்டிடுவேன்;
கலகலவென நகைத்தே
கைகொட்டிச் சுழன்றிடுவேன்.

சொற்கள் எத்தனை, பாக்கள் எத்தனை!
எண்ணிலா உணர்வுகள் எழுகின்றன,
என் உள்ளமதில் காண்!

எத்தனை இன்பம், எவ்வளவு ஆர்வம்
தோய்ந்துள என் உணர்வினிலே;
எனதுயிர் இன்று விழித்தெழுந்தது;
ஏனோ ஈதறியேன்!

தொலைவில் மாகடலின் அலையிசை
பாய்கிறது என் செவியுள்;
என்னைச் சூழ்ந்தே இந்த வெஞ்சிறை
இருப்பது ஏனடா?

தகர்த்திடு, தகர்த்திடு இதனை;
நொறுக்கிடு இதனை.
இன்குரல் எடுத்தே இயம்பின புட்குலமடா
வெய்யவன் ஒளியும் வந்ததடா!

(1882) —ப்ரபாத ஸங்கீத

## 2

## உயிர்

எழிலுடை இப்புவிதன்னில் மரித்தொழிய விரும்பேன்;
மாந்தரிடை வாழ்ந்திட வேண்டுவனே.
இந்த ஞாயிற்றின் ஒளியிலும், நறுமலர்க் காவிலும்
உயிர்பெய் என் இதயம் இடம் பெற்றிடுமோ!

மண்மிசை வாழ்வின் விளையாட்டுக்கள் நீடு நிகழ்வன;
பிரிவும் கூடலும், கண்துளியும் மென்னகையும்,
மக்களின் இன்பும் துன்பும் மிடைந்த
பாட்டினை இசைத்தே அழியாக் கோயில் அமைத்திடுவனே!
இன்றேல், வாழ்நாள்வரை உங்களிடையே
வேண்டுவன் நானே இடம் பெறவே.

உம்முடை உயர்வினுக்கே காலையும் மாலையும்
மலர்ந்திடுமே, என் புதுப்புது இசையின் இதழ்கள்.

இன்முகங்கொண்டே ஏற்பீர் இம்மலரை;
பின், இது வாடிடின் எறிந்திடுவீர், அந்தோ!

(நவம்பர், 1886) —கடி ஓ கோமல

## வீண் ஆசை

கதிரவன் மறைந்தான்;
கானகத்துள் பரவியது இருள்;
வானிடைத் தயங்கியது ஒளி.
அந்தியெனும் பசலை மெய்யாட்டி
கண்ணிதழ் தாழ்த்திப்
பகலின் பின்னே மெல்ல அணுகினள்.
பிரிவின் துயரம் துடிக்க மாலைத் தென்றல்
உலவியதோ இல்லையோ;
ஆராக் கண்பசியுடன்,
அவள் மைவிழி நோக்கி வினவினேன்:

'நீ எங்கே என்று தேடி அலைகின்றேனே;
எங்குள்ளாய் நீ?

உன்னிடம் கரந்துள்ள அந்த ஆரமுது
எங்குளதோ?'

இருள்படர் விசும்பில்,
தாரகை ஒன்று துணையின்றித் துடிப்பதுபோல்
பொன்னுலகின் எல்லையில், ஒளியின் மருமம்
அவள் விழியின் இருட்குவையுள்
உயிரின் சுடரெனத் திகழுமே;
நின்றேன் அதனை நோக்கியே.

ஆழங் காணு இவ்வேட்கைக் கடலுள்,
சேர்ந்தே மூழ்கின என் உயிரும் உளமும்
உன் விழிகளிடையே, முறுவல் மறைவினில்,
மென்மொழியின் அமுதப் பெருக்கினில்,
கருணையும் அமைதியும் தோய்ந்த
உன் திருமுகமதிலே நிலைகொண்டன என் கண்கள்.
'எங்ஙனம் அடைவது உன்னை?'
- இதுவே நான் இடும் ஓலம்.

வீண்தான் இந்த ஓலம், அந்தோ!
வீணே இவ்வேட்கையுமே.
இந்த மருமம், இந்த இன்பம், உன்பொருட்டல்ல;
பெற்றவரைக்கும் இவை நற்றிறமாம்.
அம்மெல்லிய சிரிப்பும், சுவைதரு மொழியும்
மையல் நோக்கும் காதலைக் காட்டுவனவே.

அவளை முழுவதும் பெறவோ ஆசை உனக்கு?
உன் துணிவுதான் என்னவோ?
தருவதற்கு உன்னிடம் யாது உளது?

இவ்வேட்கையைத் தணித்திடும்
மருந்தல்லள் அவள்; எனக்கு எம்முறையும் அல்லள்;
தானே வந்து, யாரும் அறியாவண்ணம்
இரவிலும் பகலிலும், நலத்திலும் இன்னலிலும்,
வாழ்விலும் சாவிலும் பொலிந்திடுவாள்,
பல்லிதழ்த் தாமரை மலரெனவே.

விருப்பெனும் கூர்வாள் கொண்டே நீ
புண்படுத்திக் கொள்வாயோ அவளை?
நுகர்ந்திடு, அவள் தண்ணிய நறுமையை;

கண்டிடு, அவள் அழகின் மலர்ச்சியை;
பருகிடு, அவள் தரும் இன்னமுதினை.

இரையாகுவாய்; அவள் அன்பிற்கு உன் காதலைத் தந்து.
கண்கொண்டு அவளை நோக்காதே!
உன் ஆசைக்கு எட்டுவதன்று அவள் உள்ளம்.
அமைதி நிலவும் அந்திப் பொழுது;
ஒலி அடங்கித் தோன்றும் உலகு.
கண்ணீரால் அவித்திடு இந்த வேட்கைக் கனலை;
மனையை நோக்கி மெல்ல நடந்திடு.

(28 நவம்பர், 1887) -மாநஸி

## 4

## மணற்றுப் பெண்

பொழுது போயிற்று, நீர் மொண்டிடச்
செல்வோம் வா'—
அன்றொரு நாள் அழைத்தது போல்
தொலைவில் கேட்டது ஒரு குரல்.
என்னுடன் நிழலென வந்த
அத்தோழி எங்கே இன்று?
அந்நீர்தான் எங்கேயோ?
அலைந்தது என் மனம்;
இவ்வீட்டில் தனி ஒருத்தி நான்.

'நீர் மொள்ளச் செல்வோம் வா' என்று
அவள் அழைத்தது போலவே மருள் கொண்டேன்.
இடுப்பில் சரிந்திடும் குடமும்; வளைந்தே செல்லும் வழியும்;
இடது புறத்தே வெறிச்சென்ற புல்வெளியும்;
வலத்தில் தொய்யும் மூங்கிற் புதரும்;
இருள்செறி குளத்து நீரில் மாலை வெயிலின் மெருகும்;
இருமருங்கிலும் நிழல்சேர் செடிகளும்;
ஆழப் புனலில் குடைந்தாடுதலும்;
கரையின் தோப்பில் செவிக்கின்பமாய்க்
கூவிடும் செங்கண் குயிலும்;
திரும்பும் வழியில் இருள்கவி மரத்திடைத்
திடுமெனத் தோன்றும் வெண்மதியமும் -
என் நினைவில் வரும் இவை யாவும்.

சுவரைப் பிளந்தே தலைநீட்டும் அரசங்கன்று;
காலை எழுந்ததும் அதைக் காண விரைவேன்.
புரையில் மின்னிடும், இரவில் பெய்த பனிமணிகள்;
அடுக்காய்ப் பூத்தே சிரிக்கும் காட்டலரி;
சுவர்மிசைப் படரும் பைந்தளிர்க்கொடிகள்;
அவற்றிடை விழித்திடும் நீலச் சிறுமலர்கள்;
சுவரின் இடுக்கில் கண்ணைச் செலுத்தித்
தன்னந்தனியே அமர்ந்திருப்பேன்;
என் காலடியில் சீரை ஆடை புரளும்.

இடையில் பரந்த வெளிகள் எத்தனையோ?
அவற்றின் முடிவில், நெடுந் தொலைவில்
வானுடன் இழையும் எனது ஊர்;
பச்சென்ற தலையுடன் நெட்டென நிற்கும்
பனைமரக்காடு அதன் ஒருபுறம்.
நீரின் கீற்றுத் தெள்ளத் தெரியும் ஏரி;
அங்கே கூடிடுவர் ஆயச் சிறுவர்;
மண்திணிந்த நெடுவழி எத்திசை நோக்கி
ஊர்ந்திடுமோ, யார் அறிவார்?

கல்லுருவாய்க் கடினம் பாய்ந்த இந்நகர்,
ஐயோ, வேதனையால் துடித்திடும் இப்பேதையைத்
தன் வன்மைப் பிடிக்குள் இறுக்குவதேனோ?
பற்றுதல் இல்லையே எனக்குச் சற்றும் இங்கே;
பறவையின் குரலும் பொழிலின் நிழலும்
வாய்த்திடுமோ இங்கு?
நாற்புறமும் என்னைச் சூழ்ந்தே நிற்பர் எவரோ;
அவர்தம் செவிக்கு எட்டுமோ என் சோகம்?
என் உள்ளமதைத் திறவேன்.
இங்கே அழுவதும் வீணே; இப்புலம்பல்
சுவரில் மோதித் திரும்பும் என்னிடமே.
நான் கண்ணீர் விடுவதன் காரணம் அறியார்;
ஏன் இது என்று வினவுவர் திகைத்தே;
'எதிலும் தென்பில்லை; குறைதான் யாதோ?
நாட்டுப் புறத்தாள் - இது இவள் தன்மைதானோ?
தம்மவரே இவளுக்கு அண்டையிலுள்ளோர்;
மூடிக்கிடப்பானேன் கண்ணை, மூலையிடுக்கில்?' என்பர்.
என் முகம் கூர்ந்து நோக்குவோர் சிலர்;
என்ன நோயோ என்று நுணுக்கம் காண்போர் சிலர்;
நல்லவளே இவள் என நவில்வோர் சிலர்;

அதுவும் சொல்லாதவர் வேறு பலர்.
விற்றிட வந்தேன் நல்லதொரு மலர்மாலை;
அதில் குற்றம் பார்த்தனரே தவிரக்
குழையும் அன்பினைத் தந்திலரே!

அத்தனை பேர் இருக்கத் தனிமையில் ஆழ்ந்தேன்;
பொழுது போகாதோ என்று புலம்பினேன்.
கல்மீது கல் எழுப்பி வாழும் புழுக்கள் இவர்கள்;
அன்புதான் ஏது? களிதரும் ஆட்டந்தான் ஏது?
'நீ எங்கே அம்மா, நீ எங்கே?
என்னை மறந்து எங்ஙனம் உள்ளாயோ?' -
புதுநிலாப் பூத்ததும், மாடியில் அமர்ந்தே
அதிசயக் கதைகள் யார் எனக்கு இனிச் சொல்வர்?
உள்ளம் வெம்பிக் கண் துயில் இழந்து
வெற்றுப் படுக்கையில் புரள்கின்றாளோ அவள்?
பனிமலர் கொய்து கோயில் சென்று
வேற்றகம் புகுந்த என் நலமதைக் கோரி
வரம் வேண்டுகிறாளோ சிவனாரிடம்?

மாடியில் இங்குந்தான்
மெல்லப் படர்கிறது, மதியின் ஒளி;
எட்டிப் பார்க்கிறது, எனது பள்ளியறைக்குள்ளும்.
என்னைக் காணத்தான் மயலுற்று
எங்கும் தேடி அது அலைகிறதோ?
என்னையே மறந்திடுவேன் சில கணம்;
வேதனை குமுறக் கதவைத் திறந்திடுவேன் வெளியேற.
கண்கள் பல, கூர்ந்தே என்னைச் சுற்றித் திரியும்;
சீறும் புயலென ஆக்கினைகள் செய்திடுவர்.
அன்பையும் தந்திலர்; நல்வெளிச்சமும் தந்திலர்;
இருளிடைத் தடுமாறி ஏங்குவது போலவே தோன்றும்.

குளத்தின் சீதப்புனலில் நான் மாள்வது நன்றாகும்.
குரல் தந்தென்னை அழைத்திடடீ தோழி,
'பொழுது போயிற்று, நீர் மொள்ளப் போவோம்' என்றே;
என்று தீர்ந்திடுமோ என் காலம்?
என்று முடிவுறுமோ இந்த விளையாட்டு?
என்னை வாட்டும் இந்த வெந்தழல்
என்று அவிந்திடுமோ குளிர் நீரில்; சொல்வீரே!

(23 மே, 1888) —மாநஸி

## 5

# வெளிப்படைக் காதல்

என்னை மூடியிருந்த நாணமதை ஏனோ கவர்ந்தாய்?
இதயக் கதவைத் திறந்து என்னை அம்பலமாக்கியதேனோ!
இறுதியில் என்னை வழியில் எறியத்தானோ?
என்னுள் நான் அமைதியுடன் இருந்து வந்தேன்;
வீட்டு வேலைகளிடையே எல்லாருடனும் இருந்தேன்.
பூசைக்கென மலர் பறித்திடச் செல்லுகையில்
நிழலெனத் தொடர்ந்தே என்னை வழிமறித்திட்டாய்.
கொடிபடர் பச்சை வேலியின் பக்கலிலே,
குளக்கரையோரம் அலரிப் புதர் அருகே,
குயில் கூவும் கிளைசெறி வாகைச் சோலையிலே,
இளங்காலை கூடிடுவர் தோழியர்; அச்சிரிப்பும் விளையாட்டும்
என் நெஞ்சினுள் அன்று இருந்ததை யார் அறிவார்!
இளவேனில் வந்ததும் மௌவல் பூத்திடுமே;
மாலை தொடுப்பவர், குடலையில் கொள்பவர்தம்
மேலாடை நழுவச் செய்தே துன்பம் தரும் தென்றலுமே;
மழைநாளில் அடர்முகிலும், அதை மெருகிடும் மின்னொளியும்;
காடும் கருமுகிலும் தொடுவானில் இருண்டே கூடுவதும்;
மாலைப்பொழுதில் முறுவல்செய் சிறுமுல்லை மலருவதுமாய்

இப்படி
ஆண்டுகள் சுழன்றன, வீட்டுப்பணியில் ஊன்றியே.
நாட்கள் ஓடின, இன்பத்திலும் துன்பத்திலும்.
இரவினைக் கனவில் கழிப்பேன்; காலம் சென்றது இவ்வாறு.
என்னுள் பதுங்கிய அக்காதலின் தூய உணர்வுகள்தாம்
எத்தனையோ!
இருள்செறி என் உள்ளமதில் அவை மணியென ஒளிருமே.
நன்கு விளங்கியது அந்த ஒளியில், என் மாசு;
இதயமதைப் பிளந்து பார்த்தால் சீ...சீ பெண் இதயம்;
நாணம் அச்சம் இவற்றால் நடுங்கும் மெல்லிய உள்ளம்
ஏங்கித் துடிப்பது தெரியும்.
ஒளிந்திடும் இவளை வெளியே இழுத்தது மிகக் கொடுமை.
இளவேனிலும் மாரியும் இன்றுமே வருகின்றன.
வளையும் சம்பகக் கிளையில் பொன்மலர் நெகிழுமே.
நிழல்கவி வழியே வருகின்றனர் தோழியர் மலர் கொய்திட;
என்றும் போலவே உள்ளனர் அவர்கள்;
சிரிப்பர், அழுவர், பணிசெய்வர்,

அன்பு கூர்வர், பூசனை பண்ணுவர்,
புனித விளக்கு இடுவர், நீர்மொள்ளச் செல்வர்.
கூர்ந்தே நோக்குவதில்லை அவர்கள், தம்நெஞ்சினுள்;
தகர்த்திடவில்லை அவர்கள் உள்ளத்தின் மறைவினை;
தம்மையே தாம் அறியாமல் வாழ்பவர் அவர்கள்.

நானோ, இன்று வழியில் வாடும் சிதைந்த மலரே!
கொழுதளிரின் தண்ணிழல் துறந்தே
புழுதியில் வாடுகின்றேன் நான்.
வேதனைக்கு இளகியும், காதலைத் தந்தும்
இன்பக் கூட்டினை மறைவில் எழுப்பியும்
எந்நாளும் அது நிலைக்குமென்றே நம்பியும்
வீண் செய்தேன் இந்த வாழ்!

அன்பனே! முகத்தினை ஏன் திருப்பிக் கொண்டாய்?
தவறாக எண்ணி வந்தாயோ? தவறாகக் காதல் கொண்டாயோ?
அதனை உணர்ந்துதான் திரும்பிப் போகின்றாயோ?
நாளையே நீ திரும்பிப் போய்விட முடியும்;
ஆனால் திரும்பவே எனக்கு வழியில்லை காண்!
புழுதியில் எறிந்தாய், என் உள்ளத்து மறைவினை.
ஆ, இதென்ன கொடுமை! நீ செய்வது பெருந்தவறு.
உன்பொருட்டு அத்தனை உள்ளங்கள் ஏங்கியே இருக்க,
தவறாக என்னை நீ நாடியது ஏனோ?
பாக்கியமற்ற இந்தப் பேதையின் நெஞ்சினுள்
இருப்பிடம் ஏன் கொண்டனையோ?
சற்றே எண்ணிப் பார்; என்னை எங்கே அழைத்து வந்தாய் நீ?
வம்புக்கிடம் தரும் இக்காதற் பிழைதனைக் காண
எத்தனை கண்கள் அலைகின்றன!
உடுக்கை இழந்தவள்போல, இவ்வுலகிடை
என்னைத் தவிக்க விட்டதும் ஏனோ!

(24 மே, 1888) —மாநஸி

6

# மேக தூதம்

கவிஞர்க்கு அரசே, மறந்து போன எந்த ஆண்டதனில்
புண்ணிய மிகு எந்த ஆடித்திங்கள் முதல்நாளன்று
மேகவிடுதூதெனும் இக்காவியம் புனைந்தீரோ?
முகிலென முழங்கும் இந்தச் செய்யுட் கவிதை,
பிரிவால் துடிக்கும் காதலர் மெலிவைப்
பண்ணமைந்த இதயத்தின் ஆழமதில்
அடக்கிக் கொண்டுளது.

உஞ்சைமாநகர் மாடமீது அந்நாள் எழுந்த
கருமுகில் கூட்டமும், மின்னலின் களிப்பும்,
வெறிகொள் காற்றின் கூத்தும், இடியின் குமுறலும் என்னே!
முகிலோடு முகில் மோதிடும் பேரமளி,
ஆயிரம் ஆண்டுகள் ஆழ்ந்து கிடந்த
கண்பனி மல்கும் பிரிவின் வேதனையை
ஒரு நாளிலேயே எழுப்பியது, ஐயோ!
பல நாள் மறைந்திருந்த கண்ணீர்ப் பெருக்கு,
காலத்தின் எல்லையைக் கடந்தே ஊர்ந்து
உம்முடைச் சீர்மலி பாக்களில் படிந்ததுவே!
இனியவரைப் பிரிந்து, தொலைவில் சென்றவர்,
வானிடைக் கருமுகில் நோக்கிக் கைகுவித்து
இன்பம் குலவும் தம் இல்லம் நினைந்து
இசைத்தனர் பிரிவின் கீதம்.

தொலைவில் எங்கோ சாளரத்தருகே
அணிகலமின்றித் தரைமிசைப் படுத்துப்
பிரிவால் நெஞ்சம் விரியக் கண்பனி சிந்தும்
இனியரை நோக்கித் தம் காதலுரையைப்
புது முகில்தன் இறகினில் வைத்தே
விடுத்திட நினைக்கின்றனரே!

பிரிவால் வாடிடும் காதல் மகளிரைத் தேடி
எங்கும் இரவு பகலாய்த் திரிந்தே
காதலர் சொன்ன அத்தனையும்,
மழைநாளில் பொங்கும் கங்கையின் புனல்
மாகடலுள் திசை தெரியாமல் கலந்திடுதல் போல்
உமது இனிய சந்தமதில் இழைத்தே
இதனை அனுப்பியவர்தாம் யாரோ?

பாறைச் சிறையுள் கிடக்கும் பனிவரை,
ஆடித் திங்களில் தம் விருப்பம் போல் அலையும்
கார்முகில்கள் பெருமூச்செறிவது கண்டு,
மலைக்குகைகளிலிருந்து வான் எங்கும்
ஏவிடும் மழை பொழிவது போல
இதனை அனுப்பியவர்தாம் யாரோ?
நிலத்திரா விருப்பமென மலையுச்சியில் ஏறி
எங்கும் சூழ்ந்தே வானில் இருளைப் பரப்பிடுவதுபோல்
இதனை அனுப்பியவர்தாம் யாரோ?
அதன் பின்னர், இனிமை மிகு
புதுமழைக் காலத்தின் தலைநாட்கள்
எத்தனைதாம் போயினவோ!

ஒவ்வொரு மாரி நாளும் உமது கவிதை
புதுமழைதன்னைப் பொழிந்தது காண்!
மேகங்கள் முழங்கி, புதுமைச் சந்தம் புனைந்தன.
உம் பாட்டின் ஒலியில் புதுநீர் விசையும் கலந்ததே.
காதலியைப் பிரிந்து பல நாள் துன்புறும் ஆடவர்
மழையிருள் மூடிய வானில், விண்மீன் ஒளிராக்
கார் இருள் அந்திப் பொழுதினில்,
மங்கிய விளக்கொளியில் அமர்ந்து
இப்பாக்களை மெல்ல முணுமுணுத்தே
தனிமையின் துயரை மாய்த்திட முயல்வர்.
உம் காவியத்தில் இத்தகையவர் குரல்கள்
கடல் ஒலியெனச் செவியினில் பாய்கின்றனவே!

பாரதத்தின் கீழ்த் திசையில், வங்க நாட்டின்
பசுமை வயலிடை வாழ்பவன் நான்.
ஜயதேவ கவியும் அங்கே ஒரு மழை நாள்
திசை முடிவில் பச்சிலைக் காடதனில்
கருநிழல் பரப்பிடும்
நிறைசூல் முகிலினைக் கண்டார்.

இருள் கவிந்த பகல் இன்று; கொட்டிடும் மழை;
கட்டுக்கு அடங்காத காற்று; அதன் பிடியில் சிக்கி
அலறும் காடு; மேகக் குவையைக் கிழித்துக்
கொடுஞ் சிரிப்பைக் காட்டும் மின்னலின் கூர்எயிறு.
மூடிய அறையினுள் தனிமையில், இந்த இருளில்
மேகத்தூதினைப் படிக்கின்றேன் நான்.
இல்லம் துறந்த எனதுள்ளம்

அடங்காத மேகப் புரவிமீது ஏறி
நாடுகள்தோறும் சுற்றித் திரிகிறது.

மலைச் சரிவிலுள்ள அம்மாஞ்சோலை எங்கே?
விந்தியக் குன்றின் கீழ்க் கூழைக்கற்கள் மீது
சுருங்கித் தெளிந்து நெளிந்தோடும்
அந்த ரேவை ஆறுதான் எங்கே?
வேத்திரவதிக் கரைமிசை நாவல் கனி சிந்திடும்
அக்காட்டு நிழலில் மறைந்துகொள்ளும்
தசார்ணம் என்ற அவ்வூர்தான் எங்கே?
ஏடவிழ் கைதை வேலி சூழ்ந்தது அவ்வூர்;
வழியோரத்து மரக் கிளையில் புறுக்கள்
மழைநாளில் தம் கூட்டினை அமைத்துக்
கூவிடும் அவ்விடந்தான் எங்கே?
முல்லை மலர்களிடையே, கானக மகளிர் உலவும்
அவ்வழகிய ஆற்றங்கரைதான் எங்கே?
அவர்கள் செவிகளில் ஆடும் மலர்க்கொத்து,
கன்னத்தின் வெம்மையால் வாடிடுமே.
புருவ வில்லினை வளைத்தறியா ஊர்ப்பெண்டிர்
அண்ணாந்து நோக்குவர் முகில்சூழ் விசும்பினை;
அக் கார் நிழல் அவர்கள் கண்களில் ஆடிடுமே.
தண்ணிய புதுமுகிலைக் காணக் கந்தருவ மகளிர்
மயலாகித் தம்மையே மறந்து
பாறைப் படிமீது தங்கும்
மையிருள் மலைக்குகைதான் எங்கே?

பெருங்காற்றுத் திடுமென எழுவதைக் கண்டே
தம் துகிலை உடலில் வளைத்தே, கண்விரிய அப் பேதையர்
காப்பிடம் விரைந்து,
'அம்மவோ, குன்றின் உச்சி பெயர்ந்து வருகிறதே' என்றே
[கூவுவர்:
அந்த அவந்திபுரிதான் எங்கே?
விந்திய மலையில் தோன்றிய அவ்வாறுதான் எங்கே?
உஞ்சைநகர் தன் எழிலை நிழலில் காணும்
அந்தச் சிப்பிரை நதிதான் எங்கே?
இரவு இரண்டாம் யாமம், காதலை மறந்து
மாளிகை மேற்புறம் உறங்கிடும் புறுக்கள்;
ஊசிமுனை புகாத இருள் நடுவே, மின்னல் வழிகாட்ட
அன்பனைக் குறியிடம் தேடிக் காரிகையர் அலையும்
பிரம்மாவர்த்தத்தின் அக்குருநாடுதான் எங்குளதோ?

பார்வதி புருவம் நெரிப்பதையும் பொருட்படுத்தாமல்
நுரைத்தெழும் சிரிப்புடன், கற்றைச் சடையனின்
சிகையில் திகழும் சீத நிலவொளியில் ஆடும்
இளமைத் துடிப்புடைய ஜன்னு முனிவன் மகள்
அந்தக் கனகல்தான் எங்கே?

இதுபோல் நாடுகள் எங்கும் முகில் உருவில்
என் உள்ளமதை மிதக்க விட்டே, கடைசியில்
ஆசை யாவும் சென்றடையும் அவ்வளகாபுரியை
திருமகள் விளையாடும் அந்நகரை - அடைந்தேன்.
பிரிவால் வாடும் உயிரினும் இனியவள் இருக்கும்
அந்த அமரர் உலகுக்கு என்னை இட்டுச் செல்ல
உம்மைத் தவிர எனக்கு வேறொருவர் உளரோ?

அழியா வசந்தம் நிலவிடும் அங்கே;
என்றுமே பூத்துக் குலுங்கும் பூங்கா உண்டு;
நிலவு இராத நாளே இல்லை அங்கே;
இந்திரநீலக் குன்றின்கீழ்ப் பொற்ருமரை மலர்ந்திடும்;
பொய்கைக் கரையில் ஒரு மணி மாடத்துள்
குறைவிலாச் செல்வமிருந்தும் ஒருத்தி
விழிநீர் சிந்துகிருள், விரக நோயால்!
திறந்த சாளரத்தின் வழியாய்
அவள் இருப்பது தெரியும்:
கீழ்த்திசை வான விளிம்பில்
மங்கிய பிறையின் கீற்றெனப்
பாய்தனில் துவள்கின்ருள் அவள்.

புலவரே, இந்த உள்ளத்தில் அழுந்திய துயரம்
உமது மந்திரச் சொற்களால்
இன்று விடுபெற்றது காண்!
பிரிவால் வாடும் பிரியை
அளவிலா எழிலுடன் தனிமையில்
இருள் என்னும் நீண்ட மாகடலை
நீந்துகிருள், கண்ணயர்வின்றி.
இந்த நுகர்வினை இழந்துவிடுகின்றேன் மீண்டும்;
நாற்புறமும் நிற்காமல் மழை கொட்டுகிறது;
தனிமை தரும் இருள் மெல்லப் படர்கிறது;
வெறு வெளியில் ஒரு நோக்குமின்றிக்
கடுங்காற்று ஓலம் இடுகிறது;

நள்ளிரவிடை உறக்கம் இழந்து
சிந்தனையில் ஆழ்கின்றேன்.
இந்தச் சாபனை தந்தவர் யாரோ?
ஏன் இந்தக் கொடுமை எல்லாம்?
அழுந்திய ஆசைகள் மேல் நோக்கி
ஏனோ எழுகின்றன இன்று!
தன்வழிச் செல்லக் காதலுக்குத்தான் உரிமை இல்லையா?
மானச ஏரியின் கரையில், பிரிவின் பஞ்சணைமீது புரள,
ஞாயிறு ஒளி செய்யாது, மணிச் சுடர் விடும்
அந்திப் பொழுதே சூழும் அந்த விந்தை நாட்டுக்கு
மனிதன் எவனாவது உடலுடன் போனதுண்டோ?

(20-21 மே, 1890) —மானஸி

# 7

## அகலியை

நீள் இரவு பகல் மண்மீது கல்லுருவாகி
வேள்வித் தழல் அவிந்து தவசியர் துறந்து
சூனியம் நிலவும் தபோவன நிழலிடை நீ,
எக்கனவு கண்டு காலங் கழித்தனை, அகலியையே!
பரந்த இம்மண்ணகமதில் ஒன்றி, ஓர் உடலாகி
மறைந்து இருந்தனையோ?
மாநில அன்னையவள் காட்டிய அன்பினை
எவ்வண்ணம் உணர்ந்தனை அச்சமயம்?

கல்லோடு நீயும் ஒரு கல்லாகித்
தெளிவிரா நினைவுடன் இருந்தனையோ?
வாழ்வினைப் புரக்கும் பொறுமை கொண்ட அவ்வன்னை
ஏற்ற இன்ப துன்பமதைத்
துயிலும் உன் உளமதில் கனவெனக் கண்டனையோ?
இரவும் பகலும் எண்ணிலா உயிர்க்கணம்
கூடுவது, ஊடுவது; அலைவது, அழுவது;
சிரிப்பது, சீறுவது; வழிச் செல்வோர் காலடியோசை
இவை யாவும் உனது சாப உறக்கந்தனைக் கலைத்து
உன் செவிக்குள் புகுந்தனவா?
கண்விழிப்பறியாக் கடுந் துயிலினின்று
உன்னை மெல்ல எழுப்பவில்லையா இவை?
சற்றும் உறங்கா மாநில அன்னையின் வேதனை

உன் உள்ளமதில் உறைத்ததோ?
வசந்த ருதுவில் புதுமாருதம் வீசுகையில்
தரணியின் மேனியில் எழும் புல்லரிப்பு
உனது கல்லுடலிலும் தோன்றியதோ?
வறட்சியை வென்றிட, உயிர் உணர்வு
பல உருவில் கிளர்ந்து எழுகையில்,
நீ உறையும் பாறையில் படர்ந்து
கரம்பென விளங்கும் உன் சாபமதை நீக்கிடவில்லையோ?
மனிதர் இல்லமதில் இரவு படர்கையில்,
மண்மகள் அயர்ந்தே தன் உடலைக் கிடத்துவாள்.
துன்பங்களை மறந்தே எண்ணிலா உயிர்களும்
உறங்கும்; வானகம் ஒன்றே விழித்திருக்கும்.
உயிரினம் உடல் தொய்ந்து, துயிலிடை மூச்செறிவது
தரணி அன்னையின் உளத்தை மகிழ்விக்கும்.
அன்னையின் மடியில் அவ்வுயிரினம் எழுப்பும்
இன்ப ஊறலை நீயும் பெற்றனையோ?
விந்தைமிகு தளிரும் மலரும் மிடைந்த
வண்ணக் கோலம் வரைந்த எழில்நிறை திரைமறைவில்
மௌனத்துடன், தம் மக்கள் இல்லந்தோறும்,
அவர்கள் வாழ்விலும் இளமையிலும்,
பொன்னும் நெல்லும் பரிந்து நல்கிடும்
அத்தாயின் மார்பிடை இத்தனை காலம்
பாறையில் குளிர்ந்தே, மறதியுள் மறைந்தே துயின்றனையோ?
எண்ணிலா உயிரினம் வாழ்வில் அலுப்புற்றே
புழுதியில் படுத்து ஊழிக்காலம் உறங்குகின்றனவே!
பகல் வெம்மையில் வாடிய மலர்கள்
நிமிடந்தோறும் அங்கே உதிர்கின்றன!
விண்வீழ் கொள்ளி எரிந்து கருகி
வீழ்கின்றன ஆங்கே.
தேய்ந்திடும் புகழும் பீடும்; களைப்புறு இன்பமும்
புண்ணுறுத் துயரும் அங்கே கலந்திடுமே.
அன்னை தன் தண்ணிய கையால்
பாபதாபத்தின் வடுவினை அறவே அழித்திடுவாள்.
அன்றெழுந்த தரணியின் இளங் கன்னிகையாய்
அழகும், எளிமையும், தூய்மையும் கொண்டே தோன்றினை.
வைகறைப் பொலிவுகொள் உலகினை நோக்கியே
வியப்பால் பேச்சிழந்தே நிற்கின்றாய் நீ.
உனது பாறை யுடல்மேல் இரவெல்லாம் உறைத்த
பனித்துளிகள், தாள்வரைப் புரளும்

உன் கார்நறுங் கூந்தலிடையே இப்போது
மகிழ்வுடன் மின்னுகின்றன.
மண்மிசைப் பல்லூழி பசுந்துகில் எனத் திகழ்ந்து,
பல் மழைப்பெருக்கால் செழித்தே விளங்கும்
இப்பாசிக்கொடி உன் உடலை மறைத்தது.
இன்று உன் தூய மேனியை வளைத்தே அதுதான்
அன்னை தந்த ஆடையென அன்பின் மென்மையுடன் திகழ்கிறது.
என்றும் நிலவும் இவ்வாழ்வு, வழக்கம்போல்
சிரிப்பதைக் காண்பாய்.
அதை நோக்கும் உன் விழிகள் இமைத்திட மறக்கின்றனவே!
மண்ணதனில் மறைந்த உன் அடிச்சுவடுகள்
தொலைவில் ஒழிந்த காலத்தின் எல்லையைத்
தனியே தேடுகின்றன.
நாற்றிசையிலிருந்தும் உலகின் பழைய நினைவுகள் யாவும்
விரைந்து வந்தன; உன் முன்னால் கூட்டம் கூடியே
வாழ்வின் பொலிவனைத்தும் வந்தன.
உன்னை அணுகியே அவை திடுக்கிட்டு இமையா விழியுடன்
முழு எழிலுடன் புது இளமையில் குளித்தெழுமே [நின்றன:
துகில் புனையா உன் திருவுருவம்!
மாநிற எழிலுடன் ஒரு காம்புதன்னில்,
குழவிப் பருவமும் இளமையும் சேர்ந்து
புண்ணியம் பொலியப் பூத்தவளே!
மறதியின் நீல வாரிதியிலிருந்து மீண்டாய் நீ;
தொன்மையாம் முதல் விடியல் என
இவ்வுலகினை நோக்கியே வியப்பு எய்தினை!
உன்னைக் காணும் இப்பேருலகம்
ஒன்றுமே பேசாமல் இருப்பதைக் காண்!
ஒருவர் முகம் ஒருவர் நோக்கி நிற்கும்
அவ்வழகுக் காட்சிதான் என்னே!
காணுதற்கரிய ஓர் இரகசியம் குடிகொண்ட நாட்டில்
புதுமை மிக்க ஓர் இன்ப நுகர்வு
உள்ளத்துடன் என்றுமே இணைவதைக் காண்பாய்.

(24-25 மே, 1890) —மானஸி

8

# பொன் ஓடம்

கார்முகில் உறுமுகிறது வானத்திலே;
பார்மிசை இறங்குகிறது பெருமழை.
வழியொன்றும் காணுமல் நான்
ஆற்றங்கரையில் தனியே உள்ளேன்.
அரி அரியாய்ச் சுமை சுமையாய்
அறுவடை ஆகி முடிந்தது;
கடுவிசையுடன் செல்கிறது
ஆற்றிலே, பெரு வெள்ளம்.
கதிர் அறுக்கையில் வந்தது மழை;
சிறு வயலிடை நின்றேன் தனியே.
நீர்த்திரள் வளைந்தே துளும்பியது நாற்புறமும்.

அக்கரை நோக்கினேன்: தொலைவில்
மைக்கருமை தோய் மரங்களின் இருள்;
விடியற் பொழுது, ஊரை மறைத்தது மழைத்திரை.
இக்கரையில் தனியே நின்றிருந்தேன்.
பாட்டிசைத்தே பொன்னோடம் செலுத்தும்
ஆள் அதோ யார் அவன்? பார்க்கையிலே
முன்னர் எங்கோ கண்டது போல் நினைவு வருகிறது;
பாய்விரி ஓடந்தனில் எதிலும் நாட்டமின்றிச்
செல்கின்ருனே அவன்!

இருகரையிலும் மோதி உடைகின்றன அலைகள்.
எங்கோ அவனைக் கண்டதுபோல் எனக்கு ஓர் நினைவு.
'ஓ! உன்னைத்தான்; நீ செல்லும் ஊர் எதுவோ?
ஓடத்தை இக்கரைக்கு ஒதுக்கு, சற்றே;
எங்கு வேண்டுமானாலும் சென்றிடு நீ;
உன் விருப்பம் போல் ஏதாகிலும் செய்திடு.
இன்முகம் தந்தே இக் கரைக்கு வந்து
ஏற்றிச் செல்வாய் என் பொன் தானியக் குவையை.
வேண்டிய அளவு ஏற்றிடு உன் ஓடமதில்.
இன்னும் இருக்கிறதா? இல்லை நிரம்பிவிட்டது;
ஆற்றங்கரையில் நான் மறந்து வைத்திருந்ததையும்
ஏற்றிவிட்டேன் ஓடத்தில்.
மனமிரங்கி என்னையும் அதில் ஏற்றிச் செல்.'

இடமில்லை, இடமில்லை சின்னஞ் சிறு அவ்வோடந்தனில்.
எனது பொன் தானியக் குவை அதில் நிரம்பிவிட்டது.
வானிடை மழை அடர்ந்தது; சுழன்றது மேகம்.
பாழும் ஆற்றங்கரையில் நின்றேன் தனியே;
உள்ளன யாவும் அந்தப் பொன்னோடம்
எடுத்துக்கொண்டு ஏகியதே!

(பெப்ரவரி-மார்ச், 1892) —ஸோநார் தரீ

## 9

## ஹிங் டிங் சட்

### கனத்திறம் உரைத்த காதை

கனவொன்று கண்டான் இரவில்,
அரசன் ஹபுசந்திரன்.
அதற்கு விளக்கம் கூறத் தெரியாமல்
விழித்தான் மந்திரி கபுசந்திரன்.

குரங்குகள் மூன்று தலைப்புறம் அமர்ந்தே
அரசனுக்குப் பேன் எடுப்பதும்;
அவன் தலையைச் சற்று அசைத்தாலும்
கன்னத்தில் பட்டென அறைவதும்;
முகத்தையும் கண்ணையும் நகத்தால் பிருண்டி
மறைவதும்; அங்கே ஒரு வேடன் தோன்றி,
'பறந்து போயிற்றே பறவை' என்றே
வாய் விட்டுக் கதறுவதும்; தன்முன் அரசனைக் கண்டு
அவனைத் தன் தோள்மீது ஏற்றி, ஒரு கழைமீது
தூக்கி வைப்பதும்; கீழே ஒரு கிழவி
இடிஇடியெனச் சிரித்தே, அரசன் காலை வருடுவதும்;
'இதென்ன தொந்தரை' என்றாலும் அவனை விடாததும்;
காலைத் தூக்கப் போனால் கால் எழாமல் இருப்பதும்;
பறவைபோல் அரசன் சிறகை அடிப்பதும்;
வேடன் வந்து 'ஹிங் டிங் சட்' என்று
அவன் காதில் சொல்லுவதுமாய் இருந்தது அக்கனவு.
கௌடப் புலவன் பாடிய விந்தைக் கனவின் கதையைப்
புண்ணியவான்கள் யாவரும் கேட்டு மகிழ்வர்.

இந்த அதிசயக் கனவினைக் கேட்டு ஹபுபுரம் எங்கும்
எவரும் உறங்கவில்லை; உணவு கொள்ளவுமில்லை.

நாட்டின் இளையவர் தொட்டு முதியவர் வரை
வாடிய முகமும், குனிந்த தலையுமாய்க்
கன்னத்தில் கைவைத்தே கிடந்தனர்.
விளையாட்டை மறந்தனர் சிறுவரெல்லாம்;
தம் நூலை மறந்தனர் புலவர் எவரும்;
இந்த விபரீதத்தால் மகளிர் யாவரும்
வாளா நின்றனர் வாயடைத்தே;
தீவிர சிந்தையால் தலை தாழ்ந்திட
வம்பளப்பின்றி அமர்ந்திருந்தனர்.
மண்ணுள் என்ன அதிசயம் தோன்றிடுமோ என்று
மண்ணை அகழ்வோர் ஏங்குவதுபோல்
யாவரும் அமர்ந்திருந்தனரே;
நடுநடுவே உயிர்த்துத் தேம்பி, அழுதே
பன்முறை 'ஹிங் டிங் சட்' என்றனரே.
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள்கேட்டு மகிழ்வர்.

நாலு திசையிலிருந்தே வந்தனர் திரளாய் மக்கள்:
கன்னோசி, காஞ்சி, மகதம், கோசலம்,
அயோத்தி, உஞ்சை எங்கிருந்தும் அறிவிற் சிறந்தோர்;
கவி காளிதாசனுக்கு மருமக்கள் முறையினர் அவர்;
உச்சிக் குடுமி ஆட, தலையை உருட்டி,
கட்டுக் கட்டாய்ச் சுவடிகளைப் புரட்டினர்.
மூளையெனும் செழும் வயலில்
ஆடும் பசுங்கதிரெனத் தோன்றியது அக்காட்சி.
வேதங்களைச் சிலரும், புராணங்களைச் சிலரும்,
இலக்கணங்களைச் சிலரும், நிகண்டுதனைச் சிலரும்
கனத்திறமதை உரைக்கத் துருவிப் பார்த்தனரே.
உரிய பொருளோ எதிலும் தென்படவில்லை!
சொற்கள் எழுப்பும் வலுத்த ஓசையே மிகுந்தது..
சும்மா இருப்பது சங்கடமாய் இருக்கவே,
இரைந்தனர் இடை இடையே
'ஹிங் டிங் சட்' என்று யாவருமே.
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வர்.

அரசன் ஹபுசந்திரன் நம்பிக்கை இழந்து கூறுவான்:
'மிலேச்சர் நாட்டில் மேதைகள் இருப்பர்;
எங்கிருப்பினும் அவர்களை அழைத்து வாருங்கள்;

இதற்குப் பொருள் அவர்கள் கூறுவரோ பார்ப்போம்.
சிவப்புச் சிகையும், நீலக்கண்ணும், புழுதிநிற நெற்றியுமாய்
யவன விற்பன்னர் வருகையை அறிவித்தது முரசு.
கத்தரித்து விட்ட கருநிறச் சட்டையினர்;
கோடை வெம்மையால் வெகுண்ட செம்முகத்தினர்.
முன்னுரை இன்றி அவர்கள் தம் கடிகாரத்தைக் காட்டி,
'இன்னும் பதினேழு நிமிடமே பாக்கி இருக்கிறது;
ஏதாவது இருந்தால் விரைவில் கூறுவீர்' என்றனர்.
அவையினர் ஒரு குரலில் 'ஹிங் டிங் சட்' என்று ஆர்த்தனரே.
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வர்.

கனவைப்பற்றிக் கேட்டதும் யவனர் முகம் கடுகடுத்தது;
கனலைக் கக்குவன போல் கண்கள் தோன்றின.
வலது கை முட்டியை ஓங்கித் தம் இடது கைக்குள் தட்டி,
'இதென்ன பரிகாசமா செய்கிறீர்கள்?' என்றனர் சினந்தே.

பரங்கிப் புலவர்மட்டும் முகத்தில் சிரிப்பு மலரத்
தம் மார்பில் கைவைத்து வணங்கியே கூறுவார்:
'அரசருக்கேற்ற கனவேதான் இது; ஐயமில்லை;
எவருமே காணக் கிடைக்காத அருமைக் கனவே!
அரசர் மூளையில் உதித்ததாயினும்
இஃதொரு விந்தைச் சொப்பனந்தான்;
இப்புதிர் அவிழ்க்க மிகுதியான பொருள் வேண்டும்.
பொக்கிஷத்தில் இதற்குத் திரவியம் உள்ளதோ?
என் மூளையைக் குழப்பிக்கொண்டாலும்
அரசரின் கனவுக்கு அர்த்தம் ஒன்றுமே இல்லை.
கபடமின்றி ஒன்று கூறுவேன்—"ஹிங் டிங் சட்"
என்னே இனிமை இம்மந்திரச் சொற்களில்!'—
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வர்.

சபையினர், 'மோசம் மோசம்' என்றனர்;
'யார் இவன், முட்டாள், நாத்திகப் பதர்!
கனவு வெறுங் கனவுதானே, வெறும் மூளைக் கலக்கமோ?
இதை எங்ஙனம் ஒப்புக்கொள்வோம்?

'உலகப் புகழுடைய நாங்கள் அறவழி நடப்போர்.
இக்கனவினை நாங்கள் அலட்சியம் செய்யோம். இதென்ன,

பட்டப்பகலில் கொள்ளை போல் இருக்கிறதே!' என்றனரே.
சினத்தால் விழிகள் சிவக்க அரசன் ஹபுசந்திரன்,
'இவர்களுக்கு ஏற்ற தண்டனை விதித்திடு, கபுசந்திரா!
முள்ளால் குத்தி இவர்களை வாட்டி எடுங்கள்.
நாய்க்கு இவர்களை உணவாகத் தாருங்கள்' என்றான்.
நிமிடங்கள் பதினேழு ஆயினவோ இல்லையோ,
மிலேச்சர்கள் மறைந்த இடமே தெரியவில்லை.
சபையினர் மிதந்தனர் ஆனந்தக் கடலில்.
தரும்மிகு நாட்டில் மீண்டும் அமைதி நிலவியது.
புலவர்கள் கண்ணையும் முகத்தையும் அசைத்து,
'ஹிங் டிங் சட்' என்று ஆர்த்தனர், உரக்க.
 அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
 கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வர்.

அவ்வேளையில் கௌடத்திலிருந்து வந்தான் ஒருவன்;
திறமையில் யவனரையும் மிஞ்சக் கூடியவன் அவன்.
உடலில் நல்ல உடுப்பும் இல்லை; வெட்கம் மீறியவன்;
வேட்டியின் மடிப்பு அவிழ்ந்தே புரள
அம்மொட்டைத் தலையன், வற்றல் மேனியன் வந்தான்.
குரலெடுத்து அவன் பேசும்போது சின்னஞ்சிறு
கருவியிலிருந்தா இப் பேரொலி என்று ஐயம் தோன்றும்!
வியப்பைத் தரும் ஒரு விந்தைப் புலவன் அவன்;
வணங்கவும் இல்லை, எவர் நலனையும் கேட்கவுமில்லை;
ஊரையும் பேரையும் கேட்டவுடன்,
அடிக்க வருவதுபோல அவன் மிடுக்குடன் சொல்வான்:
'எதைக் குறித்துச் சருச்சை? விஷயம் யாது?
தலைகீழாகப் புரட்டித் தேர்ந்த விடை பகர்வேன்.'
யாவரும் ஒருகுரலாய் 'ஹிங் டிங் சட்' என்றனரே.
கனவின் போக்கைக் கேட்டதுமே, ஆழ்ந்த முகத்துடன்
பேசவே எழுந்தான், அந்தக் கௌடப் புலவனும்:
'மிக்க எளிது இதன் பொருள், மிகத் தெளிவானது;
புது உருவில் உலவும் பழமைக் கருத்தே இது.
முக்கண்ணனின் மூன்று விழிகள்; முக்காலம், முக்குணம்;
தன்மையால் பேதம்; வன்மையால் பேதம்;
இருதன்மைத்து; தன்மையற்றது:
சுழற்சி, மாறுதல், உயிர்ச்சக்தி;
சக்தியும் சிவனும்; புருடன், பிரகிருதி;
ஆணவம், காந்தம், கவர்ச்சி;
தோற்றம், மறைவு; அருகுநுனியில் பெருகும்
உயிர் மின்சக்தி, தாரணை, பரமாசக்தி;

மூவகை ஆற்றல் மூவுருவில் பிரபஞ்சமதில் தெளிவு;
சுருங்கக் கூறின் ஹிங் டிங் சட்.'
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்த கவி பாட, புண்ணியவான்கள்கேட்டு மகிழ்வர்.

'ஆம், ஆம், ஆம்' என ஆர்த்தனர் நாற்புறமும்.
'தெளிவாகியது; தெளிவாகியது' என்றனர்.
புரியாமல் இருந்தது தண்ணீர்ப் பாடாய் விளங்கிற்று;
வெறு வான வெளியென வெளிச்சமாகியது.
ஹபுசந்திர அரசன் மகிழ்ச்சி மூச்செறிந்தான்.
சிரத்தினின்று தன் மகுடத்தைக் கழற்றி,
வற்றல் மேனியனன அந்த வங்க மகனின் தலையில் வைத்தான்.
அதன் பளுத் தாளாமல் அவன் மண்டை உடைந்திருக்குமோ?
பல நாட்கள் அலைத்த ஆகுலம் விலகியே ஓடியது.
குழம்பிய ஹபுநாடு பழைய நிலைக்கே வந்தது.
சிறுவர் விளையாடச் சென்றனர்; முதியவர்
புகை குடித்தனர்; கணமதில் மகளிர் முகம்
தென்புடன் விளங்கியது; தலைவலி விட்டது எங்கும்.
புரிந்துகொண்டனர் யாவரும் 'ஹிங் டிங் சட்'டின் கருத்தை.

அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக்
கௌடானந்தகவி பாட, புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வர்.

இக்கனவின் திறமதைக் கேட்ட யாவருமே
எல்லா மருளினின்றும் விடுபடுவர்.
இவ்வுலகினை உலகென்று எண்ணி ஏமாறுர்;
உண்மையைச் சட்டெனப் பொய்யெனக் கொள்வர்.
இருப்பது என்பது பொய்; இல்லாததே மெய்யெனத் தேறுவர்.
அவர்வரை இது வெட்ட வெளிச்சமான விஷயமே!
பிறர் எளிதில் சொல்லக் கூடியதை
அதற்கு ஒரு வாலைப் பின்னல் இணைத்துக் கூறுவார்.
எல்லோரும் வாரீர்; கொட்டாவி விடுவீர்;
கம்மென்று படுத்திடுவீரே!
நிச்சயமற்ற இவ்வாழ்வினிலே
ஒன்றுமட்டும் உண்மை, உண்மையே!
இவ்வுலகில் எதுவும் பொய்யே;
யாவும் மாயை; கனவொன்றே உண்மை;
மற்றவை மெய்யல்ல, மெய்யல்லவே!
அமிழ்தினும் இனிய இக்கனவின் கதையைக் கௌடானந்த
கவி பாடுவதைப் புண்ணியவான்கள் கேட்டு மகிழ்வீரே.

(30 மே, 1892) —ஸோநார் தரீ

## 10

# இரு பறவைகள்

கூட்டுப் பறவை இருந்தது தங்கக் கூட்டினுள்ளே;
காட்டுப் பறவை இருந்தது காட்டகத்திலே.
இரண்டும் எப்படியோ ஒரு நாள் சந்திக்க நேர்ந்தது;
கடவுள் என்ன நினைத்து அவ்வாறு செய்தாரோ?
காட்டுப் பறவை கூறியது: 'கூட்டுப் பறவையே,
நாம் இருவரும் காட்டுக்குப் போவோம் வா.'
கூட்டுப் பறவை மொழிந்தது: 'காட்டுப் புள்ளே! வா, நாம்
இந்தக் கூட்டில் இருப்போம் அமைதியுடன்.'
காட்டுப் பறவை கூறியது: 'வேண்டாம், வேண்டாம்.
நான் சிறைக்குள் எப்படி இருப்பேன்?'
கூட்டுப் பறவையோ, 'ஐயோ, காட்டில் நான்
எங்ஙனம் வாழ்வேன்' என்றது.
காட்டுப் பறவை வெளியிலிருந்தே காட்டைப்பற்றிய
கதையை எல்லாம் பாடியது, தீங்குரலில்.
கூட்டுப் பறவையோ தான் கற்ற பேச்சையெல்லாம்
கூட்டிலிருந்தே பொழிந்தது பார்!

இரண்டின் மொழிகளும் இருந்தன வெவ்வேறாய்;
காட்டுப் பறவை சொல்லியது: 'கூட்டுப் பறவையே!
அடவியின் கீதம் பாடு நீ பார்க்கலாம்.'
கூட்டுப் பறவை கூறியது: காட்டுப் புள்ளே!
கூட்டின் மழலையைக் கற்றிடு நீ.'
காட்டுப் புள், 'வேண்டவே வேண்டாம்!
கற்றுத் தரும் பேச்சை விரும்பேன் நான்' எனவும்,
கூட்டுப் பறவை, 'எனக்கு மட்டும் கானகத்திசை
எப்படித் தெரியும்?' என்றதுவே.
காட்டுப் பறவை கூறியது: 'நீல வானமதைப் பாராய்!
எங்காகிலும் தடை உண்டோ அங்கே?'
கூட்டுப் பறவை அதற்கு, 'கூட்டின் அழகினைப் பார்!
காப்பான இடம் இதைவிட வேறுண்டோ?' என்றது.
காட்டுப் புள்: 'மேகத்தின் நடுவே விருப்பம் போல
நாம் பறந்திடலாமே.'
கூட்டுப் பறவை: 'இனிமை தரும் இக்கூட்டினுள்
நீயும் வந்திரு.'
காட்டுப் பறவை: 'வேண்டாம், வேண்டாம்!
நான் பறந்திட இங்கு இடந்தான் ஏது?'

இவ்வாறு பறவை இரண்டும் ஒன்றை ஒன்று விரும்பியும்
ஒன்ருய்க் கூடிட முடியவில்லை.
கூட்டின் இடுக்கில் முகத்தைக் காட்டிக் காட்டி
இரண்டும் ஏங்கின; இவ்வளவே!
ஒன்றை ஒன்று புரிந்து கொள்ளவுமில்லை;
புரிய வைப்பதாயுமில்லை.
தனித் தனியே நின்று சிறகினை அடித்தே
'அருகில் வா' என்றே ஏங்கிக் கூவின.
காட்டுப் பறவை, 'வேண்டாம்; வேண்டாம்!
எப்பொழுதும் கூட்டுக் கதவு மூடிக் கிடக்குமே' என்றது.
கூட்டுப் பறவை ஏங்கி, 'ஐயோ!
நான் பறப்பதையும் மறந்தேனே' என்றது காண்!

(2 ஜூலை, 1892) —ஸோநார் தரீ

## 11
## 'போகவிடேன்'

வாயிலில் காத்திருக்கும் வண்டி; நடுப் பகல்வேளை.
இலையுதிர்கால வெயில் படிப்படியாக ஏறியது.
மனிதர் இராத ஊர்ப் பாதையில்
பறந்து சென்றது புழுதிக் காற்று.
தண்ணிய அரச மரத்து நிழலில்,
தன் கந்தலை விரித்துப் போட்டுச்
சோர்வுற்ற கிழப் பிச்சைக்காரி
வேனில் இரவு ஓய்ந்து ஒலியடங்கி
நாற்புறமும் பரவி இருப்பதை ஒப்பப்
படுத்து உறங்குகின்ருள்.
என் அகத்தில் மட்டும் இளைப்பைப் போக்கும்
அந்த இன்துயில்தான் ஏனோ இல்லை?

ஐப்பசியும் போயிற்று; பூஜை விடுமுறையும் தீர்ந்தது;
தொலைவில் உள்ள என் அலுவல் இடத்திற்கு
அன்றே நான் கிளம்பிப் போக வேண்டும்.
பணியாட்கள் இவ்வறைக்கும் அவ்வறைக்கும்
விரைகின்றனர்; சாமான் கட்டும் இரைச்சல்;
என் மனையாட்டியின் கண்களில் நீர் துளும்புகிறது;
பாறையெனப் பளுவொன்று அவள் இதயத்தை அழுத்துகிறது;
இருப்பினும், சற்று வாய்விட்டு அழவோ
அவளுக்கு ஓய்வில்லை; என்னை வழியனுப்பும்

மும்முரத்தில் இருந்தாள். எனக்கு வேண்டிய பொருள்
எத்தனை வைத்தும், அது போதுமென்றே
அவளுக்குப் படவில்லை.
'இதென்ன, இத்தனை தட்டு முட்டுப்
பாத்திரம் பண்டம், பெட்டி படுக்கை,
ஊர் கொண்ட சாமான்கள்!
எப்படி எடுத்துச் செல்வது?
சில விட்டுச் செல்லுவேன்;
சில எடுத்துப் போவேன்' என்றேன் நான்.
என் பேச்சைக் காதில் கொள்வார் யார்?
'என்னவோ, ஏதோ; இவற்றில் ஏதாவது
சமயத்தில் வேண்டியிருக்கும்;
புது இடம், சட்டென அகப்படாது;
ஊசிச் சம்பா அரிசி கொஞ்சம்;
பாக்கு வெற்றிலை; அந்தச் சட்டியில்
வெல்லக் கட்டி நாலைந்து; முற்றின தேங்காய் இரண்டு;
பானையில் சுத்தமான கடுகெண்ணெய்;
உலர்ந்த மாம்பழச் சாறு:
சீசாவில் பால் இரண்டு சேர்;
முக்கியமான மருந்துகள்;
இனிப்புப் பண்டம் கொஞ்சம்;
மறக்காமல் வழியில் அதைத் தின்றிடும்'
என்று அடுக்கிக்கொண்டே போனாள் அகமுடையாள்.

ஏதாவது சொன்னால் அவள் கேட்கப் போவதில்லை.
சாமான்கள் இப்படிக் குவிந்து வந்தன.
கடிகாரத்தை நோக்கினேன்:
பிறகு இனியாளின் பக்கம் திரும்பி மெல்லப் புகன்றேன்:
'ஆனால் வருகிறேன்....'
இதை நான் சொன்னதுமே, அவள்
முகத்தை வேறுபுறம் திருப்பித்
தலை குனியத் தலைப்பினால் கண்ணை மூடி,
அசுபம் போல் வெடித்து வரும்
அழுகையை மறைக்க முயன்றாள்.

வெளியே, வாயிலில் எங்கோ கவனமாய்,
நாலு வயது நிரம்பிய என் மகள் இருந்தாள்.
வேறு நாளாக இருந்தால்
இத்தனை நேரத்திலே குளித்து விட்டிருப்பாள்.
இரண்டு வாய் உணவு கொண்டதும்

தூக்கம் அவள் கண்ணை அழுத்தியிருக்கும்.
அன்று அவள் தாய்
அவளைச் சற்றும் கவனிக்கவில்லை.
இத்தனை நேரமாகியும் அவள் குளிக்கவுமில்லை;
உணவு கொள்ளவுமில்லை;
நிழல்போல் என்னிடமே ஒன்றிச்
சுற்றிக் கொண்டிருந்தாள்.
நான் விடை பெற்றுக்கொள்வதைப்
பேசாமலும், கண் கொட்டாமலும்
அவள் பார்த்துக்கொண்டிருந்தாள்.
களைத்துப் போய் -
என்ன நினைத்துக்கொண்டாளோ!-
வெளியே வாயிலண்டையில்
கம்மென்று உட்கார்ந்துவிட்டாள்.
'அம்மா, நான் போய் வருகிறேன்'
என்று நான் கூறும்பொழுது,
கண்களில் வேதனை படர, முகம் வாடி,
'உன்னை நான் போக விடேன்' என்றாள்.
இருந்த இடத்தை விட்டு அவள் நகரவும் இல்லை;
தன் உள்ளத்தில் ஊறும் அன்பின் உரிமையால்,
'உன்னை நான் போக விடேன்' என்றாள்;
இருப்பினும், நாழிகை ஆயிற்று; கடைசியில் அவள்
என்னைப் போகவிட வேண்டியதாயிற்று, ஐயோ!

அடீ, என் அசட்டு மகளே! நீ யார்?
இந்த மாதிரி பேச உனக்குச் சக்தி
எங்கிருந்து வந்தது? இவ்வாறு
பிகுவாய், 'போக விடமாட்டேன்' என்றாயே!

இந்தச் சராசரமதில், நீ உன் கையால்
யாரைத்தான் கட்டிப் பிடிக்க முடியும்?
செருக்குடைய பெண்ணே!
வீட்டு வாயிலில் இருந்து
உன் மெலிந்த உடலுடன்
உனது இளம் உள்ளத்தில்
ஊறும் நேசத்தை நம்பி
யாருடன் நீ போரிட முடியும்?
இவ்வுலகில், நடுக்கத்துடனேதான் -
வெட்கத்துடனேதான் - வேதனை படும் உள்ளத்திலிருந்து
வேண்டுதலை வெளிக்காட்ட முடியும்!

'போகவிட எனக்கு விருப்பமில்லை' என்று மட்டுமே நீ
சொல்ல முடியும். 'போக விடமாட்டேன்' என்று
யாரால் சொல்லத் தரம்!
இதோ, உன் குழந்தை வாயிலிருந்து
அன்பின் செருக்கால் வரும் பேச்சைக் கேட்கிறேன்.
குதுகலச் சிரிப்புடன் என் வாழ்வினைக்
கொள்ளை கொண்டாய் நீ.
அன்று தோல்வியுற்று, கண்ணீர் சோர
அழகிய ஓவியமென நின்றாய், வாயிற் படியில்.
அதைப் பார்த்து நான் பிரிந்து போகையில்
என் கண்களைத் துடைத்துக்கொண்டேன்.

போகும் வழியில், இரு மருங்கிலும்
வாவித் தடவயல்கள்;
கதிர்கள் தலை வணங்கப் பயிர்கள்
வெயிலில் காய்ந்தன.
மரங்கள் தம் நிழலைப் பார்த்து
நின்றன மெய்ம்மறந்து.
இலையுதிர்காலத்துக் கங்கை ஆற்றினில்
விசையாய்ப் பெருகியது வெள்ளம்.
ஒளிமிகுந்த மேகத்துண்டு ஒன்று
பாலை நிரம்பக் குடித்துக் கண்ணயரும்
பசுவின் இளங்கன்றென
நீல வானிடை உறங்கியது.
கண்ணைப் பறித்திடும் வெயில்.
பல்லூழியாய்க் களைத்தே தோன்றும்
திசை வரைப் பரந்த மாநிலமதைக் கண்டு
பெருமூச்செறிந்தேன் நான்.
வானும் வையமும் ஒரு பெருந்துயரிடை
ஆழ்ந்து விளங்குவது என்னே!

தொலைவில் நான் செல்லச் செல்ல
உள்ளமுருக்கும் ஒரு குரலே
என் செவியில் பாய்கின்றது:
'உன்னைப் போக விடேன்.'
இந்தப் புவியின் ஒரு மூலையிலிருந்து
நீல வானின் பல முனைகள் வரை
ஆதி அந்தமிரா அவ்வொலி பரவுகிறது,
'போக விடேன்' என்று.
முடிவிரா இந்தச் சராசரமதில்

விண்ணையும் மண்ணையும் ஊடுருவி,
'போகவிடேன்' என்கிறது ஓர் அழுகுரல்.
போகத்தானே வேண்டும்; அதனால் போகிறோம்.
தொன்மை தொட்டு இப்படியே போய்க்கொண்டிருக்கிறோம்.
ஊழிக் கடலினின்று வரும் படைப்பின் பெருக்கினில்
கண்கள் ஒளிர, கைகளை விரித்தே,
'போக விடேன், போக விடேன்' என்று கூவியே
கடுவேகமாய்ச் செல்கின்றனர் யாவரும்.
அகன்ற இவ்வுலகின் கரையில்
பெரிய ஓலத்தை எழுப்பிக்கொண்டே
சுருண்டு மடிந்திடும் அலையும்,
பின்னால் வரும் பேரலையை நோக்கிப்
'போக விடேன்' என்கிறது.

இக்குரல் எவர் செவியிலும் விழவில்லை;
இதற்கு மறு மொழியும் இல்லை.
நாலு திசையிலிருந்தும் ஓய்வின்றி இது
என் செவியில் பாய்கிறது.
இவ்வையத்தின் உள்ளத்தைத் துளைக்கும்
அக்குரல், என் மகளின் அழுகுரல் போல்
அறியாமை மிகுந்த இயற்கை விம்மிடும் குரலே!
நெடுங்காலம் அழுத்தமாய்ப் பற்றியதை
அது இழந்துவிடுகிறது.
இருப்பினும், அதன் பிடி சற்றும் தளர்வதில்லை.
அந்த நான்கு பிராயத்து மகளைப் போல்
அழியா அன்பின் செருக்கினால்
இயற்கை அன்னையும் உரக்கக் கூப்பிட்டு,
'போக விடேன்' என்கிறாள்.
வாடிய முகம்; நீர் துளும்பும் கண்கள்;
கணந்தோறும் அவளது செருக்குக் குலைகிறது -
இப்படிக் காட்சித் தருகின்றாள்.
இருப்பினும், அவளுக்குள்ள ஆசைமட்டும்
தோல்வி அடைவதே இல்லை.
எதிர்ப்புக்கிடையே, தோல்வி உற உறக் குரல் தழுதழுக்க,
'போக விட மாட்டேன்' என்றே
அவள் கூறுகின்றாள்:
'யார்மீது எனக்கு அன்போ
அவர் என்னை விட்டுத் தொலைவாய்ப் போய்விட முடியுமோ?
எனக்குள்ள ஆசையைப் போல்,
நெக்குருகும் அன்பினைப் போல்

வலிமை மிக்கது ஒன்றுண்டோ
இவ்வையத்தில்?' என்கிருள்.
அவள் அன்பால் இறுமாந்தே
தன் உள்ளத்தில் இருப்பதை உரைக்கின்ருள்,
'போக விடேன்' என்று.

உடனேயே நான் காண்பது என்ன?
அவள் ஆசைக்குரிய அவ்வருமைப் பொருள்
ஒரு மூச்சில் துகளெனப் பறந்தோடுகிறது.
கண்ணீர் வெள்ளம் பெருகுகிறது.
வேரற்ற மரமெனக் கர்வம் குலைந்து,
தலை கவிழ்ந்து விழுகின்ருள்.
இருப்பினும், அன்பு மட்டும்,
'விதி எப்பொழுதும் பொய்க்காது;
நான் அவனுக்கே உரியவள்;
இதை அறிவிக்கும் அடையாளம்
என்னிடம் உள்ளது' என்றே கூறுகிறது.
இதனுல் அன்ருே மெலிந்த இந்த உடற் கொடி
வலிமை மிக்க கூற்றுவன் முன்னுல்,
மார்பைத் தட்டி
'நமனே, நீ இல்லை' என்கிறது!
என்ன செருக்கான அறைகூவல்!
நமன் நகைக்கின்ருன்.
அவனது பிடிக்குள் நசுங்கும் இந்த அழியா அன்பு
வாழ்வினைச் சுற்றி வளைத்திடுமே!
துவளும் கண்களில், மென்பனிபோல்
வேதனை, திகில் இவற்றின் துடிப்பு.
ஆசையற்று மெலிவுறும் ஓர் அன்பு
அகிலமதைப் பனித்திரைக்குள்
மறைத்து விடுகிறது.

இன்று என் கண்முன் நிற்கும் இரு கைகள்
பயனற்ற தம் பிடிக்குள், அறிவின்மையால்
இவ்வுலகையே சேர்த்து அணைத்திட ஏங்குகின்றன.
சலசலத்தோடும் நீர்ப் பெருக்கில்
கண்மழை பொழியும் ஒரு மேகத்தின் மாயை
அசையா நிழலெனப் படிகின்றது.
மரங்களின் தளிர்ச் சிலிர்ப்பினில்
எத்தனை ஏக்கம் குமுறுவதைத்தான்

உணர்கின்றேன் இன்று!
வெறுப்புடன் பகலில் வீசும்
வெம்மைக் காற்று, உதிர்சருகுடன்
வீணே விளையாடுகிறது.
அரச மரத்தடியில் நிழல் நீண்டிடப்
பொழுதோ மெல்ல நகருகிறது.
இவ்வுலகின் மூலையெங்கும்
மண்ணில் எழும் பண்ணினைக்
காலப் பெண், வேய்ங்குழலில் இசைக்கின்றாள்.
அதற்குச் செவிசாய்த்து, மாநிலம்
பரந்த வயல் வெளியிலும்,
பளபளத்திடும் கங்கைக் கரையிலும்,
தலைவிரி கோலமாய், இயற்கை அன்னை
பசுநிற மேலாடையில் தன் மார்பை மறைத்தே
எதிலும் நாட்டமின்றி அமர்ந்துள்ளாள்.
நீல வானிடையே அவள் கண் பதிந்துவிட்டது;
பேச்சின்றி இருக்கின்றாள்;
வாயில் அருகே, வாய் பேசாது தன்னுள் புழுங்கும்
எனது நாலு வயது மகளைப் போன்றே
இயற்கையின் முகமும் இருப்பதைக் கண்டேன்!

(29 அக்டோபர், 1892) —ஸோனார் தரீ

## 12

## ஊசல்

உயிருடன் இன்றே நான் மரண விளையாட்டினை
இந்த நள்ளிரவினில் ஆடுவனே!

கனத்த மழை பொழிகிறது;
வானம் இருண்டு விளங்குகிறது;
நாற்புறமும் மழைத்தாரை ஓலமிடுவதைக் காண்!
அச்சம் தரும் இந்த ஆட்டத்தில்
வாழ்வின் இந்த அலை மோதலில்
புணைதனை மிதிக்க விட்டிடுவேன்.
இன்கனவை எழுப்பும் பாயை வெறுத்தே
வெளியேறுவேன் நள்ளிரவில்.

ஓ காற்றே, கடலே, வானே, சேர்ந்தே நீங்கள்
இன்று இழைத்திடும் இக்கோலாகலம் என்னே!
ஆடுக ஊசல், ஆடுகவே!

பேய்வளி நெட்டித் தள்ளியே
பின்புறமாய் ஓவென்று நகைக்கிறது -
எண்ணிலா யட்சச் சிறுவர்
எழுப்பிடும் குரலொலி போல்.
வானமும் வையமும் இழைந்தே இன்று
கொக்கரித்துக் கூவுகின்றன.

என்னுள் இவ்வுயிர் இன்று
விழித்தெழுந்துவிட்டது.
நின்று நின்று நடுக்கம் ஒன்று
என் இதயந்தன்னை அழுத்துகிறது.
இறுக்கும் ஒரு கொடுமைப் பிடியில்
இன்புறும் என் உள்ளம் குதிக்கிறது.
அச்சமும் ஆவலும் சேர்ந்தே என் உயிரினை
வருத்துகின்றன, உள்ளத்திலே.
அந்தோ, பஞ்சணைமீது அவளை நான்
கண்ணெனக் காத்துவந்தேன்.
வேதனை வந்திடுமோ, துயர்கொள்ள நேரிடுமோ என்றே
அல்லும் பகலும் ஆசையால் கட்டிக் காத்தேன் அவளை!
பஞ்சணையைப் பூவால் அணி செய்தேன்;
கதவைத் தாழிட்டு மறைவில் காத்துவந்தேன்,
என் ஆதரவிலேயே!
அன்பு மிக அவள் கண்ணிதழ்களில்
முத்தம் வைத்துக் குலவினேன்.
அவள் அருகிலே, என் தலை வைத்தே அழைத்தேன்;
கொஞ்சும் மென்மொழியால் அழைத்து
நிலவு பொழி இரவில், அவள் இன்பம்கொள்ளவே
பாட்டிசைத்தேன்.
இனியன யாவும் அவள் இரு கரங்களிலும்
அன்புடன் ஈந்தேன்.
இறுதியில், இன்பப் பள்ளியில் அலைவுற்று,
இவ்வுயிர் வெறியால் அயர்ந்தே வாடியது.
மெல்லத் தீண்டினும் இனி அவள் விழிப்புக் கொள்ளாள்;
மலர் மாலையும் கனத்தே விட்டது.
உறக்கமும் விழிப்பும் ஒன்றிப் போயின, இரவும் பகலும்.
உள்ளத்தில் சுவையிழந்த வெறுப்புணர்வு
இவ்வெறியின் விளைவால் மெல்லப் பரவியது.
இனிமையுடன் மேலும் இனிப்பினைக் கூட்டியதால்
இழந்தேனே என் இனியாளை நான்?
தேடியும் அவளைக் காணேனே!

பள்ளியறை விளக்கும் அணைந்து வந்தது;
ஆகுல நோக்குடன், தேடி அலைகின்றேன் எத்திசையும்.
வாடிடற் பூக்குவை எங்கும் கிடந்தது.
ஆழம் காணுக் கனவுக் கடலில் மூழ்கியே
யாரைத் தேடி அலைகின்றேனோ?

ஆகவே, இன்றே இந்த நள்ளிரவில் நான்
இப்புது விளையாட்டினை ஆட விரும்புகின்றேன்.
மரண ஊசலில், அதன் கயிற்றினைப் பற்றியே
அணித்தாக நாம் இருவரும் வீற்றிடுவோம்.
புயல் காற்று எள்ளி நகையாடும் நம்மை.
நானும், என் உயிரனையாளும் சேர்ந்து இந்த ஊசலில்
ஆடுவோம், நடு இரவில்;
ஆடுக ஊசல், ஆடுகவே!
ஆடுக ஊசல், ஆடுகவே!
இப் பெருங்கடலிடையே
எழுப்பிடு, பெரும் புயலே!

என் இனியாளைக் கண்டெடுத்தேன் மீண்டும்;
அவள் என் மடி நிரம்ப வீற்றிருந்தாள்;
இந்த ஊழி வெள்ளத்தின் பேரோலியே
என் இனியவளை எழுப்பியது.
இதயத்துள் மீண்டும் ஈதென்ன,
இரத்தம் துள்ளும் அலையோசை!
என் உள்ளத்திலும் புறத்திலும் ஒலித்திடும்
கோலாகலம் ஈதென்ன!
பறக்கிறது, என் கூந்தல் தொகுதி!
பறக்கிறது என் மேலாடை!
காற்று உந்தும் மலர்மாலை பறக்கிறது காண்!
ஒலித்திடும் கைவளையல்; குலுங்கிடும் கால் சதங்கை;
வெறிகொள் சந்தத்தில்
ஆடுக ஊசல், ஆடுகவே!

கடுங்காற்றே! கடுகியே வா;
என் உயிரினும் இனியவளை மறைத்திருக்கும்
முடியினைத் தூக்கி எறிந்திடுவாய்!
பறித்திடு, அந்த மாயத் துகிலினை;
ஆடுக ஊசல், ஆடுகவே!

என் உயிரனையாளும், நானும் நேருக்குநேர் நின்று
அச்சமும் நாணமும் இன்றி
இன்று ஒருவரை யொருவர் அறிந்திடுவோம்.
இதயத்துள் உணர்வினில் மயங்கியே
இருவரும் அணைவோமே.

ஆடுக ஊசல் ஆடுகவே!
கனவு கலைந்தே வெறிகொண்ட இருவர்
வெளியே வருகின்றனர் இன்று;
ஆடுக ஊசல்! ஆடுகவே!

(23 மார்ச்சு, 1893) —ஸோநார் தரீ

## 13

## விடை பெறுகையிலே சாபம்

**கசன்:** உத்தரவு தா, தேவயானி, தேவர் உலகுக்கு அடிமை நான் பயணமாகிறேன். எனது குருகுலவாசம் இன்றோடு முடிவடைகிறது. நான் கற்ற வித்தை, மேரு மலைமீது இலங்கும் கதிரவனின் அழியாக் கிரணமென என்றென்றும் என் உள்ளத்தில் மணிச் சுடர் விட வாழ்த்துக்கள் கூறுவாய்.

**தேவயானி:** உன் எண்ணம் நிறைவேறிவிட்டது. ஆசாரியரிடம் கிடைத்தற்கரிய வித்தையைக் கற்று அறிந்தாய். ஆயிரம் ஆண்டுகள் நீ செய்த கடின முயற்சி இன்று நிறைவான பயன் தந்துவிட்டது. வேறு எதையும் நீ விரும்பவில்லையா? நினைத்துப் பார்.

**கசன்:** வேறு எதுவுமில்லை.

**தேவ:** எதுவுமே இல்லையா? மீண்டும் ஒரு முறை நினைத்துப் பார். உன் இதயத்தின் ஆழம் வரை மூழ்கிப் பார். அதன் ஒரு மூலையில் ஆசை ஒன்று அருகு நுனியெனப் புலனுக்கு எட்டாமல் சிறிதாக இருப்பினும், குருத்து விட்டிருக்கவில்லையா?

**கசன்:** இன்று என் வாழ்வு அதன் முழுப் பயனைப் பெற்றது. ஒரு குறையோ, சூனியமோ இருக்க இடமில்லை, மாசற்ற மேனியளே!

**தேவ:** மூவுலகத்திலேயே உன்னைப் போல் சுகபுருஷன் உண்டோ! நிமிர்ந்த தலையுடன், கௌரவம் தாங்கி உன் தொழிலை

நோக்கி இந்திரன் உலகுக்குப் போ. அமரர் வாழும் நகரில் உன் வருகை குறித்து மகிழ்ச்சி ஆரவாரம் எழும். மங்கல சங்கங்கள் இனிமையாக விம்மிடும். தேவமகளிர் உன் சிரத்தில் நந்தன வனந்தனில் பறித்த மந்தார மென்மலர்களைச் சொரிவர். வானவர் வீதியில், குயிற்குரல் அரம்பையர் கின்னர மிதுனங்களுடன் மங்கள ஒலி எழுப்புவர். அந்தணனே! வேற்று இடமாகிய இப்பூதலத்தில் தம்மவருடன் இல்லாது உன் நாட்கள் கடின வித்தை பயில்வதில் கழிந்தன. உன் மனச் சோர்வைப் போக்கிட, அவ்வுலகத்து இனிமை நினைவுகளை எழுப்ப எவளுமே இல்லையா இங்கு? விருந்தென வந்தவனை எளிய இல்லத்தில் இடம் தந்து முடிந்தவரை உபசரித்தேன். எனது உள்ளத்தைப் பரிந்து நல்கினேன். அவ்வாறு இருந்தும் பொன்னுலகில் காணும் இன்பம் இங்கே எங்கிருந்து கிடைக்கும்? தேவமாதரின் குற்றமில்லா அழகு பொலியும் முகத்தை இங்கே காணத்தான் முடியுமோ? விருந்தினனாக வந்த உனக்குப் பிழை ஏதாவது நான் செய்திருக்கக் கூடும். பொன்னுலகை அடைந்ததும் அது உன் நினைவில் வராது என்று எண்ணுகிறேன்.

**கசன்:** மென் முறுவலுடன் அடிமைக்கு இன்முகம் தந்து இன்று வழியனுப்புவாய்.

**தேவ:** மென்முறுவல்...! ஐயோ, நண்பா, இது பொன்னுலகு அல்லவே! பூவினிடையே பூச்சி போல் இங்கே தணியா வேட்கை ஒன்றைத்தான் காண முடியும். கூம்பிய ஆம்பலைச் சுற்றிச் சுற்றி ஏமாற்றம் கொண்டு வண்டு அலைவதுபோல் உள்ளத்தின் புரைக்குள் விருப்பம் ஒன்று விரும்பிய பொருளுக்காக ஏங்குகிறது. இங்கு இன்பம் மறைந்து போனால் துயர்தரும் நினைவே தனிமையில் வீற்று நெடுமூச்சு எறியும். சிரிப்பும் குதூகலமும் இங்கே காண்பது அவ்வளவு எளிதன்று. நண்பா! போகலாம், நீ ஏன் வீணே பொழுது போக்குகிறாய்? தேவர்கள் உன்னை ஆவலாக எதிர்நோக்கியுள்ளனர்; ...ஆனால் போய்விடுகிறாயா? இரண்டு மொழி கூறியதும் எல்லாம் முடிந்தது போலத்தானா? ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இப்படித்தான் பிரிந்து விடை பெறுவதா?

**கசன்:** தேவயானி, தவறு என்ன செய்தேன் நான்?

**தேவ:** ஐயோ, இந்த அழகிய கானகம் இந்த ஆயிரம் ஆண்டுகள் தன் அருமை நிழலையும், தளிரின் மெல்லசைவையும், பறவைத் தீங்குரலையும் தந்தது. அதை நீ இப்படி விட்டுச்

செல்வது முறையோ? மரங்கள் எல்லாம் வாடித் துவள்வ தைக் காண்பாய். வனநிழல் இப்பிரிவின் துயர் தாளாமல் பின்னும் இருளடைவதைப் பார். காற்று அழுது ஓல மிடுகிறது. சருகுகள் உதிர்கின்றன. நீ மட்டும் போகிறாய். கடையிரவில் காணும் இன்பக் கனவென இதழில் புன்னகை அரும்பிடப் பிரிந்து செல்கிறாயே!

**கசன்:** தேவயானி, இவ்வனத்தை நான் அன்னையாகவே கருதி னேன். இங்கே அல்லவா எனக்குப் புது வாழ்வு தொடங்கி யது! இதை நான் வெறுத்திடுவேனா? என்றென்றும் இதன் நினைவு என் உள்ளம் விட்டு நீங்காது.

**தேவ:** இதோ, இந்த ஆலமரத்து அடியில், ஒவ்வொரு நாளும் பசு மந்தையை மேய்த்துவிட்டு, இங்கே பகல் வெயிலுக்கு ஒதுங்கிக் கண்ணயர்வாய் அல்லவா?..களைப்புடன் இருக்கும் உன் உடல்மீது அது, விருந்தோம்பும் தன் நீண்ட நிழலைப் பரப்பிடும். தன் தளிர்களை விசிறி மெல்லிய குரலிசையால் உன்னைக் கண்வளரச் செய்யுமே, நண்பா! போகிறாய் நீ... இரு...பழக்கமான இம்மரத்தின் கீழே கடைசியாகச் சிறிது நேரம் அமருவோம். இந்நிழலின் அன்பு கனிந்த இன் னுரையை உன்னுடன் கொண்டு செல்...இரண்டொரு நிமி டம் இருந்துவிட்டுப் போ. சற்றுத் தங்கிச் செல்வதால் நீ நோக்கிச் செல்லும் பொன்னுலகு எதையும் இழந்துவிடாது.

**கசன்:** விடை பெற்றுச் செல்லும்பொழுது நெடுநாள் பழகிய இந்த நண்பர்கள் புதுமையாகவே தோற்றுகின்றனர். ஓடிப்போகும் தம் தோழனைக் கட்டிப் பிடிக்க, தம் அன்பு, ஆர்வம் அனைத்தையும் பரப்பியே புதிய வலைக்குள் சிக்க வைக்கின்றனரே! எனக்கு விடுக்கும் கடைசி வேண்டுகோள் இவை. அபூர்வமான அழகுக் களஞ்சியம் இவை யாவும். மரங்களுக்கு மன்னா! வந்து அடைந்தவரை உபசரிக்கும் உண்மை நண்பனே, உன்னை வணங்குகின்றேன். வெயிலுக்கு உன் நிழலை எத்தனையோ பேர் வந்து அடைவார்கள், என் னைப் போலவே. மாணவர்கள் எண்ணிறந்தவர் உன் நிழற் பந்தலின் கீழ், புல்தரைமீது அமர்ந்து மௌனமாகத் தனிமையில் சிள்வண்டுகள் முரலும் ஒலிக்கிடையே பாடம் பயில்வர். காலையில் நீராடியதும் தாபதச் சிறுவர்கள், உன் கிளைகளில் தம் ஈர மரவுரி ஆடைகளை உலர்த்திடுவர். இளம் ஆயர் கூட்டம் பகற்பொழுதில் உன் இலைப்பரப்பின் கீழே வட்டு ஆடும். அச்சமயம், இந்தப் பழைய நண்பரின் ஞாபகம் உனக்கு வந்திடும்.

**தேவ:** நம் ஓமப் பசுவை நினைவில் வைத்துக்கொள். அமுதம் போன்ற அதன் பாலை அருந்திவிட்டு அதை மறந்து விடாதே!

**கசன்:** அமிழ்தினும் இனியது அதன் பால்., அந்தப் பசுவைப் பார்த்தாலே கொடிய வினையும் தீருமே..தாய் போன்றது. - அமைதியின் திருவுருவம். இன்னமுதைப் பொழிந்திடும் ஒளிர் முகம் உள்ளது..களைப்பு என்றுகூடப் பாராமல் அதற் குத் தொண்டு செய்தேன். இருள் சூழ்ந்த கானகத்துள் பச் சென்ற புல் தரைகளிலும், தெள்ளிய ஓடைக் கரையிலும், பகலெல்லாம் மேய்த்துத் திரிவேன். விருப்பம் கொண்ட வரை அளவற்ற புல்லை மேய்ந்து தன் மிருதுவான உடலில் அலுப்புத் தோன்றியதும், மரத்து நிழலில் படுத்து அது அசை போட்டுக்கொண் டிருக்குமே!...இடை இடையே தன் பெரிய விழிகளால் என்னை அது நன்றி கனிய நோக்கி, என் உடலினைத் தன் நாவால் நக்கித் தருமே. அந்தத் தண்ணிய காட்சி, தீக்கொழுந்து போன்ற அதன் மேனிப் பசப்பு என் நெஞ்சை விட்டு அகலாதே.

**தேவ:** கலகல சலசலவென ஓடும் நம் சிற்ருறு வேணுமதியை நினைவில் கொள்.

**கசன்:** அதை எங்ஙனம் மறப்பேன்! ஆ, வேணுமதி! பூத்த புதர்களை அலப்பியே இன்குரலுடன், களியிசை எழுப்பித் துள்ளும் நீர்த்திரளுடன் தொண்டு புரியும் ஊர் மடந்தை யென வருவாள்; எப்போதும் தூய்மையைப் பரப்பும் என் துணைவியாயிற்றே அவள்!

**தேவ:** ஐயோ நண்பா, இந்த வேற்று நாட்டில் இவளன்றி உனக்கு வேறு துணை எவளுமே இல்லையா? புது இடந்தனில் வந்ததும் உன் துயரை மறந்திடச் செய்ய அல்லும் பகலும் ஆதரவுடன் பணியாற்றிய ஒருத்தி இல்லையா?....ஐயோ! இதென்ன வீண் ஆசை எனக்கு?

**கசன்:** என் வாழ்வுடன் என்றென்றும் அவளுடைய பெயர் கலந்துவிட்டதே!

**தேவ:** ஆமாம், நினைவு வருகிறது: நீ முதல்முதல் இங்கே அந் தண இளைஞனய் வந்தபொழுது அருண வண்ணமான உன் மேனிப் பொலிவும், சந்தனம் திமிர்ந்த நெற்றியும், கழுத் தில் மலர் மாலையும், அரையில் பட்டுத் துகிலும், இதழ்க் கடையில் குழிழ்ச் சிரிப்புமாய்ப் பூங்கா இடையே என் முன் தோன்றினய்.

**கசன்:** *நீ அப்பொழுதுதான் குளித்துவிட்டு, ஈரம் தோய்ந்த உன் நீண்ட கருங் கூந்தலை விரித்து விட்டிருந்தாய். இடையில் வெள்ளைக்கலை:ஒளியில் மூழ்கி எழுந்த விடியற்பாவையெனக் கையில் குடலையுடன் தனியாகப் பூசனைக்கு மலர் கொய்து கொண்டிருந்தாய்! அச்சமயம் நான் உன்னை மெல்ல அணுகி, 'உனக்கேன் சிரமம்? கட்டளையிடு; மலர் பறித்துத் தருவேன், தேவி' என்றேன்.*

**தேவ:** *நான் வியப்புற்று, அக்கணமே உன்னை யாரெனத் தெரிந்துகொள்ள விரும்பினேன். நீ அதற்கு, 'உன் வாயிலில் வந்து காத்திருப்பவன் உன் தந்தையிடம் மாணவனாக அமர்ந்து வித்தை பயில வந்தவன்..பிருகஸ்பதியின் மகன் நான்' என்று மொழிந்தாய்.*

**கசன்:** *எனக்கு அப்பொழுது, ஒரு வேளை அசுர குரு பொன்னுலகிலிருந்து வரும் அந்தணனை ஏற்காமல் போய்விடுவாரோ என்ற திகில் மூண்டது.*

**தேவ:** *நான் அவரை அண்டினேன். மெல்ல முறுவல் செய்து தந்தையிடம், 'அப்பா, உங்கள் காலடியில் வணங்கி ஒன்று விரும்புகிறேன்' என்றேன். அன்பாகவே அவரும் என்னைத் தம் பக்கத்தில் அமர்த்தித் தலையை மெல்ல நீவிக் கனிவுடன், 'உனக்கு இல்லையென்று சொல்லுவனோ' என்றார். 'பிருகஸ்பதியின் மகன் உங்கள் வாயிலில் காத்திருக்கிறான். அவனை நீங்கள் சீடனாகக் கொள்ள வேண்டும்..இதுவே என் கோரிக்கை' என்றேன். அது நடந்து இன்று எத்தனை நாளாகின்றன! இருப்பினும் நேற்று நடந்ததுபோலவே தோற்றுகிறது.*

**கசன்:** *பொறாமையால் மூன்று முறை அசுரர்கள் என்னைக் கொல்ல முயன்றனர். தேவி, நீதான் கருணை கூர்ந்து எனக்கு உயிர் அளித்தாய். இந்த நன்றி என் உள்ளத்தில் என்றென்றும் இருந்திடும்!*

**தேவ:** *செய்ந்நன்றி! மறந்துவிடு..அதனால் வருத்தமில்லை ... என்ன அப்படி உதவி செய்துவிட்டேன் நான்? அதற்குக் கைம்மாறு எதையும் விரும்பவில்லை. இதைத் தவிர இன்பம் தரும் நினைவு வேறெதுவும் உன் மனத்துள் எழவில்லையா? வெளியிலும் உள்ளத்திலும் ஒரு நாளாவது களிப்பின் பாட்டு ஒலித்திடவில்லையா? ஒரு நாளாவது...*

**கசன்:** *தோழி! இராமல் போவானேன்? அது வெளிக்குத் தெரியாது. உள்ளத்தில் இரத்தத்துடன் கலந்துவிட்ட ஒன்றை வெளியே எப்படிக் காட்ட முடியும்?*

**தேவ:** *தெரியும், அன்பனே! என் உள்ளத்தின் ஒளியைக்கொண்டு எத்தனை தரம் சட்டென உன் இதயத்தைக் கண்டிருக்கிறேன்! அது கண்ணிமைக்கும் நேரந்தான்..அதனாலேயே இன்று பெண் மனத்துக்குரிய இந்த அகந்தை. ஆனால்... இரு..இரு, போகாதே! புகழால் கௌரவமே தவிர இன்பம் இல்லை. இங்கே வேணுமதிக் கரையில் நாம் இருவரும் புதியதொரு பொன்னுடையைப் படைத்திடுவோம். தனிமை மிக்க இவ்வன நிழலில் இணைந்தே ஓர் உயிராய் உலகத்தை மறந்தே, ஒருவருக்கென ஒருவர் வாழ்ந்திடுவோம், அன்பனே! நெஞ்சிலுள்ள இரகசியத்தை நான் அறிவேன்.*

**கசன்:** *இல்லை, இல்லை, தேவயானி!*

**தேவ:** *இல்லை! பொய்; வஞ்சனை! உன் உள்ளத்தைப் புரிந்து கொள்ளவில்லையா? காதல், உள்ளத்தில் உறைவதென்பதை நான் அறியேனா என்ன? தளிர்க் குவையுள் மறைந்து கொண்டாலும் மலரை அதன் இன்மணம் காட்டிக் கொடுத்துவிடாதோ? எத்தனை நாட்கள் இன்று போலவே என் முகத்தை நீ நோக்கியதுண்டு; என் குரலை இதுபோல் உன் செவி கேட்டிருக்கிறது; உன் உடல், உள்ளம் இரண்டும் துடித்துள்ளன! வயிரம், சற்று அசைந்தாலும் பலவித ஒளியுடன் பூரித்திடுமே. இவற்றை நான் பார்க்கவில்லையா? நீ என்னிடம் அகப்பட்டுக்கொண்டாய், அன்பனே! இந்தத் தளையை அறுக்க உன்னால் முடியாது. இந்திரன் இனிமேல் உன் இந்திரன் அல்ல (அவனுக்கு நீ அடங்கிய ஆளல்ல). அந்தி வேளையில் வேணுமதியின் கரையில், மலர்வனத்தில் நீ படித்துக்கொண் டிருக்கையில் அபூர்வ இன்பத்தால் உன் இதயம் சிலிர்த்திடவில்லையா? மலரின் மணமென இதயத்திலிருந்து பொங்கி வரும் ஓர் உணர்வு அந்தி வானமெங்கும் பரவி நிற்கவில்லையா? சொல்..பூ மலிந்த புதர்களின் இனிய நினைவு மனத்துள் இருக்கட்டும்..நன்றியறிதல் எல்லாம் தொலைவில் நிற்கட்டும்..நண்பனே, இங்கே ஒருத்தி பாடியபொழுது, அதைக் கேட்டு உனக்குக் களி பொங்கவில்லையா? அவள் வண்ணச் சேலை அணிந்து என்றைக்காவது வருகையில், அதைக் கண்டு நீ வாயாரப் புகழ்ந்ததில்லையா? உள்ளமும் கண்ணும் குளிர்ந்து, 'எத்தனை எழிலுடன் விளங்குகிறாய் இன்று நீ இவ்வுலகில்!' என்றாயே. தேவர் உலகிற்குச் செல்லும் நீ ஓய்ந்த வேளையில் அதை நினைவு கூர்ந்திடு..திசையெங்கும் இருண்ட மழை மேகங்கள் எத்தனை நாள் இவ்வனத்தில் பெய்ய இறங்கி*

உள்ளன! ஓயாமல் கொட்டும் அம்மழையில், வேலை இராத பொழுது கற்பனையில் தோய்ந்துவிடுமே உள்ளம்! திடுமென எத்தனை தரம், உல்லாச அலையுடன் கட்டுக்கு அடங்காத யௌவனத்தின் உணர்வு கிளர்ந்தெழும். இசைத்தெழும் அவ்வுணர்வு வேகத்தில் காடு, பூங்கா எங்கும் செடிகளிலும் கொடிகளிலும் அலையென ஆனந்தவெள்ளம் பெருகிடுமே! நினைத்துப் பார்; எத்தனை விடியல் வேளைகள், எத்தனை நிலவு மகிழ்விரித்த இரவுகள்; பூமணம் கமழும் எத்தனை இருள் இரவுகள், இந்த வனந்தனில் இன்ப துன்பம் கலந்திட உன் வாழ்விலே தோன்றியுள்ளன! அவற்றிடையே மனத்துள் ஓவியமென என்றென்றும் பதிந்துவிடக்கூடிய ஒரு விடியல் வேளையோ, ஓர் அந்திப் பொழுதோ, இன்பம் குலவிய இரவோ, உள்ளத்தின் துள்ளலோ, பேதை ஒருத்தியின் முகமோ, உன் ஞாபகத்துக்கு வரவில்லையா? வெறும் கைம்மாறுதானா? அழகோ, அன்போ நிரம்பிய எதுவுமே இல்லையா?

**கசன்:** தூய முறுவல் கொண்டவளே! இவ்வாயிரம் ஆண்டுகள் அசுரர் நகரில் இதற்கோ கடின சாதனை புரிந்தேன்?

**தேவ:** சாதனைகள் புரிந்தாய்; உண்மை. ஒரு வித்தைக்காகவோ இவ்வுலகில் இப்படித் துன்பத்தை ஏற்கின்றனர்! ஒரு மெல்லியலாளைக் குறித்து எவருமே கடுந் தவம் புரிந்ததில்லையா? ஊண் இன்றி, வானில் எரியும் கதிரவனைக் கண்ணால் நோக்கி, தபதியை மனைவியாகப் பெறச் சம்வரணன் கடுஞ் சாதனை புரியவில்லையா? ஐயோ, வித்தை மட்டுந்தானா பெறுதற்கரிய பொருள்? காதல், இந்தப் புவியில் நினைத்தவுடன் கிட்டிவிடுமா? ஆயிரம் வருடங்கள் எதற்காகச் சாதனை புரிந்தாயோ அந்தச் செல்வம் யாதென உனக்குத் தெரியாது. வித்தை ஒரு பக்கம், நான் ஒரு பக்கம்...ஒரு சமயம் அதன்மீதும், ஒரு சமயம் என்மீதும் அடங்காத உற்சாகம் கொள்வாயே! ஊசலாடும் இவ்விரு வகைப் போக்கினை நீ உள்ளத்தில் மறைத்தே போற்றி வந்தாய். நாம் ஒருவரை யொருவர் தெரிந்துகொள்ள வேண்டிய நாள் இன்று நெருங்கிவிட்டது. ஏற்பாய், நண்பனே; யாரை உள்ளத்துள் விரும்பினாயோ அவளை ஏற்றிடு. துணிவுடன், 'நான் கற்ற வித்தையால் எப் பயனுமில்லை..புகழிலும் இன்பமில்லை..தேவயானி, நீயே என் வாழ்வின் பயன் யாவும்..உன்னையே விரும்புகின்றேன்' என்று சொல். இதனால் ஒன்றும் மூழ்கிப் போய்விடாது;

இதில் வெட்கப்பட என்ன இருக்கிறது? ஆயிரம் ஆண்டுகளாயினும் நட்புடன் நிலவுவது பெண் உள்ளம். சாதனையால் கைகூடும் அழியாச் செல்வம் அது.

**கசன்:** தேவராஜனின் முன்பு, இறந்தோரை உயிர்ப்பிக்கும் வித்தையைக் கற்றுப் பொன்னுலகிற்குத் திரும்புவதாக உறுதி கூறிவந்தேன். அதனாலேயே இவ்வீட்டிம் நான் வந்தேன். அந்தப் பிரதிக்ஞை எப்பொழுதும் என் மனத்துள் தலை தூக்குகிறது..அந்தப் பிரதிக்ஞை நிறைவேறிவிட்டது.. இன்று என் வாழ்வு அதன் பயனைக் கண்டது. இன்று தன்னலம் எனக்குச் சிறிதும் இல்லை.

**தேவ:** சே..நீ பொய்யன்! வெறும் வித்தைதானா நீ பெற விரும்பியது? குருவின் வீட்டில் வெறும் மாணவனாக இருந்து அல்லும் பகலும் தனிமையில் சாத்திரம் கற்கவா வந்தாய் நீ? வேறு ஒன்றை உன் கண் நாடவில்லையா? படிக்கும் இடத்தை விட்டு எதற்காக வனமெங்கும் நறுமலருக்காகத் திரிந்தாய்? அம்மலர்களைத் தொடுத்து மென்னகை முகத்தில் தவழ எனக்கு அளிக்கவில்லையா நீ? இதுவோ நீ புரிந்த கடின சாதனை? மாணாக்கனுக்குரிய நடத்தையாகுமா இது? இளங்காலையில் நீ படிப்பில் ஈடுபட்டிருப்பாய். நான் வெற்றுக் குடலையுடன் உன் அருகில் வந்து நிற்பேன் புன்சிரிப்புடன்..நீ சுவடியைப் போட்டுவிட்டு எழுந்து வந்து பனிதோய்ந்த மலர்களைக் கொணர்ந்து என்னை அருச்சிக்கவில்லையா? பகற்பொழுதில் மரப் பாத்திகளில் நீர் சொரிந்து கொண் டிருப்பேன்; நான் களைப்புறுவதைக் கண்டு கருணை கூர்ந்து என் பணியைச் செய்ய எதற்காக வந்தாயோ..? பாடத்தையும் விட்டு நான் வளர்க்கும் பெண்மானைக் கொஞ்சிட வருவாயே; அது ஏன்? பொன்னுலகில் நீ கற்ற இசைக் கலையை மாலைப் பொழுதில், ஆற்றங்கரையில் இருள் மெல்லக் கவிந்து வர நிச்சப்தம் நிலவும் வேளையில் காதல் ஊறும் கண்களால் என்னையே ஊடுருவிப் பார்த்து நீ பாடிக் காட்டவில்லையா? வித்தை கற்க வந்தவன் இதுபோல் இந்திரலோகத்தின் மாயங்கள் புரிந்து என் இதயத்தைக் கொள்ளை கொண்டது எதனால்? இப்போது புரிகிறது, என்னைக் கொண்டு என் தந்தையின் மனத்தை வசமாக்கத் தான்! காரியம் கைகூடிவிட்டது. ஏதோ, ஒப்புக்கு எனக்கு நன்றி செலுத்திவிட்டு நீ கிளம்பிப் போவது, அரசனிடம் தான் யாசித்த பரிசிலைப் பெற்றதும் திரும்பிச் செல்லும் ஒருவன் வாயில் காப்போன் மனத்தைக் குளிர்விக்க இரு பொற்காசுகளைத் தருவது போலவே இருக்கிறது.

**கசன்:** ஆ, பிணக்கு மிகுந்த பெண்மணியே! உண்மையைச் சொல்வதனுல் சுகம் உண்டாகுமோ! தருமத்திற்குத்தான் வெளிச்சம்..நான் உன்னை ஏமாற்றவில்லை. கரவில்லா நெஞ்சுடன் உனக்குக் களிப்பு மூட்டவே பாடுபட்டேன். உனக்கு நான் தொண்டாற்றியது பெருந்தவறெனக்கொள்ளின் விதி அதற்கு ஏற்ற தண்டனையை அளித்துவிட்டது. என் நெஞ்சில் இருக்கிறது; ஆனுல் அதை நான் வெளியே சொல்லவில்லை. மூவுலகில் எவருக்குமே ஒரு நன்மையைச் செய்யாது போனுல் என்ன நேரிடுமென்பதைச் சொல்லித் தான் பயன் என்ன? என் உள்ளத்தை விண்டு எங்ஙனம் உரைப்பேன்? எனக்குக் காதல் உண்டா இல்லையா என்பதைக் குறித்து வாதம் புரிவதிலும் பயனில்லை. எனக்குரிய பணியை நான் செய்வேன். பொன்னுலகு எனக்குப் பொன்னுலகு போன்றே இராது. தொலைவில் எங்கோ காட்டிடையே, அம்பு தைத்த மான் எனச் சுற்றி அலைந்திடும் என் நெஞ்சம். தீராத வேட்கை ஒன்று என் தொழிலிடையே என் உயிரைச் சுட்டெரிக்குமே. இருந்தாலும், நான் செல்லவேண்டுமே, இன்பமே இராத அப்பொன்னுலகிற்கு! தேவர் உலகில் இந்தச் சஞ்சீவினி வித்தையைப் பரப்பிப் புதிய தெய்வ வாழ்வை நிலைக்கச் செய்தால்தான் எனது உயிர், கவலை தீர்ந்து இருக்கும். அதற்கு முன் என் சொந்த இன்பத்தையும் கருதவே மாட்டேன். என்னை மன்னித்திடுவாய், தேவயானி..என் குற்றத்தைப் பொறுத்திடு.

**தேவ:** மன்னிப்பு என்பது எங்கிருக்கிறது? இந்தப் பெண்நெஞ்சத்தை இடியினும் கடினம் பாய்ந்ததாக்கிவிட்டாய், அந்தணனே! நீ கௌரவத்துடன் தேவர்கள் வாழும் நாட்டிற்குச் செல்கிருய்; கடமையை ஆற்றிய குதுகுதுப்புடன், மற்றத் துக்க தாபங்களைத் தொலைவில் புறக்கணித்துவிட்டுச் செல்கிருய்.எனக்குத்தான் என்ன வேலை இனி? என் விரதந்தான் என்ன? ஒதுக்கி வீணுக்கிய என் வாழ்வில் எஞ்சியிருப்பது தான் என்ன? அதற்குள்ள பெருமைதான் என்ன? இந்தக் காட்டில் தனிமையில் தலை தாழ்ந்து துணையின்றி, யாருமே பொருட்படுத்தாமல் கிடப்பேன். எந்தப் புறம் கண்ணைச் செலுத்திஞலும் ஆயிரக்கணக்கான நினைவுகள் எழுந்து முள்ளென என் நெஞ்சினை உறுத்தும். என் இதயத்துள் கொடூரமான வெட்கம் மறைந்து என்னை அடிக்கடி கவ்வும். சே..சே எங்கிருந்து வந்தாய் நீ, வழிப் போக்கனே! இரக்கமற்றது உன் உள்ளம். என் வாழ்வின் தண்ணிழலில் சில கணம் ஓய்வு கொண்டு, எனக்கு இன்பம்

தருவதுபோல, சிதைந்த மலரென என் உள்ளத்தை வீணாக்கி, அதை வைத்து ஒரு மாலை தொடுத்தாய் நீ! போகும் வேளையில் அந்த மாலையைக் கழுத்தில் அணியாமல், ஏளனமாய் அதன் நாரினை இரண்டாக அறுத்து எறிந்து விட்டாயே! எனது உயிர்க்குரிய மாண்பு முற்றும் புழுதி யிலே புரண்டு கிடக்கிறது! இது நான் உனக்கு இடும் சாப மாகும்: என் காதலைப் புறக்கணித்து நீ கற்றுச் செல்லும் வித்தை உனக்கு முழுவதும் வசமாகாது; அதைச் சுமப் பாயே தவிர அது உனக்குப் பயன்படாது; மற்றவருக்கு நீ அதைப் புகட்டலாம்; ஆனால் உன் வரைக்கும் அது செய லாற்றாது.

**கசன்:** நான் உனக்கு வரம் தருகிறேன், தேவி! நீ சுகமடைவாய். இந்த மனத்தாங்கலை எல்லாம், உனது பெருந்தன்மையைக் காட்டியே மறந்துவிடு.

(10 ஆகஸ்டு, 1893) —விதாய் அபிசாப

## 14

# மாநிலத் தாய்

திருப்பி அழைத்துக்கொள் என்னை, மாநிலமே!
உன் குழந்தையைக் கையில் ஏற்றுப்
பரவிய உன் மடியினில் அழைத்துக்கொள்வாய்.
அன்னையே, மண்ணகமே, இளவேனிலின் இன்பமெனத்
திசையெங்கும் பெருகியே நான்
உன் மண்ணில் கலந்திருப்பேன்.

இவ்வுடற் கூட்டினை, கல்லால் ஆகிய
இக்குறுகிய சுவரினை, தானே எழுப்பிக்கொண்ட
இன்பம் காணா இவ்விருட் சிறையினை
உடைத்தெறிந்து, சலசலத்திட
அலைத்தெழ, அசைந்திட, சிலிர்த்திட,
நழுவியே, சிதறியே,
திடுமென ஒளியிலும், மெல்லிய சிலிர்ப்பிலும் பெருகி,
இப்புவியின் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்கு
வடதிசையிலும் தென்திசையிலும், கிழக்கிலும் மேற்கிலும்,
பாயும் வெள்ளமெனச் சென்றிடுவேன்.

கொடிப் பாசியிலும் குற்றுச் செடியிலும்,
புல்லிலும் பூண்டிலும், மரக்கொம்பிலும்

அதன் பட்டையிலும், தளிரிலும்
சுவைதரும் உயிரின் சாறெனத் தோய்ந்திடுவேன்.

பொன்னெனக் கதிர்கள் வளையும்
வயல்களை விரலால் தொட்டு இன்புறுவேன்.
புது மலர்களிலே மறைவாகப்
பொன் இழைத்து, மணங்கமழும்
தேன் துளியினை நிரப்பிடுவேன்.

கடல் நீரினில் நீலம் தோய்த்தே
தரணியின் முடிவிலாத் தாலாட்டிசைக்கு ஏற்பக்
கரைமிசை ஆடிடுவேன்.
களிப்பின் மிகுதியால், திசை இறுதிவரை,
அலைகளிடை என் மொழியினைப் பரப்பிடுவேன்.

தூய வெண்பனி தோய்ந்த உயர்மலையின் மோனத்திடையே
வெள்ளைத் துகில்போல் விரிந்திடுவேன்.

என்னையும் அறியாமல் என் உள்ளத்தில்
வெகு நாளாய் மறைந்திருந்த ஆசைகள்
ஊற்றென எழுந்திடுமே!
அவை நாற்புறமும் வழிந்தே
கட்டுக்கு அடங்காமல் ஓடி
உன்னை நனைத்திட விரும்புகின்றன.

அவ்வாசைதனை விடுவித்தே
கணக்கிலா வாய்க்கால்களாய்
நாடெங்கிலும் திசைகள்தோறும்
ஊடுருவ, எங்ஙனம் செலுத்திடுவேன்?
இல்லத்தில் இருந்தே,
என் மனத்துள் கற்பனை செய்து
ஆவல் மிகுதியால், உலகம் சுற்றித் திரிவோருடன்
உன்னை இணைத்தே, விருப்புறும் சிந்தையால்
சுற்றுத் தெளிகின்றேன்.
எளிதில் கடக்கவொண்ணாத் தூர தேசம்;
மரங்கள் அற்ற எல்லையில்லாப் பெருவெளி;
ஆறா வேட்கையின் ஆடரங்கம்;
மணற் குவைமேல் சிதறிக் கண்ணைப் பறிக்கும்
வெயில் ஒளி; தொடுவானம் வரை அகன்றிடும்
புழுதிப் பாயல்; அதன்மீது உடல் வெம்பி,

பெருமூச்செறிந்து, வறண்ட நெஞ்சினளாய்த்
துணையற்று, ஒலியடங்கி, இளக்கமே இன்றி
நிலமகள் கிடப்பது போலத் தோன்றும்.
இவ்வாறு எத்தனை நாட்கள் இல்லத்திலே
சாளர வாயிலில் அமர்ந்து, என் மனத்துள்
தூரத்துக் காட்சிகளை வரைந்திருப்பேன்!

நாற்புறமும் குன்றின் வரிசை;
அதன் நடுவே, நீலப் புனலாடும் பொய்கை;
தனிமை சூழ்ந்த தூய பளிங்கு நீர்.
மலைச் சிகரங்களை அணைத்து
அன்னையின் பாலைப் பருகி
உறங்கிக் கிடக்கும் இளஞ்சிசுவென
முகில் துண்டுகள்;
தொலைவில் நீலக் குன்றின் மீது
படிந்த பனியின் கீற்று;
கட்புலனை மங்கச் செய்யும் அதன் வெண்மை;
யோகம் புரியும் விரிசடையான் வாழும்
தவவன வாயிலை நண்ணவிடாது தடுப்பதுபோல்
பொன்னுலகின் வரிசைகள் தோற்றும்.

தொலைவில் கடலுக்கு அப்பால்,
மகாமேரு நாட்டிற்கு
என் மனத்துள்ளேயே பயணமாவேன்;
அங்கே, இயற்கை அன்னை
நித்திய கன்னிகை விரதம் கொண்டவள்;
வெள்ளைப் பனிக்கலை உடுத்துத்
தூய மேனியளாய்த் திகழ்வாள்.
ஆசையற்று அருங்கலம் வெறுப்பவள் அவள்.
நீண்ட நாள் இரவு கழிந்த பின்
பகல் தோன்றும் அங்கே.
ஒலியோ, இசையோ இல்லாத இடம்;
இருள் கவிந்திடும்; ஆனால்
கண்ணயர்வோர் அங்கில்லை.
மரித்த சேய்மீது கவிந்து
வெறித்த நோக்குடன் புரளும் தாயெனக்
காட்சித் தருவாள் இயற்கைத் தாய்.

புதுப் புது நாடுகள்; பெயர்களைக் கேட்டதுமே,
படித்ததுமே அவைபற்றிய விந்தை வருணனைகளை

அறிந்ததுமே, அவ்விடங்களை அணுகிட
எனது உள்ளம் தாவிடும்.

கடற்கரையில் சிறு பச்சைக் குன்றுகள்;
அவற்றின் இடுக்கில் தென்படும் ஒரு கிராமம்;
மணலில் உலரும் வலைகள்;
கடல் ஓதத்தில் மிதக்கும் படகுகள்;
பொங்கிப் புடைத்திடும் அவற்றின் சீலைகள்;
வளைந்தே வரும் சிற்றாற்றின் அழகு;
மக்கள் இன்பம் காணும் சிறு குடில்கள்;
இவை அனைத்தையும் என் இதயத்துள் அணைத்திட,
எங்குளதையும் எனதாக்கிடவே ஆவல் எழும்.
ஓடும் ஆற்றுநீரில் மூழ்கியே,
இரு கரையிலும் மனிதர் வாழும் இடங்களில்
வேட்கையைத் தணிக்கும் நீரை வழங்கி
அல்லும் பகலும் பாடல் இசைத்துச்
செல்லவே எனது உள்ளம் துள்ளும்.

இவ்வுலகினில், உதய கிரியிலிருந்து
அத்தமனக் கடல் வரை, மலைத்தொடர்கள்
தம் இரகசியத்தில் ஆழ்ந்தே உள்ளன.
கடும் பாறையின் மடியில் வீசியடிக்கும்
குளிர் காற்றில், புதுப்புது மனிதக் குழுவினரை
வாழச் செய்திடுவேன்.
பிற நாட்டவருள் ஒருவனாய்த் திகழ்வதே
எனது விருப்பமாம்.
ஒட்டகத்தின் பாலை அருந்தி,
பாலை வெளியில் வாழும்
சுதந்தர மிக்க அரபு மகனாக வேண்டுமென் ஆசை எனக்கு.
திப்பத்தின் மலைச் சரிவில், எதிலும் இணையாத
பாறைசூழ்ந்த ஊரிடையே, பௌத்த மடத்தில்
இருந்திட வேண்டும் நான்.
திராட்சைச் சாற்றினைப் பருகி
ரோஜா வனமதில் உலாவும்
பாரசிகனாக விரும்புவேன்.
குதிரைமேல் ஏறிப் பாயும்
அஞ்சா நெஞ்சுடைய தார்த்தரி ஆகவே
எனக்கு ஆசை.
மட்டுமரியாதை தெரிந்த,

உணர்வு மிக்க ஜப்பானியனுகவே
விரும்பிடுவேன்.
பகலும் இரவும் தொழிலில் ஈடுபடும்
மிகப் பழஞ் சீனத்தைச் சேர்ந்தவனுகவே அவா.
உலக மாந்தர் இல்லந்தோறும்
நான் பிறவி எடுக்க வேண்டும் என்பதே என் விருப்பம்.
நோய் நொடி இராத, வலிமை மிகுந்த,
உடைகள் அணியாத காட்டுமிராண்டி -
நல்லது கெட்டது தெரியாதவன் அவன்;
ஒழுங்கினை அறியாதான்;
கட்டுக்கு அடங்கிப் போகாதவன்;
சிந்தனைக் கிளர்ச்சியே இல்லாதவன்;
தயக்கமோ தெளிவோ கொள்ளாதவன்;
பிறர்மனை என்பதை உணராதவன்;
வாழ்வு செல்லும் வழியே
அதிர்ச்சிகள் பல தாங்கிச்
சளையாமல், இரக்கம் துளியும் இன்றி,
நடந்து போனதைக் குறித்து வருந்தாமல்
பொய்யான துராசையால்
பிற்காலத்தை நோக்காது,
நிகழ்காலத்து அலைமீது குதித்தே
உல்லாசமாய்ச் செல்பவன் அவன் -
இத்தகைய வாழ்க்கையையே விரும்புவேன்.
உயிர் ததும்பும் இப்புயலிடைப் புகுந்து
சீலை விரித்திடும் மெல்லிய ஓடமென
விரைந்திடவே எனக்கு அவா.

கொல் புலி உலவும் காடு—
பெருவலிவுடன், அவ்வேங்கை தன் உடலை
இலகுவாய்ச் சுமந்திடுமே;
பளபளத்திடும் அதன் மேனி
இடிப்பிழம்பெனக் காட்டின் இருளிடைத் தோன்றிடுமே.
வெம்மைக் குரல் எடுத்து வேடுவன்மேல்
மின்விசையுடன் பாய்ந்திடுமே.
சளைத்துப் போகா அவ்வுடலின் மொய்ம்பு,
கொடுமை தோய்ந்த ஒரு தென்பின் உணர்வு,
இறுமாந்துள்ள ஒரு தோற்றப் பொலிவு -
இச் சுவையினைப் பெறவே அவாக்கொள்வேன்.
இவ்வுலகில் எப்பொருளிலிருந்தும்

ஆனந்தம் ததும்பும் மதுவினை
நவ நவமாய்ப் பருகிடவே
என் விருப்பம் தாவிடும் காண்!

அழகிய மாநிலமே,
எனதுள்ளம் உன்னைக் கண்டு
எத்தனை முறைதான் களிப்புடன் பாடிப் பொங்கிற்று!
சமுத்திர மேகலை சூழ்ந்த உன் இடையை
அணைத்திட விருப்பங் கொண்டேன் நான்.
காலைப் பரிதியின் ஒளியெனத்
திசையெங்கும் பரவ விரும்பினேன்.
பூ மொட்டுத்தோறும் முத்தம் தந்தே,
பசுமை போர்த்த மென்புல் தரையைச்
சேர்த்தே அணைத்திடவும்,
ஒவ்வோர் அலைமீதும் நாளெல்லாம்
குதித்து இன்ப ஊசல் ஆடிடவும்,
மெல்லவே கால் வைத்து
உலகம் பரவிய துயிலின் உருவில் வந்து
உன் பறவை, விலங்குகள் மேல் கண் படர்ந்து,
கூடுகள் எங்கும், வீடுகள் எங்கும்,
பாயல்கொள்ளும் இடமெல்லாம் சென்றிடுவேன்.
மாபெரும் போர்வை இட்டு
வையத்தை இருளில் ஆழ்த்திடுவேன்.
மலர்தலை உலகே!
பல ஆண்டுகள் தொன்மையானவள் நீ;
என்னை உன் மண்மீது ஏற்று
முடிவிரா வானில், களைப்புறுத கால் வைத்து
எண்ணிலா இரவு பகலிலும்
கதிரவனை நோக்கியே யுகம் யுகமாய்
வலம் செய்து வருகின்றாய்!
புதுப்புல் என்மீது முளைத்தெழுமே;
குவை குவையாய் மலர் பூத்திடுமே;
மரங்கள் யாவும், தளிரும் பூவும்
கனியும் மகரந்தமும் சிந்திடுமே;
மனம் வேறிடம் படர, தன்னந்தனியே
பத்மா நதிக்கரையை நோக்கியே
களிப்புறும் என் கண்களை நிறுத்தி
உனது உறுப்பனைத்தையும்
என்னுள் தொட்டு நுகர்கின்றேன்.

உன் மண்ணுக்குள் எப்படித்தான்
புல் குருத்து, மேனி சிலிர்த்திடத் தலை காட்டுகின்றதோ?
உன் இதயத்துள் அல்லும் பகலும்
உயிர் ஓட்டம் விரைவதுதான் என்னே!
அழகிய காம்பில் பூமொட்டு
என்ன குருட்டு இன்பத்துடன்
இதழ் விரியத் துடிக்கின்றதோ?
தாயின் பாலைப் பருகிய களைப்பினிலே
கண்வளரும் குழந்தை, கனவிடை
இன்முறுவல் காட்டுவது போல்
மரஞ்செடி கொடி புல் பூண்டு யாவும்
புது வெயிலில் புளகம் கொண்டு
எவ்வகை இன்பம் எய்துகின்றனவோ?

இன்று, பொன்னிறக் கதிர்கள் முற்றிய
விளைநிலங்கள்மீது விரிந்திடும் வெயில் ஒளியில்
காற்றில் சலசலக்கும் தெங்கின் ஓலை
மின்னிடும் பொழுது
நீங்கா வேதனை அல்லவோ நீள்கிறது!
என் மனம் எங்கும் பரவியே
நீர், நிலம், காட்டின் பசுமை,
வானத்து நீலம் இவற்றுள் தோய்ந்த
நாட்களை நினைவிற் கொண்டிடுமே.
வெளியே எழாத குரலுடன் என்னை
வையகமே கூவி அழைப்பது போலத் தோன்றும்;
விரிவும் விந்தையுமான இவ்விளையாட்டகத்தில்
இணைந்தெழும் பல்வகைக் குரலோசை,
எனது நெடுநாளை நட்பு யாவும்
களிப்புடன் எழுப்பிய ஒலியோ இது!
என்னை அவ்விடம் இட்டுச் செல்வாய், அன்னையே!
அந்திப் பொழுதில் செவ்வொளி படிந்த
புல்வெளியை நான் காணுந்தோறும்,
புழுதித் தேர் எழ ஊருள் தாவும்
பசுவின் மந்தையைக் காணுந்தோறும்,
மரம் சூழ்ந்த கிராமக் குடில்கள் மேல்
புகைக் கீற்றைக் காணுந்தோறும்,
ஆற்றங்கரையில் ஆளில்லா மணல் மேட்டில்
நடை மெலிந்த வழிப்போக்கன் போல்
பிறைமதி தொலைவில் தென்படும்போதும்,

என்னை வருத்தும் இப்பிரிவின் துயரை,
அன்னையே, அகற்றிடுவாய்!
யாவரும் என்னை ஒதுக்கிட,
நான் தனியனாய் நின்று
இவ்வெளிக்காட்சி, இவ்வானம்,
இவ்வையம், இவ்வாற்றின் மீது
அமைதியுடன் உறங்கும்
வெண்ணிலவின் வெள்ளம்
யாவையும், என் கைக்குள் தழுவிடத்
தாவுவது போலவே தோன்றும்.
ஆனால், அவற்றைத் தொடவும் என்னால் முடியாது;
வேதனையுடன் வெறித்தே நோக்குவேன்.

நானெல்லாம் பிராணன், பல உருவில்
முளைத்து, அரும்பி, இணர் விரித்து
யாவும் மலிந்த அவ்விடத்துக்கு,
இசைப் பாட்டுக்கள் ஒலிக்கும் அவ்விடத்துக்கு,
அளவிலாப் பாணியில் கூத்துக்கள்
குமிழ்த்து எழும் அவ்விடத்துக்கு,
பல்வகை உணர்வின் பெருக்கில்
சிந்தனை திளைக்கும் அவ்விடத்துக்கு,
துளை வழியே தீங்குழல்
சந்தம் பல பயிற்றும் அவ்விடத்துக்கு
அழைத்துச் செல்வாய், அம்மா!
எழிலுடைக் காமதேநுவாய் விளங்குகின்றாய் நீ;
செடி கொடி, பறவை விலங்கு முதலாம்
எத்தனையோ உயிரினங்கள்
வேட்கை தணிவதற்கு,
உன்னைக் கறந்து, உன் இன்சுவை அமுதினை
உண்கின்றனவே.
எத்தனை வழியிலேதான் இவ்வமுதம்
சுரந்து பெருகிடுமோ!
இசையின் வெள்ளமாய்
எந்தத் திசையும் பாய்ந்திடுமே!
எல்லோருடனும் கலந்தே,
அகிலம் பரவிய இந்த ஆரமுதினை -
இந்த இன்பம் அத்தனையும் - ஒரு நொடியில்
சுவைத்திட ஆசை எனக்கு.
இந்த இன்பத்தால் உனது காட்டகம்

மேலும் பசுமை கொள்ளாதோ?
வைகறை ஒளியிடையே
புதுக் கிரணத் துடிப்பு உலவாதோ?
மயல்கொண்ட என் நெஞ்சினுள்ளே
இந்த வானும் பூதலமும்,
என் இதய வண்ணம் கொண்டே எழுதிய
இணையிலா ஓவியமாகிவிடும் காண்!
கவிஞன் மனத்துள் திகழும் காட்சியே
காவியமாக எழுந்திடுமே.
அதுவே காதலர் கண்ணில் காணும் உணர்வாகும்;
அதுவே, பறவையின் தீஞ்சுவைப் பாட்டாய்ப் பீறிடுமே.
பலர் காணும் இன்பத்தில் திளைப்பன உன் உறுப்பெலாம்;
ஏ மாநிலமே, உயிரின் ஓட்டம்
எத்தனை முறைதான் உன் வாழ்வில் வந்து போயிற்ருே?
உள்ளத்திலூறும் காதல் உணர்வுகள்
உன் மண்ணில் கலந்தே
எத்தனை ஓவியம் வரைந்தனவோ?
வேதனைக்கு இரையான உயிருந்தான்
எத்தனை வழியில் உன்னைக் கட்டித் தழுவியதோ?
என் காதல் அனைத்தையும் இவற்றுடன் கலந்து
உயிர்பெய் அவ்வண்ணத்தினில்
உன் ஆடையைத் தோய்த்திடுவேன்.
யாவும் தந்த உனக்கு அணிகள் பூட்டிடுவேன்.
ஆற்றுநீரில் உள்ள என் பாட்டைக் கேட்கக்
கரைமீது இல்லையா எவரும்?
புலரும் பொழுதினில் என் மலர்ச் சிரிப்பினைக் காணத்
துயில் கலைந்தெழும் மண்ணகத்தவர்
எவருமே இல்லையா?
நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் இன்று,
அழகுடைய இவ்வனத்தின் தளிர்க்குவையில்
என்து உயிர்த்துடிப்புத் தோன்றிடுமா?
இல்லந்தோறும் ஆடவரும் மகளிரும்
தொன்று தொட்டு நடத்தும் இவ்விளையாட்டிலும்,
அவர்களிடையே திகழும் காதலிலும்,
சிறிதாகிலும் நான் கலந்திருக்க மாட்டேனு?
அவர்கள் முகந்தனில் பூத்திடும் முறுவல் போல்,
அவர்கள் மேனியில் பொலியும்
நளிர்மென் இளமை யென,
இளவேனிலில் அவர்கள் காணும்

எதிர்பாரா இன்பம்போல,
அவர்கள் நெஞ்சினில் குருத்துவிடும்
காதலின் புது நுகர்ச்சியென
இருக்க முடியாதோ நான்?

தாயகமே, என்னைப் புறக்கணித்துச் செல்வாயோ?
ஊழி நெடுங்காலமாய்ப் பெருகிவரும்
இம்மண்ணின் தொடர்பு
சட்டென இற்றுப் போய்விடுமோ?
பல கோடி ஆண்டுகள் இத் தண்ணிய மடியினில்
வாழ்ந்து நான் விலகிச் செல்வேனோ?
நாற்புறமும் பாசம் என்னை இழுத்திடாதா?
இம் மரம் செடி கொடிகள் யாவும்
ஆறு மலை வனமும்,
என்றுமே நிலவும் இந்நீல விசும்பும்,
உயிர் துளும்பும் இந்தக் காற்றும்,
விழிப்புடைய இவ்வொளியும்,
உயிரினம் யாவையும் இணைத்தே
என் உளமதில் ஒன்றுக்கும்
இவ்வுயிர்ச் சமூகத்தை வெறுத்திடுவேனோ?
உன்னைச் சுற்றியே உலவிடுவேன்;
உன் உறவினர் வாழும் குழுவில் இருந்திடுவேன்.
புழு, பசு பட்சி, மரம் புதல் கொடி
இவற்றின் உருவங்கள் வழியாக,
ஏங்கும் என்னைக் கூவியழைத்து
உயிரின் வெம்மையைப் புகட்டிடும்
உனது மார்பிடை இழுத்துக்கொள்வாய்!
யுகயுகமாய், பிறவிதோறும்
வாழ்வின் எண்ணிலாப் பசி நீங்கிடவே
உன் மார்பின் இன்னமுதினை ஊட்டுவாய் எனக்கு.
எத்தனையோ வகை இன்பமும் அன்பும்
இவ்வமுதின் சுவையால் பெருகிடுமே.
இதன் பின்னரே, இம்மாநிலத்து இளையவர்
உலகின் நாடெங்கிலும் செல்ல முற்படுவர்;
கடத்தற்கரிய வானவழியில் துலங்கும்
அவ்வொளிக் கூட்டத்தின்றை
நண்ணினும் நண்ணுவர்.
இன்னும் எனது விருப்பம் அடங்கவில்லை;
உன் மார்பின் அமுதினைப் பருகும் வேட்கை

துளியேனும் எனக்குத் தணியவில்லை.
உனது திருமுகம், இன்னும் என் கண்முன்
ஓர் இன்பக் கனவினை எழுப்புகின்றது.
இன்றளவும் இவ்வேகம் அடங்கிய பாடில்லை.
எல்லாம் மருமம் நிரம்பியே தோன்றுகின்றன;
கண் இமைக்காது இருந்த இவ்விந்தைக்கு
ஒரு முடிவு காண இயலவில்லையே !
உன் முகம் நோக்கியே இளஞ்சேயென
உனது மார்பிடைக் கிடக்கின்றேன்.
அன்னையே, என்னை ஏற்றுக்கொள்வாய்!
உன் கடினமான கைக்குள் தழுவிடு.
உன் இதயத்துள் அழைத்துக்கொள்வாய் என்னை;
புதுப்புது இன்பங்கள் ஊற்றெனச் சுரந்திடும்
உயிர்க் குமிழ்ப்பு மறைந்துள்ள இடத்துக்கு
இட்டுச் செல்வாய் என்னை;
தூர ஒதுக்கி விடாதே!

(11 நவம்பர், 1893) —ஸோநார் தரீ

## 15

# குறிப்பிலாப் பயணம்

'இன்னும் எவ்வளவு தொலைவு அழைத்துச் செல்வாய்,
எத்துறை நண்ணுமோ உன் பொன்னோடம், [காரிகையே?
வாய்திறந்து சொல்லாயோ வேற்று நாட்டவளே?
இதை நான் வினவுகையில் மெல்லச் சிரிக்கின்றாய், முத்தை
[நிகர் முறுவலாய்!
உன் நெஞ்சிடை உள்ளதை எங்ஙனம் அறிவேன்?
வாய் திறவாது மெல்லிய விரலால் அங்கே சுட்டுகிறாய்.
கரையிலாக் கடல் கிளர்ந்தெழுகிறது;
தொலைவில் மேலை வானவிளிம்பில் கதிரவன் மூழ்குகிறான்;
அங்கு உள்ளது யாதோ?
எதைத் தேடிச் செல்கின்றேனோ?
பகலின் ஈமத்தழல் அதோ எரிகின்றது,
அந்தியின் கரைதனில்;
தெள்ளிய நெருப்பென வானிடை ஒளிவெள்ளம்
திசைமாதர் பெருக்கிடும் கண்ணீர் மின்னுவதே போல்
உருகியே ஓடுகிறது.
அலைகள் ஆர்த்திடும் கடலுக்கப்பால்

முகில் முத்தமிடும் அத்தமனக் குன்றின் சரிவிலா
உள்ளது, உன் உறைவிடம்? சொல்;
வாய் திறவாமல் என் முகம் நோக்கியே சிரிக்கின்றாயே;
நெடுமூச்செறிந்து காற்று ஒய்யெனச் செல்கிறது;
குருட்டுணர்வில் பொங்கியே உறுமுகிறது கடல்நீரும்;
எத்திசை நோக்கினும் கரையே கண்ணில் படவில்லை.
உலகெங்கும் பரவிய ஓலமென
நீலக்கடலின் நீர் விம்முகிறது.
மாலையின் பொன்னிறக் கதிர் படிந்தே
நீர்மிசை மிதந்து செல்கிறது பொன்னோடம்.
அவ்வோடத்தில் அமர்ந்து மௌனமாய் நீ சிரிப்பதேனோ?
எதற்கு இவ்விளையாட்டென்பதை நான் அறியேன்!
'யார் என்னுடன் வருபவர்?' என்று நீ
முதலில் என்னை அழைத்தபொழுது
உன் கண் குறிப்பைக் காட்டி, அவ்விளங்காலையில்
கையை நீட்டி - மேற்றிசையை - முடிவில்லா
அம் முந்நீர்த்திரளை நீ சுட்டினாய்.
நெஞ்சினுள் உலவும் விருப்பெனவே
அந்நீரில் துடிக்கிறது ஒளியின் அசைவு.
ஓடத்தில் ஏறி வினவினேன் உன்னை:
'புதிய வாழ்வு எங்கே தோன்றிடுமோ?
என் ஆசைக் கனவுகள் யாவும்
பொன்னான விளைவினை எங்கே கண்டிடுமோ?' -

என் முகம் நோக்கி முறுவல் செய்கிறாய்;
ஆனால் நீ வாளா இருப்பது ஏனோ?
பின்னர்க் கார் முகில் சில பொழுதும்,
வெங்கதிர் சில பொழுதும் தோன்றின காண்!
அரற்றும் அலைகடல் சில பொழுது
அமைதியின் உருவேற்றது;
வேளையோ விரைகிறது;
ஓடத்துச் சீலையும் ஊதிப் புடைக்கிறது.
இப்பொன்னோடம் எங்குச் செல்கின்றதோ?
அத்தமனக் குன்றில் தாழும் கதிரவனைக் காண் அதோ!
பிறிதொரு முறையும் வினவுகின்றேன் உன்னை:
'குளிர்ந்த மரணம் அங்கே காத்திருக்குமோ?
அங்கே அமைதி காண்போமோ,
இன்துயில் கொள்ள அவ்விருளில் இடம் உண்டோ?' -

இறகு விரித்திறங்கியது இருள்சேர் இரவு;
அந்தி வானிடையே மறைந்தது பொன்மெருகும்.
என் பால் வீசுகிறது உன் உடலின் மென்மணம்;
நீர்த்திரளின் விசையொலி ஒன்றே செவியில் விழுகிறது.
உள்ளம் கலங்கியே, உடலும் ஒய்ந்தே
விதிர்த்தே உன்னை அழைத்து வினவுகின்றேன்:
'எங்குள்ளாய் நீ? அருகினில் வந்தே
என்னை மெல்ல அணைத்திடுவாய்.
பேசாயோ வாய் திறந்து?
பாரேனோ உன் மௌனப் புன்னகையை?'

(11 டிசம்பர், 1893) —ஸோநார் தரீ

## 16

## ப்பிடு என்னை இனி

இல்லறமதில் யாரும் எப்பொழுதும்
எத்தனையோ செயல்களில் ஈடுபட்டிருக்கையில்,
நீ மட்டும் கட்டினின்று விடுபட்ட
நாடோடிப் பிள்ளை போல்
பகற்பொழுது மேட்டு வெளியில், தனியே
மரத்து மங்கிய நிழலில்,
தொலைவிலிருந்து காட்டின் மணம் ஏந்தி
மெல்ல வரும் வெம்மைக் காற்றில்
நாளெல்லாம் குழல் கொண்டு ஊதுகின்றாய்.
நீ எழுந்து வரவேண்டிய தருணம்
இன்று வந்துவிட்டது.
எங்கே நெருப்புப் பற்றிக்கொண்டது?
உலக மக்களை விழிக்கச் செய்ய
யாருடைய சங்கு முழங்குகிறது?
எங்கே, அழுகைக் குரல் கேட்கிறது?
எந்த இருள் சிறைக்குள் கைத்தளையுடன்
திக்கற்றவள் உதவிக்காகக் கூவுகிறாள்?
பருத்துவரும் ஓர் இழிதன்மை
திறமையற்றவர் இதய இரத்தமதை
உறிஞ்சிக் குடிக்கின்றது !
தன்னலம் கொண்ட அநீதி
பிறர்படும் இன்னலைப் பார்த்து நகைக்கின்றது.
அஞ்சிக் கூசிக்கொள்ளும் அடிமை
மாறுவேடம் பூண்டு தலைமறையப் பார்க்கிறான் !

அதோ நிற்கின்றனரே, தலைதாழ்ந்து, வாயற்று:
அவர்களுடைய சாம்பிய முகத்தினில்
பல நூற்றாண்டு நிலைத்து, வேதனையும்
உருக்கமும் நிரம்பிய கதை
வரைந்திருப்பதைப் பார்.
மூச்சு உள்ளமட்டும், தோள்மீது சுமையை
எவ்வளவு ஏற்றினும் மெல்ல நகர்ந்து செல்கின்றனர்;
பின்னர் வழிவழியாய்த் தம் மக்களுக்கு
அதை விட்டுச் செல்கின்றனர்.
தம் விதியை அவர்கள் நொந்துகொள்ளவில்லை;
இதன் பொருட்டு, இறைவனையும் குறை கூறவில்லை;
மனித குலத்தின்மீது பழியைச் சுமத்தவில்லை.
மான அபிமானம் என்னவென்பதை அறியார்:
இரண்டு வாய் சோறு கிடைத்தால் அதைத் தின்று
துன்பம் வரினும் உயிர் வாழ்வதே போதுமென நினைப்பர்;
செருக்கும் கொடுமையும் மலிந்த அட்டூழியம்
அவர்கள் உயிரை வாட்டினாலும்,
அவர்கள் உண்ணும் சோற்றை யாராவது பறித்தாலும்
எங்கே போய் முறையிடுவது என்பதை அறியார் அவர்கள்.
ஏழை பங்காளனை இறைவனை
பெருமூச்செறிந்து இரண்டொரு முறை கூப்பிடுவர்;
முணுமுணுக்காமலே மரித்திடுவர்.
அறிவிலா, வாயிலாப் பூச்சிகளென
வதங்கிப் போகும் அவர்களை
வாய் திறந்து பேச வைக்க வேண்டும்.
அவர்களது உள்ளத்தில்
நம்பிக்கையின் குரல் தொனிக்க வேண்டும்.
அவர்களை அழைத்துக் கூறவேண்டும்:
'சற்று நீங்கள் ஒன்றுகூடித் தலைநிமிர்ந்து நில்லுங்கள்.
நீங்கள் அஞ்சிடும் அவ்வநீதி
உங்களைவிட அச்சத்தால் நடுங்குமே;
நீங்கள் கிளர்தெழுந்ததுமே
அது ஓடிப் போய்விடுமே!
அதன் எதிரே நீங்கள் அணிவகுத்து நின்றால்,
அது தெரு நாயைப் போல வாலைக் குழைத்துப்
பதுங்கிக் கொள்ளும்.
கடவுள் அதன் பக்கலில் இல்லை;
அதற்கு உதவி நிற்பவரும் இல்லை.
வெளிக்குத்தான் அதன் எதிர்ப்பெல்லாம்;
தன் இழிதன்மையை அது உள்ளத்துள் உணரும்.

புலவனே! எழுந்து வா;
உனக்கு உணர்வொன்று இருக்குமாயின்
அதனை உன்னுடன் கொண்டு வா.
அதை இன்றே பரிசாகத் தந்திடு.
உன் முன்னால் நிற்பது இன்னல் மிகுந்த வாழ்வு;
நீங்காத வறுமை, இருள், அடைப்பு;
சோறு வேண்டும்; உயிர் வேண்டும்;
உடல் நலம் வேண்டும்;
வலிமை மிக்க தோள் வேண்டும்.
இப்பெருங் குறைகளுக்கிடையே, கவிஞனே,
ஒரு முறை பொன்னுலகிலிருந்து
நம்பிக்கையின் சித்திரமதைக் கொணர்ந்திடு!
என்னை வேறு வழியே திருப்பிடு.

கற்பனை வண்ணம் கொண்ட தேவியே!
உண்மை வாழ்வின் கரைக்கு
என்னை இட்டுச் செல்வாய்.
இளந்தென்றலிலும், வளைந்து பாயும் அலைவரிசையிலும்
என்னை வைத்து ஊசல் ஆட்டாதே!
மோகம் எழுப்பும் உனது மருளால்
என்னை மயக்கிடாதே!
வேதனை குமுறும் என் உள்ளத்தின் நிழலில்
தனியே இருக்க என்னை விடாதே!

திசை எங்கும் இருள் கவிகிறது;
ஆறுதலின்றி, வெறுப்புற்றே
காற்றின் விசையால் காட்டகம்
பெருமூச்செறிந்து ஓலமிடுகின்றது.
அங்கிருந்து வெளியே சென்றேன்:
திறந்த வான வெளிக்கீழ்,
புழுதி நிறைந்த அரசமருங்கிலே
மக்கள் குழுமும் இடத்திற்கு.
'எங்கே போகிறாய்? வழிப்போக்கனே!
நீ போவதும் எங்கேயோ?
நான் உனக்கு அறிமுகமில்லை,
என் பக்கம் திரும்பிப் பார்.
உன் பெயர் என்னவோ சொல்?
என்மீது ஐயம் கொள்ளாதே!
நிலைகுலைந்த இவ்வுலகினில்
நான் பல நாட்களாக உறைபவள்.

துணை எவரும் இல்லை எனக்கு;
அதனாலேயே எனக்கு இவ் விந்தை வடிவும்
புதுமைப் பழக்கமும் வந்தன;
அதனாலேயே, என் கண்களில் கனவின் கலக்கம்;
என் உள்ளமதில் பசியின் வெந்தழல்.

இவ்வுலகிற்கு நான் வந்த நாளன்றே
யாரோ ஓர் அன்னை
இந்த வேய்ங்குழலைத் தந்தாள் விளையாடுவதற்கு.
இதை ஊதியபடி, என் இசையிலே மயங்கி
நெடு நாட்கள், நீண்ட இரவுகள்
இவ் வாழ்வின் எல்லையைக் கடந்து
தனியே வெகுதூரம் சென்றுவிட்டேன்.
எனது குழலின் இசையால்
பாட்டே இராத, பொலிவழிந்த
இவ்வூரினைத் தட்டி எழுப்புவேனாயின் -
மரணத்தையும் வென்றிடும்
நம்பிக்கையின் கீதத்தால்
உழைப்பிலா வாழ்க்கையின் மூலைமுடுக்கெல்லாம்
சில பொழுதாகிலும் அலை எழச் செய்வேனாயின்,
தன் உள்ளத்தைத் திறந்து பேசத்
துயருக்கு ஒரு மொழி உளதாயின் -
அதனுள் அடங்கியிருக்கும் ஒரு பசி
சொர்க்கத்தின் அமுதினைப் பெற்று உய்ந்திடுமே!
அப்போதுதான், என் பாட்டுப் பயனைக் காணும்.
அப்பெரும் பாட்டைக் கேட்டு
கணக்கிலா மனக்குறைகள் மறைந்திடுமே.
எதைப் பாடுவாய்? இயம்பிடு;
நீ அடைந்த இன்பம் பொய்,
நீ படும் துயரும் பொய் என்று சொல்.
பொன்னுலகில் சொக்கிப் போனவன்
இப் பேருலகினைத் திரும்பிப் பாரானாயின்,
அவன் வாழத் தெரியாதவனே.
இப் பார்மிசை உயிர்கள் பல கோடி எழுப்பும்
அலைக்கு இசையக் குதித்தே,
சத்தியத்தைத் துருவ தாரகை எனவே மதித்து
எதற்கும் அஞ்சாமல் முன்னேற வேண்டும்.
மறலிக்கு நடுங்காதவன் நான்;
கெட்ட நாளிலே பலர் பெருக்கிடும் கண்ணீர்

என் தலைமீதே விழும்.
வாழ்வில் ஈட்டிய பொருள்கள் யாவும்
எவனுக்குக் கையுறையாய் வழங்கினேனே
அவனைக் குறியிடத்தில் காணவே
அக்கண்ணீர்ப் பெருக்கிடையே சென்றிடுவேன்.
அவன் யாரோ?..யாரென்பதை அறியேனே.
இதுமட்டும் உணர்வேன்; அவன் பொருட்டே
மனித யாத்திரிகர்கள், இருளிரவில்
ஒரு யுகத்திலிருந்து மறு யுகம் நோக்கித்
தம் உள்ளத்தின் ஒளியினைத் துணைகொண்டே
இடி உறுமும் கடும் புயலிடை ஏகுவரே.
இதுமட்டும் உணர்வேன்; அவனுடைய கீத ஒலி
எவன் செவிக்குக் கேட்குமோ, அவன் அஞ்சா நெஞ்சினனாய்
அது வரும் திசையே விரைந்திடுவான்.
இன்னல்களின் சுழலுக்கிடையே
தன் உலகமதைத் துறந்து,
தாக்குதலை மார்பில் ஏந்தியே ஏகுவான்!
யமனின் உறுமல் யாழிசையென
அவன் செவியில் ஒலித்திடுமே;
நெருப்பு அவனைச் சுட்டெரித்திடும்;
வேல் அவனைத் துளைத்திடும்;
கோடரி அவனைப் பிளந்திடும்;
தான் விரும்பும் பொருள்களை எல்லாம்
ஜன்மத்திற்கும் எரியில் இடுகிறான்.
தன் இதய பிண்டத்தை விண்டே
செந்தாமரை மலராகக் காணிக்கை தருகிறான்.
மரணத்தை வரித்து, தன் உயிரைப் பலி தந்து
கடைசிப் பூசையை முடித்துப்
பிறவி எடுத்த பயனைக் காண்கின்றான்.
அவன் பொருட்டே
இளவரசர் கந்தை கட்டி,
பொருள் ஆசை துறந்து,
பிச்சை எடுக்கும் ஆண்டியானார் என்று கேள்வி.
ஒவ்வொரு நிமிடமும், இவ்வாழ்வின்
சிறுமைகளையும் கொடுமைகளையும்
அந்த மகாப் பிராணன் பொறுத்தருளினார்.
அவர் கால்களை வருத்தியது
கூரிய தருப்பைப் புல்.
மூடர்கள் அவரிடம் நம்பிக்கை கொள்ளவில்லை;

உறவினர் அவரை எள்ளினர்; நகைத்தனர்.
அவற்றை யெல்லாம் பொறுத்து
கருணை பொழி விழியுடன், மௌனியாய்த்
தம் உள்ளமதில், அழகின் உருவம் ஏந்திச் சென்றார்.
அவரது அடியிணையில்
மானம் பெரிதெனக் கருதியவர்
அதனைக் காணிக்கை வைத்தனர்;
நிதிமிக்கவன் தன் பொன்னைச் சொரிந்தான்;
தன் உயிரை வைத்தான் மறமிகு வீரன்.
நாடெங்கும் பரவிட
அவரைக் குறித்துப் பாவலனும்
ஆயிரக்கணக்கில் பாட்டுக்கள் வரைந்தான்.
இதுமட்டும் தெரியும்;
அவருடைய மாபெரு மங்கல முழக்கம்
பெருங்கடல் எல்லையிலும், காற்றின் மூச்சிலும்
எங்கும் பரவியது.
அவரது துவராடையின் நுனி
நீல வானத்தைச் சூழ்ந்து
ஆடிப் பறந்தது.
உலகினை வென்ற, நிறை எழிலான
அவ்வன்பின் திருவுருவம்,
அவர் அன்பு வழிசெல் மக்கள் முகந்தனில்
மரணத்தின்போது ஒளிருமே.
இது மட்டுமா தெரியும்?
இவ்வுலகு, இனியாள்மீது கொள்ளும் காதலால்
சிறுமையைப் பலி கொடுத்து,
வாழ்வினை இழிவு செய்யும் யாவையும்
அகற்றிடல் வேண்டும்;
முன்னணியில் தலைநிமிர்ந்து
நேர்மையுடன் நிற்றல் வேண்டும்;
எதற்கும் அஞ்சாதவன்
அடிமைத்தனம் என்னும் சேற்றில் உழல மாட்டான்.
சாந்தத்தின் அவ்வடிவினை உள்ளத்தில் பதித்து,
முள் பொதிந்த வாழ்வின் வழியே
தனியே, மௌனமாய்,
இன்பத்திலும் துன்பத்திலும் பொறுமை இழக்காது,
கண்ணீரை உதறித் தள்ளிக்
கடமையில் சற்றும் தளராமல்,
தனக்கென வாழாது பிறர்க்குரியனாய்

நிற்றல் வேண்டும்.
அதன் பிறகே, இந்நெடுவழியின் இறுதியில்,
வாழ்க்கைப் பயணம் முடிவுறும் வேளையில்
நடை மெலிந்து புழுதிச் செம்மை படிய
ஒரு நாள், எல்லாக் களைப்பையும் போக்கும்
அமைதியை நோக்கி,
துன்பமிராத வீடதனை அடைந்திடுவேன்.
இன்முகமாய், புன்சிரிப்புடன்
பக்தனின் கழுத்தில் மாண்புடைய திருமகள்
அன்றே தன் மாலையை அணிவிப்பாள்.
அவள் கைக் கமலத்தின் தண்ணிய பரிசத்தால்
துயர் அனைத்தும், அமங்கலமானவை யாவும்
ஒழிந்தே போகும்.
பல பிறவிகளாய் அடக்கியிருந்த
கண்ணீர் வெள்ளத்தில் குளித்தே
அவளது செந்துவர் சேவடிகளில்
நான் வணங்கிடுவேன்.
தொன்று தொட்டுத் திரட்டிய விருப்பங்களை வெளியாக்கி
வாழ்க்கையில் எனது திறமையின்மையைச் சொல்லி அழுது
அவளுக்கு நிவேதனம் செய்திடுவேன்.
என் பிழைதனைப் பொறுத்திட வேண்டுவனே.
இதனால், என் துயர் இருள் விடிந்தாலும் விடியும்;
இந்த அன்பின் வேட்கை யாவும்
அவள் தரும் பேரன்பினைப் பெற்று
ஆறுதல் அடையுமே.

(6 மார்ச்சு, 1894) —சித்ரா

## 17

## அந்தணன்

(சாந்தோக்ய உபநிடதம் 4, 4.)

இருள்செறியும் கானகத்தின் நிழல் கவிந்த
சரசுவதி ஆற்றங் கரையில்
மாலைக் கதிரவன் தாழ்ந்தான்.
வனமதில் திரட்டிய சுள்ளிக் கற்றையைத்
தலைமேல் சுமந்தே முனி குமாரர்கள்
ஒலியடங்கிய ஆசிரமத்துள் திரும்பினர்,
சாந்தமும் தண்மையும் இலங்கும்

கண்கள் படைத்த ஓமப் பசுக்களுடன்
சந்திவேளை நீராடலை முடித்துக்
குடிலின் முன்றிலில் ஓம எரி ஒளியில்
குரு கௌதமரைச் சூழ்ந்தே
ஒன்று கூடி இருந்தனர்.
வெறு வெளியான வானத்திடையே
தியானத்தின் ஆழ்ந்ததொரு பேரமைதி;
வரிசையாகத் தாரகைக் கூட்டங்கள்
மௌனச் சீடர்களென வீற்றிருந்தன.
சட்டென விழிப்புற்றது
தனிமை மிக்க அவ்வாசிரமம்.
கௌதம முனிவர் தொடங்கினர் உரையை:
'குழந்தைகளே, பிரம்மத்தைப்பற்றிச்
சொல்லுகிறேன், கேளுங்கள்'.

அவ்வேளை, அருக்கியம் ஏந்தியே
சிறுவன் ஒருவன் வந்தான், முன்றில்முன்.
முனிவரது மலரடியில் பூவும் கனியும் வைத்து
பக்தியுடன் வணங்கிக் குயிற் குரலில்
அமிழ்தினும் இனிமையாம் மொழியில்,
'பகவரே, பிரம்மத்தை அறிய ஆவல் எனக்கு;
தங்களை அண்டினேன்; இக் கல்வியைப் புகட்டுவீர்.
நாணல் தடத்தில் வாழும் சிறுவன் நான்.
சத்தியகாமன் என் பெயர்' என்றனன்.
இது கேட்டு, முறுவலுடன் முனிபுங்கவர்
அவனை நோக்கி அன்பு ஊறு மொழியில்,
'நலமே பெருகுக உனக்கு, ஒள்ளியனே!
உன் கோத்திரம் என்னவோ, குழந்தாய்?
அந்தணனுக்கே உரியது பிரம்மத்தின் அறிவு' என்றார்.
மெல்லவே புகன்றான் சிறுவனும்:
'பகவரே, கோத்தரமதை அறியேன்;
அன்னையைக் கேட்டு வருகிறேன் நாளை.
அநுமதி தாரும்.'
இது கூறியதும், முனிவர் பதமதில்
வணங்கிச் சென்றான் சத்தியகாமன்.
இருள் போர்த்த காட்டகத்தைக் கடந்தே,
சுருங்கித் தெளிந்து ஊரும் ஆற்றைத் தாண்டி
அக்கரை அடைந்து, மணல் மேட்டில்
கண் துயிலும் ஊர்ப் புறத்தே
அன்னையின் குடிலுள் நுழைந்தான்.

மாலை விளக்கு எரிந்துகொண் டிருந்தது அதனில்;
மகன் வரும் வழியை எதிர்நோக்கி
அன்னை ஜபாலை வாயிலில் நின்றிருந்தாள்.
கண்டதும், மகனை அணைத்து உச்சி மோந்து
நலனை வினவினுள்.
'அம்மா, என் தந்தையின் பெயர் யாது?
எக்குலத்தில் என் பிறப்பு?
தீட்சை பெறக் கௌதமரிடம் சென்றேன்.
''பிரம்ம வித்தையைப் பெற
அந்தணன் ஒருவனே உரியன், குழந்தாய்''
என்ருர் குரு;
என் கோத்திரம் என்ன, அம்மா?' என்ருன் சிறுவன்.
மெல்லிய குரலில் குனிந்த தலையுடன் அன்னையும் கூறுவாள்:
'இளமையில் வறுமைத் துயரால்
பல்வேறிடங்களில் பணியாற்றிய நான்
பெற்றெடுத்தேன் உன்னை...
கணவன் இராத ஜபாலையின் மடியில்
கண் விழித்தாய் நீ; உன் கோத்திரமதை அறியேன்.

மறு நாள், தவ வனமதில் மரங்களின் முடிமிசை
எழிலுடை இளம் பரிதியின் ஒளி படர்ந்தது.
தாபதச் சிறுவர்கள் யாவரும்,
மென்பனி தோய்ந்த இளங்கதிரினம் போல்
பக்தியின் கண்துளியில் குளித்துப் புண்ணியம் பொலிய
இளங்காலையில் நீராடித் தண்ணிய ஓவியம் என
ஈரச் சடையுடன் ஒள்ளிய மேனியராய்,
கிழட்டு ஆலமர நிழற்கீழ்க் கௌதம முனிவரைச்
சூழ்ந்தே அமர்ந்தனர்.
பறவைகளின் தீம்பாட்டும், வண்டினம் முரலும் ஒலியும்,
நீரோட்டத்தின் சலசலப்பும், இளமைக் குரல்களும்,
மறையொலியும் ஒன்றியே அமைதி நிலவியது அங்கே.
அவ்வேளை, சத்தியகாமனும் அணுகினன் முனிவரை;
அடிமிசை வணங்கி, விழிகள் அகன்றிட
அவரையே நோக்கி வாளா நின்ருன்.
ஆசிரியரும் ஆசி கூறி அவனை நோக்கி,
'உன் கோத்திரம் யாது, கண்ணுக்கினியோய்?' என்றலும்,
சிறுவன் உள்ளத் தெளிவுடன் நிமிர்ந்து கூறுவான்:
'என் கோத்திரம் எனக்குத் தெரியாது;
அன்னையைக் கேட்டேன்;

''எத்தனையோ இடங்களில் பணி புரிகையில்
உன்னைப் பெற்றெடுத்தேன். கணவன் இராத
ஜபாலை மடியில் நீ கண் விழித்தாய்.
உன் கோத்திரம் எங்ஙனம் அறிவேன்'' என்றாள்.'
அவன் சொன்னதைக் கேட்டு மாணவர்கள் யாவரும்
ஈக்கள் மொய்த்த தேன் கூட்டிலெழும் ஓசைபோல்
மந்தணமாய்த் தமக்குள் முணுமுணுத்தனர்;
சிரித்தனர் சிலர்; 'இதென்ன மோசம்' என்றனர் சிலர்.
'ஆரியனல்லாதான் அகந்தையைப் பார்' என்றனர் சிலர்.
தம் இடத்தை விட்டெழுந்து கௌதம முனிவர்
கைகளை விரித்துச் சிறுவனைத் தழுவி,
'பிராம்மணனல்லாதவன் அல்லன் நீ...
உண்மை அந்தணனன் நீயே;
உண்மைக் குலத்தில் உதித்தவனே' என்றார்.

(28 பிப்ரவரி, 1895) —சித்ரா

## 18

## பழைய வேலையாள்

பூதம் போல் உருவம் அவனுக்கு;
அவன் மூளையில் எது சொன்னாலும் ஏறாது.
பொருள் ஒன்று காணாது போனாலோ என் வீட்டுக்காரி,
'யார் இருப்பார், இந்தத் திருடன் கிஷ்டப் பயல்தான்' என்பாள்.
அவன் எழுந்தாலும் உட்கார்ந்தாலும் வசவும் திட்டுந்தான்.
காதில் விழுந்தாலும் கேட்காதது போல் இருந்திடுவான்;
ஊதியத்தை விட அவன் பெறும் உதையே அதிகம்.
மூளையில் சற்றும் உறைக்காது; அதட்டியே நான்,
'எங்கேயடா தொலைந்தாய், கிஷ்டா?' என்றே கூவியும்
மறுமொழி பகரான்; கண்ணில் படவும் மாட்டான்.
வேலை ஒன்று இட்டால் மூன்றாய் அதைப் பெருக்கிடுவான்;
மூன்று பொருள் அவனிடம் தந்தால் ஒன்றே மிஞ்சிடும்;
மற்றவை எங்கே போய்விடுமோ, தெரியாது.
காலையில்லை, நற்பகலில்லை - படுத்ததும் உறங்கிடுவான்.
'கழுதை, சனியன், சோம்பேறி' என்றெல்லாம்
வைதாலும் அவன் கதவருகில் வந்து பல் இளித்திடுவான்.
அதைக் காண எனக்குக் கோபம் தலைக்கேறும்;
ஆயினும், அவனை விடவே எனக்கு மனம் வராது.
பழைய வேலையாள் அல்லவா அவன்!

என் வீட்டுக்காரி கோபமே உருவாய்,
'என்னுல் ஆகாது, இது உங்கள் வீடு.
கிஷ்டனேடே இருங்கள்; எனக்கு அடங்காதவன் அவன்;
துணியோ மணியோ எதுவும் காணுமல்
எங்கே போகின்றதோ; காசுமட்டும்
தண்ணீர்ப்பாடாய்ச் செலவாகிறது.
கடைக்குப் போனுல் அவன் போனவன்தான்;
நாள் முழுவதும் வீட்டில் அவனைக் காண்பதரிது.
இந்தக் கிஷ்டனைத் தவிர ஆள் எவனும்
கிடைக்காமலா போவான்' என்பாள் வீட்டுக்காரி.
இதைக் கேட்டு நான் விரைவாய் எழுந்து
ஓடியே அவன் சிண்டைப் பிடித்து,
'உதவாப் பயலே, வெளியே செல் இப்பொழுதே!' என்பேன்.
மெல்ல நழுவிச் செல்வான் தன் தவறுதனை உணர்ந்து.
மறு நாள் எழுந்து பார்க்கையில் அந்த உலக்கைக் கொழுந்து
மானம் துளியும் இராமல், மலர்ந்த முகத்துடனே
நெஞ்சில் கலக்கமின்றியே நிற்பான் என் முன்,
உக்காக் குழலினை உவப்புடன் நீட்டியவண்ணம்.
நெட்டித் தள்ளினும் நிற்கும் அவனை என்ன செய்வது?
என் பழைய வேலைக்காரன் அல்லவோ அவன்!
அவ்வாண்டும் எதிர்பாராமல் தரகில் நல்ல வருவாய்;
பிருந்தாவனம் சென்று வரலாமென்று நினைத்தேன்.
மனையாளும் என்னுடன் வர விருப்பம் தெரிவித்தாள்.
'பதிக்கு வரும் புண்ணியம் பத்தினிக்குந்தானே?
வீண் செலவு எதற்கு?' என்று விளக்கம் சொன்னேன்.
மூட்டை முடிச்சுகளைக் கட்டினுள் கயிற்ருல்.
கைவளை ஒலிக்கப் பெட்டியில் வைத்தாள் வேண்டியதை.
அழுத கண்ணீருடன் கூறினுள் என் வீட்டுக்காரி:
'போகிற இடத்துக்குமா இவனை இட்டுச் செல்வது?
சொன்னேன் பாரும்: இவனுல் தொல்லையே நேரும்.'
'அட ராமா, நிவாரணன்தான் என்னுடன்
வருகின்ருனே' என்றேன்.
ரெயில் வண்டி விர்ரென ஓடியது; வர்த்தமானில்
அந்தத் தடிப் பயல் கிஷ்டன் துளியும் கலங்காமல்
உக்காவில் புகையிலை திணித்துக்
கொணர்வதைக் கண்டேன்.
என்ன திமிர் அவனுக்கு! இதை எங்ஙனம் பொறுப்பது?
நான் நெட்டித் தள்ளியும் அவன் உவப்புடன் இருக்கின்ருனே;
என் பழைய வேலைக்காரன் அல்லவா அவன்!

திருத்தலமதை அடைந்ததும் பண்டாக்கள்
என் முன்னும் பின்னும் எங்கிலும் சூழ்ந்தனர்.
என் உயிரையே வாட்டி எடுத்துவிட்டனர்.
நாலைந்து பேருடன் நட்புரிமை கொண்டு,
வந்து தங்கினேன், வாகான விடுதியில்.
நாட்கள் தென்பில் ஊர்ந்திடுமென்றே நம்பினேன்.
அந்த விரஜபாலர் எங்கே? வனமாலா எங்கே?
வனமலர் அணிந்த அந்த அரிதான் எங்கே;
அவர்கள் எங்கேயோ! நான் கண்டதென்ன?
வேனிலில் வரும் வைசூரியே; அந்நோய் பற்றியது என்னை;
நழுவினர் ஒவ்வொருவராய் நண்பர் என்னை நீத்தே;
தனி வீட்டில் நான் ஒருவனே வாதைப் பட்டேன்.
இரவும் பகலும் தீனக் குரலில் கூப்பிடுவேன்;
'கிஷ்டா! என் பக்கத்தில் இரு; போகாதே!
இந்த வெளியூரில் வந்தா நான் சாவது?' என்றேன்.
நோக்குவேன் அவன் முகத்தை; என் பெருந்துணை அவனே.
என் தலைப்புறம் பிரியாமல் கணமும் நின்றிடுவான்;
என் பழைய வேலைக்காரன் அல்லவா அவன்!

வாயில் நீர் விடுவான்; கருத்துடன் என்னைக் கவனிப்பான்;
மெல்லத் தடவித் தருவான், எரிச்சல் தணிய;
தன் வயிற்றுப்பாட்டையும் மறந்தே போவான்;
கண்ணயராமல் என்னை அவன் காத்திடுவான்.
'எசமானே! ஒன்றும் பயமில்லை; குணமாகிவிடும் உடம்பு:
ஊருக்குத் திரும்புவீர்; அம்மாளைக் காண்பீர்' என்பான்.
உடல் தேறி எழுந்தேன், அவனைப் பற்றியது அக் கடுநோய்
கொப்புளம் கறுத்தது; நினைவை இழந்தான்;
நாடியும் அடங்கியது; கிஷ்டன் போய்விட்டான்!
இதுவரை நானே தள்ளப் பார்த்தேன் அவனை;
என்னுடன் நெடுநாள் வாழ்ந்த அவன் இன்றில்லை.
என் பழைய வேலைக்காரன் அல்லவா அவன்!

(23 பிப்ரவரி, 1895) —சித்ரா

## 19

## ஊர்வசி

*அன்னையும் அல்லை, கன்னியும் அல்லை, மணமகளும் அல்லை நீ;*
*கட்டழகியே, காமர் வனப்பினளே,*
*நந்தனக் காவில் உலவிடும் ஊர்வசியே!*
*பொன் ஆடை புரள அந்தியாகிய நங்கை புல் வெளியிடைக்*
*களைப்புறு மேனியளாய்க் கடுகியே இறங்கும்பொழுது,*
*மனையின் மாடத்துள் நீ மாலை விளக்கு ஏற்றுவது ஏனோ?*
*சீரடிகள் தடுமாற, நெஞ்சம் திடுக்கிட,*
*தரைமிசைக் கண் ஓடக்*
*குமிழ்ச் சிரிப்புடன் பூம்பள்ளியை நோக்கி*
*நள்ளிரவிலே நீ போகாததும் ஏனோ?*
*புலரும் பொழுதென ஒளி மறைவு அற்றவளே;*
*நாணிக் குறுகாதவளே!*

*காம்பிராத மலரெனத் தானே தோன்றிப் பூத்து விளங்கும் நீ*
*என்று தோன்றியவளோ, ஊர்வசியே!*
*ஊழித் தொன்மையில் ஓர் இளவேனிற் காலையிலே*
*கடைந்தெழு கடலில் பிறந்தாய் நீ;*
*அமுத கலசம் வலத்திலும் நஞ்சின் கலசம் இடத்திலும்*
*கைகளில் ஏந்தியே வந்தாய்!*
*படம் எடுத்தாடும் நாகம் பல கோடி*
*மந்திரச் சொல்லுக்கு மயங்குதல் போல்*
*திரைபடு மாகடல் உன் அடிமிசை வணங்கி விழுந்தது;*
*முல்லை மலர்போலும் தூய மேனிப் பொலிவுடையாய்,*
*தேவர்கோனும் தலை தாழ்த்திடும்*
*குற்றமில்லாப் பண்பினுய் நீ!*

*முகைப் பருவமான இளம் பாவையென*
*நீ எந்நாளும் இருந்ததில்லையோ?*
*இளமை அழியாத ஊர்வசியே!*
*இருள் செறியும் முந்நீர் ஆழத்துள்*
*யார் இல்லத்தில் தனியாய் வ்ளர்ந்தவள் நீ?*
*உன் சிறுவயதில் மணியுடனும் முத்துடனும் விளையாடினையோ?*
*கடல் அலை தாலாட்ட மணியொளிர் அறைதனில்*
*மாசறு முறுவல் முகந்தனில் தவழ,*
*பவள ஊசலில் படுத்துக் கண் வளர்ந்தனையோ?*
*இப்பூவுலகில் விழித்தெழுகையில்*

இளமை எழிலுடன் தோன்றினையோ,
முற்றும் மலர்ந்தவளே!

ஊழ் ஊழி இவ்வுலகு போற்றும் செல்வி நீயே.
எழில் மேவும் ஊர்வசியே!
முனிவரும் தவம் கலைந்து அதன் பயனை
உன் திருவடிமிசை வைத்தனரே.
உனது கடைக்கண் பட்டே
மூவுலகிலும் பொங்கியது இளமை.
தேன்செறி நறுமை ஏந்தி
நாற்றிசையும் மெல்லிளங்காற்று வீசியது.
களிவண்டெனக் கவிவாணர் மயங்கி
வெறிகொள் பாட்டுடன் திரிவர், உன்னைச் சுற்றி.
மேலாடையினை வீசி மெல்லிய சதங்கை ஒலித்து
மின்னென மறைவாய் நீ!

அமரர் அவைதனில் புளகமெழ உவகையுடன் நீ நடமிடுகையில்
அலையென வளையும் அழகுடையாய் நீ, ஊர்வசியே!
சந்தச் சதிசேர மாகடலும் ஆடியது அலைக் கை கொட்டி;
பைங் கதிர்கள் மலிய இப் பாரின் துகிலும் அசைந்தது காண்!
நகிலிடைப் பூண்ட உனது ஆரம் விண்டே அண்டமதில்
தாரகை மணிகள் சிதறித் துடித்தனவே!
திடுமென ஆடவர் உடலில் இரத்தம் துள்ளிப் பாய்ந்ததுவே.
திசைமுடிவின் மேகலை, உன் இடையில்
மெல்லக் கழன்றது காண்;
துகில் புனையாத் தூய மேனியளே!

அமரர் உலகின் உதய மால்வரை முளைக்கும் விடியற்பாவையே!
உலகினை மயக்கிடும் ஊர்வசியே!
வையத்தவர் பெருக்கிய விழிநீரால்
தூய்மை அடைந்தது, உன் தளிர் மேனி;
மூவுலகின் இதயக் குருதியால் செம்மை செறிந்தது,
உன் செவ்விய பாதம்.
விரிகூந்தலாளே, புனையா மேனியளே,
இம்மலர்தலை உலகின் உள்ளத் தாமரையில்
மெல்லத் திருவடி வைப்பவளே!
கற்பனை நெஞ்சில் என்றும் காட்சி தருபவளே;
கனவிடைக் காணும் பெறுதற்கரியவளே!

அதோ, செவியில் கொள்வாய்:
எங்கும் உன்னைத் தேடி அலைந்தே

வானும் வையமும் ஓலமிடுகின்றன.
இதைக் காதில் கொள்ளாக் கொடியவளே, ஊர்வசியே!
தொன்மையில் தோன்றிய அப்பேரெழில்
மீண்டும் இவ்வுலகில் வந்திடுமோ?
ஆழ்கடலிலிருந்து ஈரக்கூந்தலுடன்
மீண்டும் எழுந்து வருவாயோ நீ?
அந்தத் தொன்மையான விடியலில்
உனது செவ்விய மேனி தோன்றலும்
உலகத்தவர் கண்ணிரை பட்டே
உன் அங்கமெல்லாம் அழுதன காண்,
மழைத் துளியெனவே.
பெருவாரிதி திடுமெனத் தன் அலையிசை எழ
ஆரவாரம் செய்ததுவே.

வாராளே! மீண்டும் இவ்வுலகினில் வாராளே
மறைந்த போன அம்மதியம்; வாராளே
அத்தமனக் குன்றில் வாழும் அந்த அருமை ஊர்வசி!
புவியில் இன்று இளவேனில் தரும் இன்பத்தில்
எவரது பிரிவின் பெருமூச்சோ வருவதை உணர்ந்திடு.
நிறைமதி ஒளிரும் நீல இரவிலே
எங்கும் இன்பச் சிரிப்புப் பொங்குகையில்
உள்ளமுருக்கும் குழல் இசையெனப்
பழைய நினைவு பைய வருகிறது;
கண்ணீர் முத்தம் சொரிகிறது.
இப்புலம்பலிடை நம்பிக்கை ஒன்று
சுடர் விடுகிறது;
கட்டுக்கு அடங்காதவளே!
(18 டிசம்பர், 1895) —சித்ரா

## 20

# விண்ணுலகினின்று விடை பெறுதல்

வாடிவிட்டது, கழுத்தில் அணிந்த மந்தார மாலை;
மகேந்திரனே! மழுங்கிய நெற்றியில்
ஒளிர்ந்த திலகப் பொட்டும் அழிந்தது காண்!
குன்றிவிட்டது எனது புண்ணியத்தின் வலிமை.
தேவ தேவி கணத்தவரே! விண்ணுலகை விட்டு
இன்று நான் விடைபெறும் நாள்.
வானோர் உலகினில் பல கோடி ஆண்டுகளைக்

கழித்தேன், அமர வாழ்வினை நடத்தி.
இன்று நான் பிரியும் நேரம், வானவர் கண்களில்
நீர் துளிக்கும் என்று நினைத்தேன்;
ஆனால் துயரோ, உள்ள நெகிழ்வோ இல்லாமல்
இன்பம் குலவும் இப்பொன்னுடு
என்னை ஏறெடுத்தும் பாராமல் இருக்கிறது.
அதன் கண்ணிமைப்பின் நேரங்கூட இல்லை,
இந்நூறாயிரம் ஆண்டுகள் நான் வாழ்ந்த வாழ்வு!
தன் கிளையினின்று உதிரும் ஒரு சருகுக்காக
அரசமரம் எங்காவது துயரால் துடித்திடுமோ?
கணக்கிலா விண்மீன்கள் இடம் பெயர்ந்து
கணமதில் ஒளியிழந்து வானுலகம் விட்டுப்
பெரும்பாழிடை விரைந்து மறைவதையொத்து
முடிவிலா இவ்வாழ்வில் பிறப்பு இறப்பு எனும்
பெருஞ் சுழலில் சிக்கிய எங்கள் பொருட்டுத்
துளியும் துயர் கொள்ளாது இப்பொன்னுலகம்.
இப்பிரிவுத் துன்பத்தின் நிழல் சற்றே தோன்றிடினும்
பொன்னுலகின் சுடரொளி மண்ணுலகைப் போல்
கண்பனித் திரையால் மங்கிடுமே.
நந்தனக் காவும் நெடுமூச்செறிந்து சலசலத்திடுமே.
வானாறு (மந்தாகினி) இழுமெனத் தண்குரலால்
நெஞ்சை அள்ளும் இக்கதையினைத்
தன் கரையெங்கும் ஒலித்துச் சென்றிடுமே.
பகல் முடிவில் நண்ணும் அந்தி நல்லாள்,
ஆளில்லாத் திசைமுடிவை நோக்கி
வெறுப்புற்றே ஒதுங்கிடுவாள்.
நள்ளென்னும் யாமம் சிள்வண்டின் ஒலி
தாரகை அரங்கினில் பாடல் இசைத்திடுமே.
அமரர்புரியில் ஆடல் செய்
மேனகையின் கால் சதங்கையில் தாளம் தவறிடுமே.
ஊர்வசி தன் நகிலிடைத் தாங்கித்
தடவும் வீணையில், உளமதை உருக்கும்
சுருதியின் மூர்ச்சனை துடித்திடுமே.
கண்ணீர் விட்டறியாத் தேவர்களின் விழிகளிலும்
காரணமின்றி நீர் ஊறிடுமே.
தேவர்கோனுடன் சம ஆசனம் கொண்ட
சசியும் தன் கணவன் கண்களில்
வேட்கை நிழலாடுவதைக் காண்பாளே.
நடுநடுவே காற்று விசையில்
மண்ணகத்தின் உயிர்ப்புப் பொங்கி வந்திடுமே.

நந்தன வனமதில் வாடாமலர்கள் உதிர்ந்திடுமே.
தேவர்களே, பொன்னுலகிலேயே இருங்கள்;
சிரித்த முகமாய் அமுதினைப் பானம் பண்ணுவீர்.
அது உங்களது இன்ப நிலையம்;
நாங்களோ தங்க வந்தவர்கள் அங்கே.
மண்ணுலகம் பொன்னுலகம் அன்று;
அது எங்கள் தாயகமே.
சில பொழுதாயினும் அதனிடைத் தங்கியவர்
பிரிந்து செல்வதைக் கண்ணுற்றால்
கண்ணீர் பெருக்கிடுமே மண்ணகம்;
சிறுமைப் பட்டவர், குன்றிப் போனவர்,
மாண்பினை இழந்தவர், தீவினை செய்தவர்,
குற்றம் இழைத்தவர் யாவரையும்
தன் மென்மை மார்பகத்துள்ளே
அது அணைத்திட விரும்புமே.
புழுதி நிறைந்த தன் மேனியால் தொட்டு
உடலுக்கு இன்பம் பயக்கும் நம் அன்னை அது.

உங்கள் பொன்னுலகில், பெருகியே
அமுதம் ஓடட்டும்.
இன்பமும் துன்பமும் ஒன்று கலந்த
அன்பின் ஒழுக்கு, மண்ணுலகினில்
நிலைத்தே இருக்கட்டும்; அது
பூதலமதைக் கண்ணீராட்டிப்
பொன்னுலகின் பல துண்டுகளைப் படைத்து
என்றும் பசுமையாக்கிடுமே.
சுரமகளிரே, காதலின் பெருக்கினால்
உங்கள் கண்ணொளி என்றுமே
மங்காது இருக்கட்டும்.
விடை பெற்றுக்கொள்கிறேன்.
எவர் பொருட்டும் துயர் கொள்ளாதவர் நீங்கள்.

மண்ணுலகினில் எளியவர் இல்லத்தில்
என் காதலி பிறப்பாளாயின்,
ஆற்றங்கரையை அடுத்து
எங்கோ ஓர் ஊரின் மூலையில்,
அரசமரத்து நிழல் படும் சித்திரக் குடிலில் -
பேதை, என் பொருட்டுத் தன் உள்ளமதில்
இன்னமுதைத் தேக்கிடுவாள்.
இளவயதில் ஆற்றங்கரையில் அவள்,

சிவலிங்கம் பிடித்து, விடியற் பொழுதில்
என்னைக் கணவனாய்ப் பெறவே
வரமது வேண்டிடுவாள்.
அந்தி நெருங்கியதும், ஓடும் நீரில்
அகல் விளக்கினைச் செலுத்திடுவாள்.
துறையில் தனிமையில் நின்று
தன் பாக்கியம் எவ்வாறாகுமோ என்றே
உள்ளம் நடுங்கச் சுடரினை நோக்கிடுவாள்.
நல்லதொரு வேளையில் மடந்தை அவள்,
தலை குனிந்து, நெற்றியில் சாந்தம் துலங்கிட
இன்குழலிசையுடன் எனது இல்லம் புகுவாள்.
பின்னர் நல்லது பொல்லாதது இவற்றிற்கு இசைந்தே
கையில் கங்கணம் பூண்டு, அவள்
மங்கலக் குங்குமச் சிவப்பு வகிரிடை ஒளிர
என்னுடன் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கேற்று
என் வீட்டு இலட்சுமியாகி,
எனது வாழ்வெனும் கடல்மிசை எழுந்திடும்
நிறை மதியம் ஆவாள்.
தேவர்களே, என்றாவது ஒரு நாள்
நடு இரவினில் சட்டென விழித்தபொழுது,
பஞ்சணைமீது படியும் பால்நிலவைக் காணுகையில்
பொன்னுலகின் நினைவு, கெட்ட கனவென வந்திடுமே;
கண்ணயர்ந்திருப்பாள் என் காதலி;
படுக்கையில் அவள் மூங்கில் போன்ற தோள் துவளும்;
நாணத்துக்கிடமாகிய துகிலின் முடி
தளர்ந்திருக்கும் அவள் இடைதனில்;
திடுமெனக் கண்ணைத் திறந்து
அன்புகனியும் முத்தம் ஈந்து,
தளிரிளங் கொடியென
என்னை மார்போடு அணைப்பாள், அம் மெல்லியலாள்.
பூமணம் ஏந்தியே தென்றல் உட்புகுமே;
தொலைவில் தோப்புதனில் வாழும் குயில் ஒன்று
கண்ணயராது அரற்றும்.

எளிமை மிக்கவளே! துயர்க் கண்ணீர் உகுத்திடும்
மாசின் உருவான என் தாயகமே, ஏ மண்ணுலகே!
பல நாள் கழித்து உன்னை நினைந்தே
நான் இன்று புலம்புகின்றேன்.
பிரிவின் மெலிவால் என் விழிகளில்

நீர் நிறைவதையொப்ப இப்பொன்னுலகு,
சோம்பல் கற்பனையில் காணும் நிழல் ஓவியமென
எங்கோ மறைந்ததுவே!
உனது நீலவானம், உனது சுடரொளி,
உன் மக்கள் தொகுதி வாழ்ந்திடும் இடங்கள்,
திசைவரை நீளும் வெளிகள், ஆற்றங்கரை மேடு,
நீலஞ்செறிந்த நெடுங்குன்றுகள், அவற்றின் முடிமீது
படர்ந்த வெண்பனிக் குவை, மரங்கள் மருங்கே
மெல்ல எழும் விடியற் காட்சி,
வறட்டாற்றிடையே விழி தாழ்த்தி
இறங்கிடும் செம்பொன் மாலை-இவை யாவும்,
ஆடியில் காணும் நிழலேபோல்
இக்கண்ணீர்த் துளியில் ஆடிடுமே.
மகனை இழந்த தாயே, நான் பிரிந்து சென்ற
அக் கடை நாள் அன்று நீ பெருக்கிய சோகக் கண்ணீர்
உன் நகில்தனைக் குருகு பாயும் தடமாக்கியது.
இன்று அது உலர்ந்து போய்விடும்.
உன் இடத்திற்கே நான் திரும்பி வருகையில்
உன் இரு கையாலும் என்னைத் தழுவிக்கொள்வாய்.
இதனை எனது உள்ளம் உணர்ந்திடுமே;
மங்கலச் சங்கொலியும் முழங்கிடுமே.
உனது அன்பின் நிழலில் தங்கிட -
இன்ப துன்பம், அச்சம் அதிர்ச்சி
யாவும் இணைந்த அன்பின் வாழ்விடையே -
உன் பரந்த கூட்டினுள், உன் மக்களிடையே
மிகவும் பழகிய ஒருவனாய் என்னை நினைத்து
ஏற்பாய், அம்மா!
அதற்கு மறு நாள் தொடங்கியே,
என் தலைப்புறம் இமைப்பொழுதும் கண்ணுறங்காது,
உள்ளம் நெக்குருக, ஐயம் நெஞ்சினில் அலைத்திட
இறைவனை நோக்கிக் கலங்கும் கண்ணினளாய்,
'நான் பெற்ற செல்வமதைப் போக்கிடுவனோ?' என்றே.
சிந்தாகுலத்துடன் ஒரு பேதை கழறுவாள்.

(9 டிசம்பர், 1589) —சித்ரா

## 21

# ஜீவன தேவதை

என் உள்ளமதில் உறைவோய்,
உன் வேட்கை யாவும் தணிந்தனவா,
என் உளத்தில் நீ வந்ததும்?
இன்ப துன்பங்களைப் பலவாய்ப் பொழிந்து
கிண்ணம் வழிய உனக்குத் தந்தேன்,
திராட்சைக் கனியைக் கசக்கிப் பிழிவதுபோலே.
என் உள்ளத்தினை வருத்தியே
வண்ணம் பலவாய், நறுமணம் பலவாய்,
பண்கள் பலவாய், சந்தங்கள் பலவாய்
உனது மலர்ப்பள்ளிக்கெனத் தொடுத்து வைத்தேன்.
விருப்பென்னும் பொன்னை உருக்கி உருக்கியே
உன் கணநேர விளையாட்டிற்கென
மாறுப் புதுமை வடிவங்கள் அமைத்தேன்.

எந்த ஆசையால் என்னைத் தேர்ந்தனையோ, அறியேன்.
என்னைப் பிடித்ததா உனக்கு, வாழ்வின் இறைவனே!
எனது இரவும், என் இளங்காலையும்
எனது மென்மையும், என் செயலும்
உன் தனிமைக்கு ஏற்றனவா?
மாரியிலும், குளிரிலும், இளவேனிலிலும், முன்பனியிலும்
என் உள்ளமதில் இன்னிசை யாவும் எதிரொலித்தனவே;
உனது அரியணையில் வீற்றுத் தனிமையிலே
நீ செவி சாய்த்தனையோ?
எனது இளமையின் காவில் உலவியே
எனது மணமலரைக் கொய்து
உனது கழுத்தினில் அணிந்திடவே
இம்மாலையைத் தொடுத்தனையோ?
அன்பா, உனது கண்ணிணை பதித்து
என் அந்தரங்கத்துள் எதனைக் கண்டாயோ?
என் குறைகள், வழுக்கள், தவறுகள் இவற்றை
மன்னித்து நீ அருள் கூர்ந்தனையோ?
உனக்கு நான் பூசனை ஆற்று நாட்கள்,
பணிவிடை செய்யா இரவுகள்
எத்தனையோ வந்து போயின, இறைவா!
உன்னை அருச்சிக்க இருந்த மலர்கள்
தனிமை சூழ் வனமதில் உதிர்ந்து போயினவே.
எனது வீணையிலே இசை கூட்டிய நரம்புகள்

அடிக்கடிச் சுருதி இறங்கிப் போயினவே.
ஏ புலவனே! நீ அமைத்த பண்ணிலே
என்னால் பாடத்தான் முடியுமோ?

உனது பொழிலிடையே புனலைப் பாய்ச்சப் போய்
நிழலில் படுத்து நான் கண்ணயர்ந்தேனே;
மாலைப் பொழுதில் எனது கண்மல்கிய நீரை
உனக்கெனக் கொண்டு வந்தேன்.
எனக்கு உள்ளன யாவும் தீர்ந்து போயினவா,
என் உயிர்க்கரசே?
எழில், இசை, உணர்வு, விழிப்பு,
யாவும் தீர்ந்து போயினவா?
தளர்வுற்றன, நெருங்கித் தழுவியன வெல்லாம்;
உணர்வின் வெறியில்லை என் முத்தமதில்;
என் வாழ்வின் சோலையில், இரவுக் குறியிடை
இவ்விடியல் ஏன் தோன்றியதோ?
இன்றைய நாள் உன் கொலுவைக் கலைத்தே
புது உருவினைக் கொணர்வாய்;
கொணர்ந்திடு புதுப் பொலிவினை;
என்றும் பழமையான என்னைப்
புதுமையாக்கியே மீண்டும் ஏற்பாய்!
புது வாழ்வின் மங்கல நாணினைப் பூட்டியே
புதிதாய் என்னை மணங்கொள்வாயே!

(11 பிப்ரவரி, 1896) —சித்ரா

## 22

# இரவிலும் இளங்காலையிலும்

நேற்று இனிமை செறிந்த இரவினில்
நிலவு பொழியும் நள்ளென் யாமம்,
புதர்சூழ் தோப்புதனில், இன்பம் நுரைத்தெழும்
இளமை மதுவினை உன் வாய் அருகில் வைத்தேன்.
என் கண்ணையே கூர்ந்து நோக்கினை;
மது வழியும் கிண்ணத்தை
மெல்லப் பற்றினை மென்கையால்;
கொவ்வைச் செவ்வாய் இதழ் வைத்தே
முறுவல் பூத்துப் பருகினை.

உன்னை மூடியிருந்த மறைவினை
இழுத்தே நான் எறிந்துவிட்டேன்.
தாமரைப் போதென மெல்லிய உன் கையினை
இறுத்திக் கொண்டேன், என் மார்பிடை வைத்து.
உன் விழிகள் கூம்பினவே; அச்சிலிர்ப்பில்
வாய்திறந்து பேசவுமில்லை நீ.
என் அணைப்பினை மெல்லத் தளர்த்தி
அவிழ்த்திட்டேன் உன் கூந்தல் கொடியை.
நிலம் நோக்கும் உனது முகத்தை, என் மார்பதனில்
மெல்லவே பதித்துக்கொண்டேன்.
அன்பால் நான் செய்தன யாவும் நீ பொறுத்தாய், தோழி!

குமிழ்த்தது முறுவல் உன் முகத்தில்;
இன்று, தூய மென்காற்று வீசும்
அமைதி நிறை விடியலில்
ஆள் இல்லா ஆற்றங்கரையில்
புனலில் குடைந்தாடி, பூந்துகில் அணிந்து
மெல்லப் போகின்றாய்.
உனது இடது கையிலே பூக்குடலை ஏந்தி
மலர்கள் எத்தனை வகை கொய்தாயோ?
தொலைவில் கோயிலில் காலை ஊதின குழல்கள்;
தூய மென்காற்று வீசும் அமைதி நிறைந்த விடியலில்
இந்த ஜான்னவி ஆற்றங்கரைதனிலே,
தேவி, உன் நெற்றி வகிரிடையே
அருண ஒளி திகழும் குங்குமக் கீற்று;
உனது இடது கரந்தனில்
இளம்பிறை நிகர்த்த சங்கின் வளையல்;
ஈதென்ன, இந்தப் புலரும் பொழுதில்
உன் மங்கல வடிவினைக் காட்டுகிறாய் எனக்கு!
இரவில் இனியவளாய்த் திகழ்ந்தே
இதய அரசியாய் அணுகுகிறாய் நீ;
காலையில் புனிதத் தெய்விக உருவில்
முறுவல் காட்டி நிற்கிறாய் என்முன்.
தூய மென்காற்று வீசும்
அமைதி நிறைந்த விடியலில்
ஆள் இல்லா இவ்வாற்றங்கரைதனிலே,
இன்று, தொலைவில் நின்றே நான் தலைதாழ்த்தி
வியப்புடன் உன்னை நோக்குகின்றேன்.

(12 பிப்ரவரி, 1896) —சித்ரா

## 23

# அக்காள்

ஆற்றங்கரைதனில் கல்லறுக்கும்
வேற்றூர் ஏழைக் குடிமக்கள்;
சின்னஞ்சிறிய அவர்களது பெதும்பைப்பெண்
துறைக்கு வருவதும் போவதுமாய் இருப்பாள்.
தட்டு, குண்டாம், சருவம் துலக்கிடவே
பன்முறை ஓடியே வருவாள் பகலில்.
பித்தளைத் தகழியில் உராய்ந்து ஒலித்திடும்,
கிணிங் கிணிங்கென அவள் கைவளையல்;
மொட்டைத்தலையன் அவளுடைய குட்டித்தம்பி-
சேற்றில் அளைந்தே அம்மணமாய்
வீட்டில் வளர்த்திடும் பறவைக் குஞ்சென-
வந்திடுவான் அவளைப் பின் தொடர்ந்தே.
அக்காளின் மருட்டலுக்கஞ்சியே அவன்,
பொறுமையாய் மேட்டில் காத்திருப்பான்.
தலையில் குடமும், இடையில் சருவமும் கொண்டு
சிறுமி ஏகுவாள்; சிறுவனது கைவிரல் பற்றி
தாயின் இடத்தை அன்புடன் நிரப்பி
வளைந்தே போவாள், வேலைப்பளுவால்
அந்தச் சிறுவனின் குட்டி அக்காள்!

(2 ஏப்ரல், 1896) —சைதாலி

## 24

# அவ வேளை

பையவே மாலைப்பொழுது வந்திடினும்
குறிப்பால் இசை யாவும் நின்றிடினும்
பரவிய வானில் பகலொளி மறைந்திடினும்
உடலில் உனக்கு உளைப்புத் தோன்றிடினும்
எண்திசையும் கருமையில் மறைந்தே
அவமே செய் மந்திரம் உரைத்திடினும்
பறவையே, என் அருமைப் பறவையே,
குருடானாலும் நீ உன் சிறகை மூடாதே!

வனமதில் மென்தளிர் கொஞ்சிடும் ஒலியன்று;
பாம்பு மூச்செறிவது போல, இதோ கடலின் கொந்தளிப்பு;

முல்லைச் சிறுமலர் செறிந்த பசும் புதர் அன்று இது;
நுரைத்தெழும் அலையின் கோலாகலமே!
பூ இலை மலிந்த அக் கானல் கரை எங்கே?
மோட்டுக் கிளையிடை நீ வாழும் கூடுதான் எங்கே?
பறவையே, என் அருமைப் பறவையே
குருடானாலும் நீ உன் சிறகை மூடாதே!

உன் எதிரே எல்லையில்லா இருள்விரி இரவு;
தொலைவில், விடியல் துயிலும் அத்தமனக் குன்று.
மூச்சை ஒடுக்கி அசையாமல் வீற்றே
விரையும் பொழுதினை உலகம் கணக்கிடுகிறது.
கரையிலா இருட்டினை நீந்தித் திசைமுடிவில்
மதியின் இளங் கீற்று மெல்லத் தோன்றிடுமே.
பறவையே, என் அருமைப் பறவையே,
குருடானாலும் நீ உன் சிறகை மூடாதே!
மேலே வானில் மீனினம் விரல்காட்டி
ஏதோ குறிப்பினை உணர்த்திடுமே.
மறலியின் நிழல் கவிந்த கடலின் திரைகள்
உன்பால் தாவி உறுமிடுமே.
வா வா என்றே தொலைவில் கரைமிசை
உருக்கம் தோயக் கூவுவது யாரோ?
பறவையே, என் அருமைப் பறவையே,
குருடானாலும் நீ உன் சிறகை மூடாதே!

அச்சம் இல்லை; ஆசையோ பாசமோ
நம்பிக்கையுமில்லை; வெறும் மருளே யாவும்.
மொழியுமில்லை; வீணாய் அழுவதுமில்லை;
இல்லமும் இல்லை; பூமலிந்த படுக்கையும் இல்லை;
உனக்கு உள்ளது சிறகு ஒன்றே.
நீ பறந்திட உள்ளது வானவெளி ஒன்றே.
விடியல் நேரம் வழியில் அடர்இருள் தோன்றிடுமே.
பறவையே, என் அருமைப் பறவையே!
குருடாயினும் நீ உன் சிறகை மூடாதே!

(23 ஏப்ரல், 1897) —கல்பனா

## 25

# நழுவிய சுபவேளை

தலைப்புறம் இருந்த தீபம் அணைந்தது; இளங்காலை,
குயில் கூவுவது கேட்டுக் கண்விழித்தேன்.
சாளர வாயிலில் அமர்ந்தேன் சோம்பல் மிகவே;
கலைந்த கூந்தலில் புதுமலர் சூட்டிக்கொண்டேன்.
அச்சமயம், வைகறை ஒளிபடர் பாதையில்
இளம் வழிப்போக்கன் தோன்றினன் தேர்மிசை.
அவனது பொன்முடி பளபளத்தது அவ்வொளியில்;
முத்தாரம் துலங்கும் அவன் அழகிய கழுத்தில்;
'அவள் எங்கே? அவள் எங்கே?' என்று
ஏக்கத்துடன் வினவியே என் வாயில் முன்
அவன் பரபரப்புடன் இறங்கி வந்தான்.
வெட்கம் என்னை வளைத்தது;
பேசவே வாய் இழந்தேன், அந்தோ!
'இளம் வழிப்போக்கனே! அவள்தான் நான்;
அவளே நான்.'

பசுக்கள் திரும்பிடும் மாலை, விளக்கு ஏற்றவில்லை இன்னும்.
நெற்றியில் தங்கத்திலகம் புனைந்தேன்.
சாளரத்தருகில், பொன்கண்ணாடியில் பார்த்தே
விருப்பம் போலக் குழலை வாரி முடித்தேன்.
அச்சமயம், செம்மை படிந்த மாலைப்போதில் பரந்த பாதையில்
கண்ணில் ஏக்கம் தோன்றத் தேரில் ஊர்ந்தே
அவ்விளம் வழிப்போக்கன் வந்தான்.
தேரில் பூட்டிய புரவிகள் வேர்த்து வாயில் நுரைதள்ள
அலுப்புடன் தோன்றின.
அவன் ஆடை அணிகலமதில் தூசு படிந்திருந்தது.
'அவள் எங்கே? அவள் எங்கே?' என்றே
ஏக்கத்துடன் வினவி, என் வாயிலில் வந்தான்.
வெட்கம் என்னை வளைத்ததே, அந்தோ!
பேச்சற்று நின்றேன்.
'களைத்து வரும் வழிப்போக்கனே,
அவள்தான் நான்; அவளேதான்.'

பங்குனி இளவேனில்; அறையில் ஒளிர்ந்தது தீபம்.
மங்கியே வீசிடும் பூந்தென்றல்;
வாய் ஓயாத நாகணவாய்ப் பறவையும்

தங்கக்கூட்டில் உறங்கிற்று.
வாயில் அருகே, காப்போனும்
தூக்கக் கலக்கத்தில் தயங்கி நின்றான்.
பள்ளியறையும் நாணற் புகையால்
மங்கித் தோன்றியது.
அகில் சாந்தின் இன்மணம்
என் உடலெல்லாம் கமழ்ந்தது.
மயில் வண்ணக் கச்சினை அணிந்திருந்தேன்.
பச்சை நிற மேலாடை
என் மார்பைச் சுற்றிப் பெருகியது.
ஆள் இராத அரசவீதியினை நோக்கிச்
சாளர வாயில் அருகே புழுதியில் அமர்ந்து
இரவு முழுவதும் தனிமையில் பாடினேன்:
'உள்ளம் உடைந்த வழிப்போக்கனே,
அவள்தான் நான்; அவளே நான்'.

(20 மே, 1897) —கல்பனா

## 26

## கனவு

தொன்மையில், நெடுந்தொன்மையில்
சொப்பன உலகினில், உஞ்சை நகரில்,
சிப்பிரைக் கரையில் தேடிச் சென்றேன்
முற்பிறவியில் பெற்ற என் முதல் இனியாளை.

உலோத்திரப் பூப்பொடி திமிர்ந்த முகத்தினள்,
அழகுடைத் தாமரை மலரது தாங்கிடும் கையினள்
குருந்தம் அணிந்த எழில்சேர் செவியினள்,
குரவகம் சூடிய தாழ்மென் குழலி,
ஒல்கிய மேனியள், செம்மை உடையினள்,
சிலம்பு ஆர்ப்பச் சீரடி வைப்பவள் அவள்.

இளவேனில் நாள்; அவ்வழியே நடந்தேன்.
மகாகாலக் கடவுளின் கோயிலில் அந்தியின் பூசனை:
இன்னியங்கள் அங்கே ஒலித்தன.
ஆவண வீதியில் இல்லை ஒருவரும்.
அண்ணாந்து நோக்கவும், நிலாமுற்றங்கள் மீது
இருள் முன் தோன்றும் செக்கர் வான் ஒளி;

என் இனியாள் வாழ்ந்திடும் இல்லம் அதோ
வளைந்து குறுகிடும் வழியில் தனியே உள்ளது.
சங்கும் சக்கரமும் குறியாகக் கொண்டது அதன் வாயில்;
பிள்ளைக் கனிவுடன் கைபோல் கிளையை நீட்டும்
நிழல் கவிந்த கடப்ப மரம் இரண்டு;
வாயிலில் ஒளிர்ந்திடும் தூண்களுக்கப்பால்
செம்மாந்துள்ள சிங்கத்து உருவம்;
என் இனியாள் பேணும் மென்புறு இனம்
தம் காப்பிடம் நோக்கி வந்திடுமே.
தோகை மயிலொன்று தொய்ந்தே அங்கே
கண் வளர்ந்திடுமே, பொன்னிறக் கொம்பின்மேல்.
கைக்குள் அகலினைக் காத்தே
மெல்லவே வருவாள் என் மாளவிகை;
வழிமுனையில், படிகள் அருகில் காட்சி தருவாள்,
அந்தியின் அழகே போல்; என் அந்திச் சுடர்மீன் அவள்!
நறுந்தண் குங்குமம் கமழும் நன்மேனியள்;
ஓமாலிகை ஊட்டிய வளைந்த மென்குழலாள்.
தன் மூச்சை என்மேல் வீசிடும் ஏக்கமுடையாள்.
நழுவிடும் நுரைமென் துகிலிடைத் தோன்றிடும்
தொய்யில் கீற்றிய அவள் வனமுலை ஒன்று.
பதுமை யெனவே நின்றிடுவாள் என்முன்.

ஒலிமங்கிய அந்திப் பொழுதில்
அவ்வினியவள் என்னைக் கண்டதுமே
விளக்கினை வைத்து, அணுகுவாள் மெல்ல.
என் கையுடன் தன் கையினைக் கோத்தே
உருக்கம் தோய்ந்த சுடர்விழி தூக்கி,
பேசா மொழியால்,
'அன்பனே! யாவும் நலந்தானே?' என்று வினவுவாள்.
மறுமொழி புகல அவள் மதிமுகம் நோக்குவேன்.
என் நாவிடைச் சொல்தான் ஏது?
கண்ணோடு கண்ணிணை நோக்கும்;
என்னவோ பேச எங்கள் வாயும் துடிக்கும்.
கட்டுக்கடங்காக் கண்மழைதான் முடிவில்!
எத்தனை குறியிடங்கள்; எத்தனை மரநிழல்கள்;
நினைவுகூரச் சென்றே நிற்போம் நாங்கள்.
மங்கல்மாலையில் கூட்டை நாடும் பறவை போல
என் கைதனில் தன் அகங்கை பொருத்துவாள்.
இது எதனுல் என்பதை மறந்தேன்.
காம்பில் துவளும் தாமரை என உள்ளம் நெகிழ்ந்தே

என் மார்பிடை மெல்ல முகம் புதைப்பாள்.
அவள் விடும் மூச்சு என் உயிர்ப்புடன் ஒன்றும்.
இந்த இரவிருளில் உஞ்சைப் பதியும் மறைந்தது;
வாயிலில் அவள் ஏற்றிய ஒள்ளிய விளக்கும்
காற்றின் விசையால் அணைந்தே போயிற்று.
சிப்பிரைக் கரையில் சிவனார் கோயிலில்
பூசையின் ஒலியும் மங்கி மறைந்ததுவே.

(22 மே, 1897) —கல்பனா

## 27

## மாரவேள் நீறாகிய பின்

பூங்கணை மாரனை நீ மாய்த்தது ஏனோ,
கடுந் தவத்தோய்?
உலகெங்கணும் அவனைச் சிதறச் செய்தாயே!
காற்றிலே அவனது நெஞ்சின் ஆகுலம்
கிளர்ந்தே நெடுமூச்செறிகின்றது.
ககனம் முழுவதும் புரள்கின்றது
அவனது கண்ணீர் வெள்ளம்.
இரதியின் புலம்பலின் மெல்லிசை சூழ்ந்தே
திசைதோறும் விம்மிடும் விரகக் குரலே.
வீங்கிள வேனிலில் எவர் குறிப்பினை உணர்ந்து
கணத்தினில் இந்த அவனி சிலிர்த்து மயங்குகின்றது?
இதய யாழினில் ஒலித்திடும் இந்தத் துடிப்புத்தான்
எவர் வேதனையோ, இதை அறியேன்!
இணைந்தே வானும் மண்ணும் உரைப்பது கேட்டு
இளநங்கையர் திகைப்புறுகின்றனரே.
மகிழின் தளிர்க்குவையுள் அவ்வொலிதான் என்ன?
முரலும் வண்டின் மொழியினது பொருள்தான் என்ன?
எவர் சுடர் முகம் காணச் சூரிய காந்தியும்
தன் மலர்க் கண்ணால் தேடுகின்றதோ?
எந்த வேட்கையால் இழிதரும் அருவியும்
இழுமென ஒலித்தே ஏங்குகின்றதோ?
யார் மென்துகிலோ என நினைந்து
நிலவினை நோக்கிக் கண்பனி சிந்தும்
அப்பேதை மகள்தான் யாரோ?
ஒள் கதிரிடை மறையும் எவர் களிமுகத்தைக் காணப்
புல்லின் தளிர்மிசை அடியொற்றியே வந்திடுகிறாள் அவள்?

அக்காரிகைதான் யாரோ?
பூமணத்தூடே எவர் மெய்யினைத் தீண்டி
உவகையால் உள்ளம் பொங்க
மென்கொடி யென அசைந்து வருகிறாள் அவள்?
அம்மடவரல் யாரோ?
பூங்கணை மாரனை நீ மாய்த்தது ஏனோ,
கடுந்தவத்தோய்?
உலகெங்கும் அவனைச் சிதறச் செய்தாயே!
(25 மே, 1897) —கல்பனா

## 28

## தேவதைக்குப் பலி

ஊர்தோறும் அச்செய்தி மெல்லப் பரவிற்று:
மைத்திர மகாசயர் கங்கையில் நீராடச்
சாகர சங்கமத்திற்குப் பயணமாகிறாராம்!
பலர் சேர்ந்தனர் அவருடன் செல்ல;
அவர்களில் இளையவரும் முதியவருமான ஆடவர் பெண்டிர்
இருந்தனர்; துறையில் படகுகள் இரண்டு காத்திருந்தன.
புண்ணியம் தேடும் மோக்ஷதா,
'மாமா, நானும் வருகிறேன் உம்முடன்' என்றாள்.
இளங் கைம்பெண் அவள்; எவ்வளவு தடுத்தும்
அவள் கண்கள் உருக்கமாகவே வேண்டின.
அதைப் புறக்கணிப்பது எளிதாக இல்லை.
'இடம் இருந்தால்தானே....' என்றார் மைத்திரர்.
'உங்கள் காலில் விழுகிறேன்' என்றவள்
அழுதவண்ணம், 'எங்கேயாவது ஒரு மூலையில்
ஒதுங்கிக் கொள்கிறேன்' என்றாள்.
மனம் இளகியது; சற்றுத் தயக்கத்துடன்
அவ்வந்தணர் வினவினார் அவளை:
'உனக்கு ஒரு சிறு பையன் இல்லையா,
அவனை என்ன செய்வாய்?'
மோக்ஷதா அதற்கு, 'என் ராகாலன்தானே?
அவன் தன் சிற்றன்னையோடு இருப்பான்;
அவன் பிறந்த பின்பு வெகு நாள்
சூதகக் காய்ச்சலாய்க் கிடந்தேன்;
பிழைப்பேன் என்ற நம்பிக்கை இல்லை.
அன்னதாவே தன் குழந்தையுடன்

அவனுக்குப் பால் ஊட்டி அச்சமயம் வளர்த்தாள்.
அதுமுதல், என்னை விட்டு அவன்
சிற்றன்னை அணைப்பில்தான் இருக்கிறான்.
யாருக்கும் அடங்காத முரட்டுப் பிள்ளை;
அவனைச் சற்றுக் கடிந்துகொண்டாலும்
அவள் அவனை அணைத்து அழைத்துச் செல்வாள்;
சிற்றன்னையிடமே சுகமாய் இருப்பான்' என்றாள்.
அந்தணர் இணங்கினார்; தனக்கு வேண்டியதைச்
சடுதியில் மூட்டை கட்டினாள் மோக்ஷதா;
பெரியவர்களை வணங்கியதும், விடை பெறும்பொழுது
பிரிவின் வேதனையால் கண்ணீர் உகுத்தாள்.
படகுத் துறைக்கு வந்து பார்க்கையில்
சிறுவன் ராகாலன் முன்னதாகவே வந்து
படகிப் கம்மென்று உட்கார்ந்திருந்தான்.
'இங்கே எதற்கு வந்தாய்?' என்று கேட்டாள் அன்னை.
'நானும் வருவேன் சாகரத்துக்கு' என்றே
பிடிவாதம் செய்தான் சிறுவன்.
'சாகரத்துக்கா, திருட்டுப் பயலே!
இறங்கடா படகை விட்டு!' என்றாள் தாய்.
மீண்டும் பிடிவாதத்துடன் சிறுவன்
விழிகளைத் தூக்கி, 'நான் போவேன்' என்றான்.
அவனை நெட்டித் தள்ளத் தள்ளப்
படகைக் கெட்டியாய்ப் பற்றிக்கொண்டான்.
கடைசியில், அந்தணர் இரக்கமுற்று
அன்பாகவே சிரித்து, 'இருக்கட்டும்,
வரட்டுமே அவனுந்தான்' என்றார்.
தாய் சினந்து, 'வா! வா! உன்னை
அந்தக் கடலில் தள்ளிவிடுகிறேன்' என்றாள்.
நாம் இப்படி ஏனோ கூறினோம் என்று
உறைக்கவே அவளை வேதனை வாட்டியது.
கண்களை மூடி, 'நாராயண! நாராயண' என்று
கடவுள் பெயரை உச்சரித்துக்கொண்டாள்.
மகனைத் தன் உடலோடு அணைத்துக்
கருணையும் அன்பும் சேரத் தடவிக் கொடுத்தாள்.
மைத்திரரும் அவளை அழைத்து மெல்ல,
'சீச்சி! இப்படிக்கூடப் பேசலாமோ?' என்றார்.
ராகாலனும் கூடவே வருவது உறுதியாயிற்று.
யாரோ இதை எட்டவிடவே சிற்றன்னை அன்னதா
ஓடியே வந்து, 'குழந்தாய்! எங்கேயடா போகிறாய்?' என்றாள்.

ராகாலன் சிரித்து, 'சாகரத்துக்குப்போய் வருவேன்' என்ருன்.
பைத்தியக்காரி போல் அன்னதா,
'சுவாமி, என் ராகாலன் மிகவும் முரட்டுப் பையன்;
இவனை யாரால் சமாளிக்க முடியும்? ஒரு நாளும்
இவனைப் பிரிந்து இருந்ததில்லை நான்;
இவனை ஏன் அழைத்துச் செல்கிறீர்கள்?
திருப்பி அனுப்புங்கள் என்னிடமே' என்று கூவினுள்:
நல்ல வேளையில், துர்க்கையின் பெயரைச் சொல்லிப்
புறப்பட்டன யாத்திரிகர்களின் படகுகள்.
கரைமீது ஊர்ப் பெண்டிர் நின்றனர், கண்ணீர் மல்க.
பின்பனிக் காலம்; காலைப் பனித்திரைக்குள்
சூர்ணி நதிக்கரையில் அச்சிற்றூர் மங்கியது.

* * * * *

யாத்திரை முடிந்து திரும்பிக்கொண்டிருந்தனர்;
ஆற்றில் பொங்கோதம் வருவதை எதிர்நோக்கிக்
கரையில் படகுகள் காத்திருந்தன.
வேடிக்கை இனிமேல் ஒன்றுமில்லை.
தன் அருமைச் சிற்றன்னையை வந்து அடைய
விம்மத் தொடங்கியது ராகாலனின் உள்ளம்;
வெறும் நீரைப் பார்த்துப் பார்த்தே
அலுத்துவிட்டது அவனது உள்ளம்.
கருங்கடல் பொங்கி உட்புகும் நீர்த்திரள்
பகைத்தெழும் பாம்பெனச் சலசலத்தது;
கணக்கிலா அலைநாகம் சீறின;
மண்ணகத்துப் பாலகனை விழுங்க வருவதுபோல்
தம் கொடிய விருப்பத்தினைக் காட்டினவே!

ஏ, மண்ணகத் தாயே, அன்புக்குரியவளே;
பொறுமையால் வாய் பேசாது நிற்பவளே;
என்றும் நிலைத்தவளே, தொன்மையளே;
இடும்பை யாவும் தாங்கிடும் தன்மையளே;
இன்பம் உறையும் இல்லமே;
பசுமையார்ந்த மேனிப் பொலிவுடையாளே!
எங்கிருப்பினும் கண்காணுத யாரோ
தன் இரு கைகளாலும் அவனை என்றுமே
அணைத்துக்கொள்ளத் துடிக்கின்ருள்.
அடி பேதாய்! எங்கும் விரிந்த, அமைதி தரும்
உன் மார்பிலே அவனைக் கட்டி அணைக்கத்
துடிக்கின்ருய்! என்னே இது!

துள்ளும் சிறுவன் ஒவ்வொரு கணமும்
குரலில் வேதனை கடைய அந்தணரை நோக்கி,
'எப்போது ஆற்றில் வெள்ளம் ஓடும்?' என்பான்.
அசையா நீரிடை வேகத்தின் உணர்வு
மெல்ல எழுந்தது இருகரையிலும்.
தங்கியிருப்பவர் மனத்துள் நம்பிக்கை வந்தது:
திரும்பினர் யாவரும் படகினை நோக்கி.
மெல்ல ஆரவாரித்து வடத்தை இழுத்தனர்.
கலகலப்பொலியுடன் ஆற்றிடைப் பாய்ந்தது
அச்செந்நிறத் தேரும்.
பொங்கி எழுந்தது புனல்;
தெய்வங்களைக் கும்பிட்டுத் துரிதமாய்
வடதிசையே செலுத்தினர் கலங்களை.
அந்தணரை அணுகி ராகாலனும்,
'என்று நாம் ஊர்ப் போய்ச் சேர்வோம்?' என்றான்.
கதிரவன் தாழும் வேளை; காத வழி கலங்கள் கடந்ததும்,
வாடைக் காற்று விசையுடன் எழவே
ரூபநாராயண ஆறு சேரும் இடந்தனில்
எக்கர் இட்டிருந்தது மணல்.
குறுகிய அவ்வாற்றிடைச் செல்லுகையில்
வாடைக் காற்றுடன் நீத்தமும் சேர்ந்து
வெறியாடல் தொடங்கியது.
படகுகள் கவிழ்வனபோல் தோன்றின.
'கரைக்கு ஒதுக்கு!' எனக் கூவினர் யாவரும்.
கரைதான் எங்கே? கண்ணில் பட்டால்தானே?
நாற்புறமும் நிமிர்ந்தெழும் அலைகள்
தாளங் கொட்டித் தாண்டவமாடின;
வானை நோக்கி வெண்ணுரைகள்
எள்ளியே நகைத்தன!
எங்கோ தொலைவில் கருமை வனத்தின்
மெல்லிய கீற்றுப் புலனாகியது.
கிளர்ந்தெழும் பயங்கர நீர்த்திரள்
கட்டுக்கு அடங்காது மூச்செறிந்தது.
சுக்கான் கைக்கே நிற்கவில்லை.
படகும் சுழன்றே தத்தளித்தது.
உடலை ஒடுக்கும் வாடைக் காற்றும்
விதிர்ப்பும் சேர்ந்தே ஆடவர் பெண்டிர்
யாவரையும் நடுக்கி எடுத்தன.
பேச வலிவிழந்தனர் சிலர்;

அழுதே தம் உறவினரை நினைந்து
ஓலம் வைத்தனர் சிலர்;
மைத்திரர் முகம் வெளுத்துப்போய்ச்
சபம் செய்துகொண்டிருந்தார் கண்ணை மூடி.
அன்னையின் மார்பில் முகம் பதித்து
ராகாலன் நடுங்கிக் கொண்டிருந்தான்.
விபத்தில் சிக்கிய படகோட்டி,
எல்லோரையும் விளித்து, 'உங்களில் எவரேனும்,
ஆண்டவனுக்கு வேண்டிக்கொண்டு
காணிக்கை செலுத்த மறந்து போனீர்களா?
இராது போனல், இப்படி இந்த நீர் கொந்தளிக்குமா?
அகாலத்தில் இப்புயல் தோன்றிடுமா?
வேண்டிக்கொண்டதைச் செலுத்திவிடுங்கள்;
கொடிய தேவதையிடம் விளையாடாதீர்கள்' என்றான்.
யாருக்கு என்ன உண்டோ, துணி காசு எல்லாம்
அப் பொங்கும் புனலில் எறிந்தனரே.
இருப்பினும், குழம்பிடும் ஆற்றுநீர்
பொங்கிப் பொங்கி வழிந்தது, படகின்மீது.
படகோட்டி மீண்டும், 'தேவதைக்குரிய பொருளை
உங்களில் யாரோ எடுத்துச் செல்கிறீர்கள்?' என்றான்.
அந்தணர் சட்டென மோக்ஷதாவைச் சுட்டி,
'இவள் தன் மகனைக் கடலுக்குத் தருவதாய்ச் சொன்னாள்;
ஆனால் அவனைத் திருடிக்கொண்டு போகிறாள்' என்றார்.
'அவனைப் போட்டுவிடு' என்றே
நடுக்குறும் அந்த யாத்திரிகர் அனைவரும்
உறுமினர் ஒரு குரலில்.
பேதை, மகனைப் பெற்றவள்,
'மாமா, என்னைக் காப்பாற்றும்' என்றே அலறினாள்.
தன் இரு கையாலும் ராகாலனை
வலிவுடன் மார்பில் அணைத்துக்கொண்டாள்.
சினந்து சீறியே அந்தணர் கூறுவார்:
'நானா உன் இரட்சகன்? கோபாவேசத்தில்
நினைவு தப்பி, நீ ஒரு தாயாக இருந்தும்
உன் மகனைத் தெய்வத்திற்கு - அக்கடலுக்கு -
அர்ப்பணம் செய்தாயே! கடைசியில்
நானா அவனைக் காப்பாற்ற முடியும்?
தெய்வத்திற்குப் பட்ட கடன் அது;
நீ சத்தியம் செய்துவிட்டு மீறுகிறாய்!
இதனால் இத்தனை உயிர்களும் கடலுக்கு இரையாகும்.

மோக்ஷதா கூறுவாள்: 'மிகப் பாவி நான்,
என்னவோ எரிச்சலில் உளறிவிட்டேன்.
ஆண்டவனே, அது இப்படியும் உண்மையாகிவிடுமா!
நான் உள்ளூறச் சொல்லவில்லையே;
நீங்கள் அறியவில்லையா, சுவாமி?
ஏதோ வாய் தவறிக் கூறிவிட்டேன்.
தெய்வமே, அன்னையின் உள்ளக் குரல்
உன் செவிக்கு எட்டவில்லையா?'

இதை அவள் கூறும்பொழுதே, படகோட்டிகளும்
மற்றவரும் சேர்ந்து அன்னை மார்பில் பதுங்கிய
ராகாலனை வன்மை கொண்டு பிரித்தனர்.
மைத்திரர் தம் கண்களைப் பொத்திக்
காதையும் கெட்டியாக மூடிக்கொண்டார்;
பற்கள் கிட்டிக்கொண்டன வாயில்.
அவர் இதயத்துள் யாரோ
மின்னல் சாட்டை கொடுத்தது போல் தோன்றியது.
தேள்கொட்டிய மாதிரி இருந்தது அவ்வேதனை.
'சின்னம்மா..சின்னம்மா..சின்னம்மா' என்று ஒரு குரல்:
வெம்மை ஈட்டியை அவர் செவியில்
யாரோ பாய்ச்சியதுபோல் இருந்தது!
துணையிழந்த ஓர் அநாதைச் சிறுவனின்
கடைசி அழுகைக் குரலே அது.
வெறிபிடித்து அலறினர் அந்தணரும்,
'அடா, ராகால், என் ராகால்' என்றே;
திரும்பிப் பார்க்கையில், காலடியில்
மோக்ஷதா மயக்கமாய் விழுந்திருந்தாள்.
சில நிமிடமே கொந்தளிக்கும் நீரிடையே
'சின்னம்மா' என்று அழுது கண்ணைக் காட்டிச்
சிறுவன் ராகாலன் அமிழ்ந்தே போனான்.
சிறு கைகள் மேலே வரத் துடித்தே
சில கணத்தினில் ஓய்ந்து நீருள் மறைந்தனவே.
'உன்னை நான் திரும்பிக் கொணர்வேன்'
என்று பெருமூச்செழ அந்தணரும்
இமைப்பொழுதில் அவ்வெள்ளத்திடைக் குதித்தார்.
அவர் தலை மேலே வரவே இல்லை.
கதிரவனும் அத்தமனக் குன்றில் மறைந்தான்.

(29 அக்டோபர், 1897) —கதா ஓ காஹினி

## 29

# அபிஸாரம்

### (குறியிடம் செல்லல்)

**[போதி ஸத்வாவதான கல்பல்தா என்ற நூலில் உள்ளது]**

சந்நியாசி உபகுப்தர், மதுரை நகரின்
மதில் ஓரமாய்ப் படுத்திருந்தார் ஒரு நாள்.
நகர்விளக்குகள் காற்றுவிசையால் அணைந்தன.
மக்கள் தம் இல்லங்களை மூடித் தாழிட்டனர்.
கார்வானில் அடர்முகில்கள் தாரகைகளை மறைத்தன:
உளத்தில் யாருடைச் சிலம்பொலியோ கேட்டது மெல்ல;
திடுக்கிட்டெழுந்தார் துறவியாரும்;
கனவின் கலக்கம் சட்டென விலகியது.
பளிச்சிடும் விளக்கொளியை, அவர்தம்
கருணைகூர் விழியால் கண்டார்.
நகரத்து நடிகை இளமை வெறியுடன்
செல்கிறாள் குறியிடம் நோக்கி.
அவள் உடலில் விண்ணீல மேலாடை;
அவள் ஒள்ளிழைகள் மெல்ல முரன்றன.
கிடக்கும் துறவியின்மீது கால் இடறவே
சட்டென நின்றாள் வேசி வாசவதத்தை.
புதுமை பொலிந்திடும் தூய மேனியை,
தேசு பிறங்கும் இனிய முகத்தை,
கருணை ததும்பும் அழகிய கண்களை,
துல்லிய நுதலில் சந்திரகலையெனத்
தண்ணிய சாந்தம் ஒளிர்வதைக்
கைவிளக்கொளியில் கண்டனள் அவள்:
நாணம் கண்களைக் கவ்விடக் கட்டழகி,
'என்னை மன்னிப்பீர், இளைஞரே;
என் இல்லத்திற்கே வந்திடுவீர்.
இந்நக் கட்டாந்தரையில் நீர் கிடப்பதோ?
இது உமக்கு ஏற்ற பாயலே அன்று' என்றாள்;
குதலைமொழியாள் பேசவும்,
அருள்கூர்ந்தே அத்துறவியரும்,
'அழகுக் களஞ்சியமே, அவ்வேளை வரவில்லை இன்னும்;
உன் குறிக்கோளான அக் குழகனிடமே சென்றிடுவாய்.
வேளை வரும்போது உன்னிடம் தேடி
வந்திடுவேன்' என்றார்.
திடுமெனப் புயல் எழுந்தது; மின்வெட்டில்

யாவும் புலனுயின.
அஞ்சியே நடுங்கினள் அரிவை.
காற்றினில் ஊழிச் சங்கொலி விம்மியது;
உறுமுமிடி வானிடை நகையாடியது.
அவ்வாண்டு இன்னும் முடிவுறவில்லை.
இளவேனில் மாலை ஒரு நாள்;
ஆகுலம் காற்றிடை உலவியது.
மரங்களில் எங்கும் முகைப்பதம் தோன்றியது.
மகிழும் மௌவலும் மல்லிகையும்
மன்னன் உய்யான வனத்தில் பூத்து விளங்கின.
தென்றலில் மிதந்தே வந்தது குயில் இசை.
பூமலி விழவினை நோக்கி
நாகரிகர் யாவரும் மதுவனம் ஏகினர்.
வெற்றுகியது நகரம்; வழிந்தது வானில் நிலவு.
ஆளில்லா வழியில் அந்நிலவொளியில்
தனியே சென்றுர் அந்தத் துறவி.
தலைக்கு மேலே மரக்கிளைகளில்
நின்றே நின்றே ஆலும் குயில்கள்.
இத்தனை நாட்களுக்குப் பின்னே
இரவுக் குறியிடம் நோக்கியே விரைகின்றுர் அவர்!
நகரைத் துறந்தே, வெளியே போந்தார்,
கோலுடை அந்தப் பகவர்;
அகழினைக் கடந்தே வந்து நின்றுர்.
மாஞ்சோலையின்கண் இருண்ட நிழலில்
அவர் அடிமிசைக் கிடக்கும் அந்த அரிவை யாரோ?
கொப்புளம் கண்டு, உடலெங்கும் அம்மையுடன்
மேனி கறுத்தே துவளும் திக்கற்ற அவளை,
தம்மையும் இந்நோய் தொற்றுமென்றஞ்சி
மாந்தர் எறிந்தனர் அங்கே.
துறவி அவள் தலையினைத் தம் மடியில் வைத்து
வறண்ட நெஞ்சினுள் புகட்டினுர் நீரை;
அவள் தலைப்புறம் அமர்ந்தே மந்திரம் செபித்தார்.
சீதச் சந்தனக் கலவையைத் தம் கரத்தால்
அவள் உடலெங்கும் பூசினுர் மெல்ல.
பூக்கள் உதிர்ந்தன; குயில்கள் கூவின;
இரவெல்லாம் நிலவின் களியாட்டம்.
'நீங்கள் யாரோ, கருணையுடன் இப்படி வந்தீர்?'
என்றுள் அப்பேதை.
'அன்றொரு நாள் நான் கூறிய வேளை

வந்தது இன்றிரவு, வாசவதத்தை!' என்றார்
அம் மாசில் துறவி உபகுப்தர்.

(5 செப்டம்பர், 1899) —கதா ஓ காஹினி

## 30

# கர்ணனும் குந்தியும்

**கர்ணன்:** புண்ணியக் கங்கையின் கரையினில்
அந்தி ஞாயிற்றுக்கு வந்தனை செய்யும்
நான் அதிரதன் மகன் - கர்ணன் என்பார்கள்;
ராதையின் வயிற்றில் பிறந்தவன்... நீங்கள் யாரம்மா?

**குந்தி:** குழந்தாய்! உன் வாழ்வின் இளங்காலையில்
உன்னை உலகினுக்கு அறிமுகம் செய்தவள் நானே!
உன் வரலாற்றைத் தெரிவிக்கவே இன்று எனது
வெட்கமனைத்தையும் விட்டு ஓடிவந்தேன்.

**கர்:** அம்மணி! கதிரவனைக் கண்ட பனியென
என் உள்ளம் உங்களைக் கண்டதுமே
உருகுகிறது. உங்கள் குரல், முற்பிறப்பிலிருந்து
வருவது போன்று என் மனத்துள் புரியாத
வேதனை ஒன்றை எழுப்புகிறது. எனது
பிறப்பை உங்களுடன் பிணைக்கும் அந்த
ரகசியத் தொடர்புதான் என்னவோ?
சொல்லும்; எனக்குப் பழக்கம் இராதவர் நீர்.

**குந்தி:** சற்றுப் பொறு, அப்பனே. முதலில் கதிரவன்
அத்தமனக் குன்றை அடையட்டும். அந்தி
மங்கி இருள் சூழட்டும். உனக்குச்
சொல்லுவேன்....நான் குந்தி!

**கர்:** குந்தி தேவியா நீர்? அர்ஜுனன் தாயா?

**குந்தி:** அர்ஜுனன் தாயேதான். ஆனால், அதை எண்ணிப்
பகைமை கொள்ளாதே, குழந்தாய்! அன்று
அத்தினபுரியில் படைக்கலப் பயிற்சி நடந்த நாள்
என் நினைவுக்கு வருகிறது. இளமை மிக்கவனாய் நீ,
தாரகைகள் பொதிந்த கீழ்வான விளிம்பில் தோன்றும்
அருணனைப் போல் அரங்கினுள் நுழைந்தாய்.
திரை மறைவினில் அத்தனை மகளிரிடையே,
உள்ளத்தில் அன்பின் பசி ஆயிரம் பாம்பெனச் சீறிடப்
பேச்சற்று நின்றாள் ஒரு துர்ப்பாக்கியவதி; அவள் யார்?

தன் கண்களால் ஆசியின் முத்தங்களைச் சொரிந்தவள் யார்? அர்ஜுனன் தாயல்லவா அவள்! கிருபாசாரியர் வந்து உன் தந்தையின் பெயரைக் கேட்டு நகைத்து, 'அரசகுலத்தில் பிறக்காத ஒருவனுக்கு அர்ஜுனனுடன் சண்டையிட உரிமை இல்லை' என்றார். தலை குனிந்து முகம் சிவந்திடப் பேச்சற்று நின்றாய் நீ; அந்த அவமானத்தின் அழல் தன் உள்ளத்தைப் பொசுக்கிட அதைப்பார்த்து நின்ற அந்தப் பதடி யார்? அர்ஜுனன் தாயல்லவா? மகன் துரியோதனன், உண்மையில் கொடுத்து வைத்தவன். ஆம், உன்னை அங்க நாட்டிற்கு அரசனாக்கினான். அவன் வாழ்க! என் கண்ணீர் ஆறு உனக்கு மங்கல நீராட்டியது. அவ்வேளை, தேரோட்டி அதிரதன் சபை நடுவே வந்து அமர்ந்தான். தாங்க முடியாத களிப்பு அவனுக்கு. உடனே அரசகோலத்தில் நீ, நாற்புறமும் மக்கள் குதுகலக்கண்ணால் நோக்க, மங்கல நீராடிய தலையாலே, தந்தையே என்று அம்முதிய தேர்ப்பாகன் அடிமிசை வணங்கினை. பாண்டவர்களைச் சார்ந்தோர் இதனை இகழ்ந்து பேசிக் கொடுமையாய் நகைத்தனர். ஆனால், அவ்வேளை, உன்னை 'ஏ வீரர் தலைவ' என்று பெருமிதங் கொண்டு ஆசி கூறியவள் - அர்ஜுனனின் தாய் - நான்!

**கர்:** அம்மணி, தங்களை வணங்குகின்றேன். அரசர்களின் தாயான நீங்கள் இப்படித் தனிமையில் இங்கு வரக் காரணம் யாதோ? இதுவோ போர்க்களம்; நான் கௌரவர்களின் படைத்தலைவன்.

**குந்தி:** புதல்வ! பிச்சை கேட்கவே வந்தேன். வெறுங் கையுடன் என்னை அனுப்பாதே!

**கர்:** பிச்சையா? என்னிடமா? எனது ஆண்மை, எனது தருமம் இவை தவிர எது வேண்டினும் கேளும்; உங்கள் காலடியில் சமர்ப்பணம் செய்வேன்.

**குந்தி:** உன்னை அழைத்துச் செல்லவே வந்தேன்.

**கர்:** என்னை எங்கு அழைத்துச் செல்வீர்கள்?

**குந்தி:** வேட்கை குடிகொண்ட என் உள்ளத்தில், தாயின் மடியினில் ஏற்றுக்கொள்ளத்தான்.

**கர்:** புதல்வர் ஐவரைப் பெற்ற பாக்கியவதி, அம்மா நீங்கள். நான் குலம் கோத்திரமற்ற ஓர் ஆண் மகன். எனக்கு எங்கே இடந் தருவீர்?

**குந்தி:** *எல்லோருக்கும் உயர்வானதோர் இடத்தில், என் புதல்வர்களுக்கெல்லாம் முன்னால் உயர்பீடத்தில் நிறுத்துவேன். என் மூத்த மகன் நீ.*

**கர்:** *எந்த உரிமைச் செருக்குடன் நான் அங்கு வர முடியும்?*
*ஐசுவரியம் நிரம்பிய அரச உரிமையிலிருந்து*
*வஞ்சிக்கப்பட்ட அவர்கள் குறைவறப் பெற்ற*
*தாயின் அன்பையுமா நான் துண்டிப்பது!*
*அம்மா! சூதாட்டத்தால் போக்கிட முடியாதது, தோள்*
*வலிவால் வெல்ல முடியாதது தாயின் உள்ளம்.*
*அது கடவுள் தந்த அன்புப் பரிசன்றோ!*

**குந்தி:** *அடா, என் மகனே! இறைவன் தந்த உரிமையால் என் மடியில் வந்தாய் ஒரு நாள். அதே உரிமையால் இன்று கௌரவத்துடன் வா, யோசனை பண்ணாமல். தம்பிமாருடன் நீயும் உன் தாய் மடியில் உனக்குரிய இடத்தைக் கொள்வாய்.*

**கர்:** *ஏ தேவி, நீங்கள் கூறுவது ஏதோ விசித்திரமான*
*கனவுபோலவே இருக்கிறது. காண்பீர்,*
*அதோ நாலுதிசையிலும் இருள் கவிந்துவிட்டது;*
*சூழ உள்ளன யாவும் மறைந்தன; கங்கையாற்றிலும்*
*ஓசையில்லை. நீங்கள் மருள்தரும் ஒரு மாய உலகிற்கு,*
*மறந்துபோன ஓர் இடத்திற்கு, பழைய*
*நினைவு மல்கிய ஒரு காலைப் பொழுதிற்கு என்னை*
*அழைத்துச் சென்றுவிட்டதுபோல் தோன்றுகிறது.*
*பண்டையதோர் உண்மையென உங்கள் வாக்கு*
*மயங்கிய என் உள்ளத்தைத் தொடுகிறது.*
*தெளிவிரா எனது இளமைப்பருவம், தாயின் கருவினுள்*
*நான் இருக்கின்றேனோ என்ற மருள் கவிந்துள்ளது.*
*அரசர்களின் தாயே! கனவோ, உண்மைதானோ?*
*வாருங்கள், அன்பு பாலிப்பவரே; உங்கள்*
*வலக்கரத்தால் எனது நெற்றி, மோவாயெல்லாம்*
*வருடுங்கள். தாய் ஒதுக்கித் தள்ளியவன் என்று என்னை*
*உலகோர் ஏசுவதைக் கேட்டிருக்கிறேன், பலமுறை;*
*இரவில் கனவிடை மெல்ல என்னைக் காண என் அன்னை*
*வருவதுபோலவும், நான் அவளிடம் வேதனையால்,*
*அம்மா, முகத் திரையை விலக்கி உன் முகம்*
*காட்டு' என்று கதறி அழுவது போலவும் தோன்றும்.*
*ஆனால், உடனே அவள் உருவம், ஏக்கம் துடிக்கும்*

அச்சொப்பனத்தைக் கலைத்தே மறைந்துவிடும்.
அந்தக் கனுதான் இன்று பாண்டவரின் அன்னை உருவில்
இவ்வந்திப்பொழுதிலே, இச் செருக்களத்திடையே,
இந்தக் கங்கைக் கரைதனில் வந்து நிற்கிறதோ?
தேவி! அதேர பாரும், எதிர்க் கரையில்
பாண்டவர் படைவீடுகளில் விளக்குகள்
ஒளிர்கின்றன. இந்தப் பக்கம், அருகினில் கௌரவர்
சிபிரங்களில் குதிரைக் குளம்போசை கேட்கிறது.
நாளைக் காலை போர் தொடங்குகிறது. இன்றிரவு
அர்ஜுனன் தாயின் குரல் - பெற்றவள் குரல் - அன்பால்
என்னை அழைப்பது ஏனோ? என் பெயர், அவள் வாயில்
மதுர கீதம் போலவே ஒலி செய்கிறது.
சட்டென என் உள்ளமும், ஐவரை நோக்கி
உடன்பிறந்தவர் என்றே நினைத்துத் தாவுகின்றதே!

குந்தி: குழந்தாய்! வந்துவிடு, வா.

கர்: வருவேன் அம்மா, ஏனென்று கேட்க மாட்டேன்.
ஐயம் சிறிதும் இல்லை; நீங்கள் என் தாய். உங்கள்
குரல் கேட்டு என் ஆன்மா விழிப்புற்றது.
போர் முரசொலியோ வெற்றிச் சங்கின் நாதமோ
கேட்காது என் செவியில்.
இப் போரின் கொடுமை, வீரக்கியாதி,
வெற்றி, தோல்வி அனைத்தும் பொய்யே!
என்னை எங்கு வேண்டுமானாலும் அழைத்து செல்லும்.

குந்தி: அதோ அக்கரையில், தீபங்கள் ஒளிரும் ஒலி அடங்கிய
காப்பிடமான வெண்மணல் திடருக்கு வா.

கர்: அங்கே தாயில்லா மகனுக்கு ஓர் அன்னை கிடைப்பாள்!
அங்கே உம் அழகிய தடங்கண்களில்
எக்காலத்து இரவும் நிலை மாறாத தாரகை ஒளிரும்.
'தேவி, நான் உம் மகனென்று மீண்டும்
ஒரு முறை கூறும்.

குந்தி: என் மகனே!

கர்: குலப் பெருமையும், அன்னையின் அன்பும் இராத
இருளில், இக்குருட்டுலகில் இழிவுபடவா
என்னை எறிந்தீர்? என்னைப் புறக்கணித்து
இப்பெருக்கிடை ஏன் மிதக்கவிட்டீர்? உடன்
பிறந்தவரிடமிருந்து ஏன் பிரித்திட்டீர் என்னை?
அர்ஜுனனிடமிருந்து என்னை ஏன் விலக்கி வைத்தீர்?
இதனாலேயே சிறுவயது முதல் புலனாகாத ஆழ்ந்ததோர்

பற்றுதல் கொடுமையின் உருவில், விலக்கவொண்ணுக்
கவர்ச்சியால் எங்கள் இருவரையும் இழுக்கிறது.
அம்மா, நீர் ஏன் பேசாமல் இருக்கிறீர்?
உமது லஜ்ஜையை ஊடறுத்தே இருள்புரை
என் உடலெங்கும் பரவுகிறது; என் கண்களை
மூடுகிறது. இஃது இருக்கட்டும் ஒரு புறம்.
என்னைத் துறந்த காரணத்தை ஏன் சொல்லாமல்
இருக்கிறீர்? இவ்வாழ்வில் ஒருவனுக்குக் கடவுள்
அளிக்கும் முதல் தானம் தாயின் அன்பு.
அவர் தந்த பரிசினை.
பெற்ற மகனிடமிருந்து ஏன் கவர்ந்தீர்?
இதற்கும் நீர் மறுமொழி தரவேண்டாம். இன்று நீர்
ஏன் என்னைத் திரும்பிப் பெற வந்தீர்; அதைக் கூறும்.

குந்தி: குழந்தாய், இப்படி என்னைக் குத்திக் காட்டுவது,
ஆயிரம் வச்சிரக் கோல்களென என் இதயத்தைத்
துண்டு துண்டாக்கட்டும். உன்னை நான் துறந்தேனடா;
அந்தச் சாபத்தீடால், ஐவரைப் பெற்றும்
மலடியாகவே துடித்தது எனது உள்ளம்.
ஆனால், இவ்வுலகு எங்கிலும் என் கரம் உன்னைத்
தேடியே துழாவியது; ஐயோ! மகனை வஞ்சனை செய்த
என் சித்தம் கொழுந்தெனப் பற்றித் தன்னையே
எரித்துக் கடவுளுக்குக் காட்டும் சுடராக ஒளிர்ந்தது.
இன்று நான் பாக்கியம் செய்தவள். உன்னைக்
கண்டெடுத்தேன். உனக்குப் பேச்சே வாயில் வராத
குழந்தைப் பருவத்தில், நான் பெருங்குற்றம்
செய்துவிட்டேன்.... குழந்தாய், அந்த வாயாலேயே
இக்கொடியவளை மன்னிப்பாய். பொறுத்தருளும் உனது
பான்மையால் அசட்டையைவிட எனது வேதனையே
நன்கு ஒளிரட்டும்; எனது தீவினையைப் போக்கி
என்னைப் புனிதம் ஆக்கட்டும்.

கர்: அம்மா, உங்கள் பாதத் துகளைத் தருவீர்;
நான் விடும் கண்ணீரை ஏற்பீர்.

குந்தி: உன்னை மார்பிடை ஏற்பேன் என்ற இன்ப அவாவினுல்
நான் உன்னிடம் வரவில்லை, மகனே!
உனக்குரிய உரிமையை நீ பெறுவதற்கே,
உன்னை அழைத்துச் செல்லவே வந்தேனடா;
தேரோட்டி மகன் அல்லன் நீ; அரசனுடைய
மைந்தன். குழந்தாய் இவ்விழிவினை உதறிவிட்டு,
உன் சகோதரர்கள் ஐவர் இருக்கும் இடத்திற்கு வா;

கர்: *அன்னையே, நான் தேரோட்டியின் மகனே;*
*ராதை என் தாய். இதைவிட எனக்குப் பெருமை*
*தருவது வேறில்லை. பாண்டவர் பாண்டவராகவே*
*இருக்கட்டும். யார்மீதும் எனக்குப் பொறுமை இல்லை.*

குந்தி: *உனது அரசினைத் தோள் வலிமையால்*
*கொள்வாய், குழந்தாய்! யுதிட்டிரன் உனக்கு*
*வெண்சாமரம் வீசுவான்; பீமன் கொற்றக்*
*குடை பிடிப்பான்; விறல் தனஞ்சயன் உன்*
*பாகனாய் வீற்றிடுவான்; புரோகிதர் தௌமியர்*
*மறையொலி உச்சரிப்பார். பகைவரை வென்று*
*உன் உறவினருடன், இகலாரின்றி மணியாசனம் ஏறி*
*அழியாப் புகழுடன் அமருவாய்.*

கர்: *சிங்காதனமா! அன்னையின் பாசத்தை மீண்டும்*
*பெற்றவனுக்கா, அம்மா, அரசுரிமையில் ஆறுதல்*
*தோன்றும்! ஒரு நாள் அச்செல்வத்தை நீர் வஞ்சித்தீர்;*
*அதைத் திருப்பித் தருவது உங்களால் ஆகாது.*
*நான் பிறந்த வேளை, என் தாய், என் உடன்பிறந்தவர்,*
*என் அரசகுலம் யாவையும் ஒரே கணத்தில், அம்மா,*
*அடியோடு அழித்துவிட்டீரே!*
*என்னை வளர்த்த அந்தப் பாகர் குலத் தாயை ஏமாற்றி*
*இன்று அரசர்களின் அன்னையை என்னைப் பெற்றவளாகக்*
*கருதினால், கௌரவ வேந்தனிடம் எனக்குள்ள*
*கடமையினின்று நான் பிறழ்ந்தவனாவேன்.*
*சிங்காதனத்தை விரும்புவேனாயின் என்னைவிட*
*இழிந்தவன் எவனும் இல்லை.*

குந்தி: *நீ வீரன், என் மகன், சிறப்புடையவன். ஐயோ அறமே,*
*இதென்ன உனது தண்டனையின் கொடுமை! அன்று*
*யார் அறிவார் இதனை: தான் துறந்த ஒரு திக்கற்ற*
*சிசு வலிமை பெற்று வீரனாகி, இருள் வழியே*
*ஒரு நாள் திரும்பி வருகையில், ஓர் அன்னை தன் வயிற்று*
*மகனையே இப்படிக் கூரிய கருவியால் குறைப்பாள் என்று*
*யார் அறிவார்? இதென்ன சாபமோ!*

கர்: *அன்னையே! அஞ்சாதீர். இதோ கூறுகின்றேன்:*
*பாண்டவர்களே வெற்றி பெறுவர். இன்று இரவின்*
*திரைமீது, நட்சத்திர ஒளியைக் கொண்டு*
*கோர யுத்தத்தின் நேரடி விளைவினைக் காண்கின்றேன்.*
*நிச்சப்தம் நிலவி அமைதி தரும் இத்தருணத்தில்,*
*வெற்றியை விரும்பாத வினையின் இசை, பற்றுதலற்ற*

*முயற்சியின் உறுதி எல்லையில்லா வானத்திலிருந்து*
*என் உள்ளத்திடைப் பாய்கிறது; அமைதியைத் தரும்*
*ஒரு பெரும்பாழ் வருவதைக் காண்கிறேன்.*
*தோல்வி எவர் பக்கமோ, அவர்களைத் துறந்துவிட்டு வர*
*என்னை அழைக்காதீர். பாண்டவர்களுக்கு வெற்றி*
*திண்ணம்; அவர்களே அரசுரிமை பெறுவர்!*
*பயனைக் காணுதவர், நிராசை குடிகொண்டவரிடையே*
*நான் இருப்பேன். நான் பிறந்த இரவன்றே*
*இப்புவிமீது என்னை ஊரும் பேரும்*
*துறந்து சென்றீர். இன்றும் அதுபோல் கடின நெஞ்சுடன்*
*ஒளியே இராத, புகழே இராத அவலத்துக்கு நான்*
*ஆளாக என்னை விட்டு அகல்வீர், அம்மா! இவ்வாசியை*
*மட்டும் தந்து போவீராக - வெற்றியின் ஆர்வத்திலோ,*
*புகழின் ஆசையிலோ, அரசு கொள்ளும் விருப்பத்திலோ*
*வீரனுக்குரிய நேர்மையினின்று நான் என்றுமே சிறிதும்*
*பிறழாது இருக்க வேண்டும்.*

*(26 பிப்ரவரி, 1900)* —கா

## 31

## காந்தாரியின் முறையீடு

**துரியோதனன்:** *தந்தையே! வணங்குகின்றேன்.*

**திருதராட்டிரன்:** *தீய ஆசையுள்ளோய், உன் விருப்பங்கள் நிறை வேறிவிட்டனவா?*

**துரி:** *வெற்றியடைந்தேன்.*

**திருத:** *இப்பொழுது நீ இன்பம் கண்டனையா?*

**துரி:** *வெற்றியே கண்டேன்.*

**திருத:** *அகண்டமான அரசினை வென்று, உனக்கு இன்பம் எங்கிருந்து வரும், தீய நோக்குடையாய்?*

**துரி:** *இன்பத்தை நான் விரும்பவில்லை, வேந்தே! வெற்றியைத்தான் கோரினேன்; இன்று அதைப் பெற்றேன்; அற்ப ஆசைகளால் க்ஷத்திரியனின் பசி ஆறிவிடாது, குரு மன்ன! வெற்றியின் சுவை, கனலெனக் காய்ந்திடும் இன்னமுது; பொறுமை என்னும் கடலினைக் கடைந்திட்டு எழுவதாகும். அதை இப்பொழுதுதான் பருகினேன்;*

நான் இன்பம் பெறவில்லை, ஐயா; இன்று நான் வெற்றியைக் கண்டவன். தந்தையே! பாண்டவர்களும் கௌரவர்களும் ஒன்றுபட்டு இருக்கையில் சந்திரனில் மறு திகழ்வது போன்று, செயலின்றி, பெருமிதமின்றி, ஒளியின்றி இன்பத்தைக் கண்டேன். பாண்டவரின் காண்டிவ நாணொலி கேட்டுப் பகைவர் கூட்டம் நம் எல்லையில் கால் வைக்க நடுங்கியபோது நான் இன்பத்தைக் கண்டேன். பாண்டவர் வெற்றிச் செருக்குடன் தரணியெனும் பசுவினைக் கறந்து உறவினரிடம் உள்ள அன்பால் பங்கு தரும்பொழுது நான் இன்பத்தைக் கண்டேன். புதுமை புதுமையான போகங்களைத் துய்த்து எண்ணம், விசாரமின்றி எப்பொழுதும் குதூகலத்துடன் இருந்தேன். பாண்டவரின் வெற்றி முழக்கம் கௌரவர்கள் செவியில் எதிரொலி தந்து தாக்குகையில் இன்பத்தைக் கண்டேன். பாண்டவர்களின் ஒள்ளிய புகழின் பிரதிபிம்பம், மங்கிய கௌரவர்களின் மன்றத்தில் சுடரினைக் கொளுத்தியபோது இன்பத்தைக் கண்டேன். முயற்சியின்மை என்னும் கிணற்றுள் கிடக்கும் தவளையென ஒளி அனைத்தும் அவிந்துபோய்ப் பாண்டவர்களது கீர்த்தியின் தண்ணிழலில் தாங்கள் அமைதியுடன் இருக்கையில் இன்பத்தைக் கண்டேன். தந்தையே, இன்று பாண்டுவின் மைந்தர் அவலம் அடைந்து காட்டில் அடைக்கலம் புகுந்தனர்; இன்று நான் காண்பது இன்பமல்ல; வெற்றிதான்.

**திருத:** அட கெடுவாய், என்னே உன் துரோகம்! கௌரவர் பாண்டவர் இவர்களுடைய மூதாதை ஒருவனே; அதனை மறந்தாயோ?

**துரி:** எப்படி மறக்க முடியும்? மூதாதை ஒருவர்தாம்; செல்வம், கௌரவம், ஒளி இவற்றில் அல்ல! சற்று விலகிய உறவினராயிருப்பின் வேதனை கொள்வதற்கு ஒன்றுமே இல்லை. இரவில் தோன்றும் திங்கள் பகலில் ஒளிரும் வெய்யவன்மீது பகைமை கொள்ளாது. ஆனால், காலையில் கீழ்த்திசையில் நெருங்கிய உறவினரான இரு சூரியர்களின் ஒளி எப்படி நிலைத்திடும்? இன்று இந்தப் போட்டி தீர்ந்துவிட்டது; இன்று நான் வெற்றியைக் கண்டவன். இன்று நான் நிகரில்லாத தனி ஆள்.

**திருத:** இழிவான பொறாமை! நஞ்சினைக் கக்கும் பாம்பு நீ!

**துரி:** இழிவன்று; இந்தப் பொறாமை மகத்தானது! அது மகத்தானதொரு தருமம். இரு பெரு மரங்களிடையேதான்

வேற்றுமை அதிகம். இலட்சக்கணக்கில் புல்லினம் ஒன்ருே டொன்று இணைந்து வாழ்ந்திடும். உறவோடு ஒட்டி எண்ணிலாத் தாரகைகள் ஒளிர்கின்றன. ஆனுல் ஞாயிறும் மதியமும் தனித்தனியே ஆட்சி செலுத்துகின்றன. சுடர் மங்கித் தொலைவில் காட்டினுள் பாண்டவர்களின் திங்கள் மறைந்துவிட்டது. கௌரவ ஞாயிறு ஒன்றே இன்று நிலவுகிறது; இன்று நான் வெற்றியைக் கண்டவன்.

**திருத:** இன்று தருமம் தோல்வியுற்றது.

**துரி:** உலக தருமமும் அரச தருமமும் ஒன்றல்ல, தந்தையே! உலகத்தின் சமூக வாழ்வில் மக்கள் சமமாக நின்று ஒருவரோடொருவர் நட்புரிமையால் கட்டுண்டவர். ஆனுல் அரசனே தனிப்பெருந் தலைவன். அவனுக்கு நிகரென நிற்பவர் வலிய பகைவர்களே; பேரிடும்பையே; தீய எண்ணங்கள் உலவும் இடங்களே; மூடுமந்திரமே அவன்முன் திகழும்; பின்னுல் பதுங்கியிருக்கும் அச்சமே, புகழும் மொய்ம்பும் குறைந்திடுமோ என்ற ஐயமே அல்லும் பகலும்; ஐசுவரியம் கொள்ளை போகுமோ என்ற கவலையே அவனுக்கு. சாதாரண ஆளானுல், உறவினருடன் பாகப் பிரிவினை செய்துகொள்வதால் பலமே கொள்வான். ஆனுல் செங்கோல் துண்டுபட்டால், அதனுல் பலவீனமே விளைந்து அழிவு நேரும். எல்லாரையும்விடத் தலை நிமிர்ந்து அரசன் உயர்வில் வீற்றிராது போனுல் வெகு தொலைவான நாட்டவரும், மக்களும் அவனுக்குத் தலை வணங்காரெனில் அவன் நிலை பெயராமல் செம்மாந்திருப்பதைக் காணுவிடின், அவன் நிழற்றும் கொற்றம் எப்படி நான்கு திசையிலும் பரவும்? அரச தருமத்தில் உறவினர், உடன்பிறந்தவர் என்பதற்கே இடமில்லை. வெற்றி ஒன்றே அவன் குறிக்கோள். வேந்தே, அதனுலேயே இன்று எனது எண்ணம் ஈடேறியது. இன்று நான் வெற்றியைக் கண்டவன். ஐந்து முடிகள் படைத்த பாண்டவரின் பெற்றிக் குன்று இன்று என் முன் மிகத் தாழ்ந்து இறங்கியே விட்டது.

**திருத:** கபடச் சூழ்வினையாலும், சூதினுலும் கவர்ந்ததை வெற்றி யென்ரு கூறுகிருய்? வெட்கம் கெட்டவனே! அகந்தைக்கு ஆளானவனே!

**துரி:** யார் எதை வேண்டுமானுலும் சொல்லட்டும். அதற்குத் தந்தையாக விளங்குவது கொல்படையே; வெஞ்சமரே. வேங்கைக்கு உள்ளனபோல் கூரிய நகமும் பற்களும் மனிதனுக்கு இல்லை. ஆகவே, வில்லும் அம்பும் கொண்டு அதன் உயிரை மாய்ப்பதனுல் மனிதன் ஏன் வெட்கப்பட வேண்

டும்? மூடனைப் போல் மரணப் படுகுழியில் குதித்து உயிர் விடுவது போர் ஆகாது. வெற்றி ஒன்றே அதன் இலட்சியம். இன்று நான் வெற்றியைக் கண்டவன், தந்தையே! அதனு லேயே இந்தச் செருக்கு.

**திருத:** இன்று நீ வென்றவன். உன்னைப்பற்றிய இழிசொல் இந்த உலகு எங்கும் பரவி உன்னை வெறுத்திடுமே...!

**துரி:** இழிசொல்லா? அதற்கு நான் அஞ்சவில்லை. இந்த இழி சொல் கிளம்பாமல் அதன் மென்னியை அழுத்திடுவேன். என்னைத் தூற்றும் இந்த நகரத்தவரின் நாக்கை அடக்கி என் கழலடிக்கீழ் வைத்து நசுக்கிடுவேன். 'துரியோதனன் மாபாவி; துரியோதனன் கொடியன்; துரியோதனன் ஈனன்.' இதுபோல் இத்தனை நாள் எவ்வளவோ நான் கேட்டுப் பொறுத்து வந் தேன். இந்தச் செங்கோல்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன், வேந்தே! துரியோதனன் அரசன்; அவன் அரசினைக் குறை கூறுவோரையும் இகழ்வோரையும் அவன் சற்றும் பொறுத் திடான்! துரியோதனனுக்குரிய பெயரும் புகழும் அவன் கையிலேயே நிற்பன.

**திருத:** மகனே, கேட்பாய் இதை: மாந்தர் நாக்கிலிருந்து வரும் நிந்தனைச் சொற்களை உன்னால் அகற்றிட முடியும். ஆனால் அவர்கள் உள்ளத்திலே, ஆழ்ந்த இருளில் வேரூன்றிப் படரும் ஒரு நச்சுப் பாம்பு மெல்லத் தலை தூக்குமே! நிலை யில்லா இந்த நிந்தனைப் பேச்சு அதன் வழியே ஆடி ஓய்ந்து விடும்; ஆனால் தன் முழு வலிவுடன் வளர்வதற்கு அதனை இதயக்கோட்டைக்குள் தள்ளிவிடாதே! அன்பின் மந்திரத் தால் அடக்கிவிடு. இன்முறுவல் காட்டிக் குழலிசையால் நிந்தை என்னும் பாம்பினை அடக்கிவிடு.

**துரி:** வெளிப்படாமல், உள்ளத்திடையே குமுறும் நிந்தையால் அர சனுக்குரிய மதிப்புக் குறைந்துவிடாது. அதை நான் சற்றும் பொருட்படுத்த மாட்டேன். அவர்கள் அன்பை நான் பெறா ததால் எனக்கு வேதனை இல்லை. ஆனால் அந்தத் திமிர்தான் எனக்குப் பிடிக்கவில்லை. வேந்தே! அன்பினைத் தருவது அவர்கள் விருப்பத்திற்கு இசைந்து போவதாகும். ஏழை எளியவருக்கு இந்த அன்பின் பிச்சையைத் தரட்டும்; அவர் கள் வளர்க்கும் பூனையிடம் அதைச் செலுத்தட்டும்; வாயி லில் நிற்கும் நாயிடம் காட்டட்டும்; அந்தப் பாண்டவச் சகோதரர்மீது அது படருட்டும். அன்பைக் குறித்து எனக்கு அக்கறை இல்லை! அச்சத்தையே நான் விரும்புகிறேன். இந்த அரசுரிமை பெற்றதால் அது வந்தது. நான் வேண்டுவது வெற்றி: அகந்தை பிடித்தவர்களின் கருவத்தை அழிக்க

வேண்டும். என் விண்ணப்பத்தைக் கேட்பீர், பிதாவே. இதுவரைத் தங்கள் சிங்காதனத்தைச் சூழ்ந்து என்னைத் தூற்றுவோர், உம்மையும் என்னையும் வேறு வேருக்க முள் வேலி ஒன்றை எழுப்பி வந்தனர். பாண்டவர்களைப்பற்றிய புகழுரைகளையும், என்னைப்பற்றிய இகழுரைகளையும் எப் போதும் கேட்டு வந்தேன். அதுபோல், தந்தையின் அன்பி லிருந்தும் நாங்கள் விலக்கப்பட் டிருந்தோம். அது போல், நாங்கள் சிறுவயது தொடங்கி வலிமை குன்றியவரானோம். ஊற்றுக் கசியும் இடத்திலேயே தந்தையன்பு என்னும் இந் தப் பெருக்கிற்குக் கல்போன்ற தடைகள் ஏற்பட்டு நாங்கள் தேய்ந்து போய் வறட்டு ஆருனோம்; உணர்வை இழந்தோம்; முன்னேறவும் வலிமை குன்றிப் போனோம்; தடுக்கி விழுந் தோம். பாண்டவர்களோ பொங்கிக் கரை புரண்டு மட்டுப் படாத விசையுடன் சென்றனர். இன்றுமுதல், தந்தையே, தங்கள் அரியணையின் பக்கலிலிருந்து தூற்றிடும் அந்தக் கூட்டத்தினரை - சஞ்சயன், விதுரன், பாட்டனார் பீஷ்மர் இவர்களை - அகற்றுது போனால், எல்லாம் அறிந்தவர்கள் போல் அவர்களுடைய அறவுரைகள், கடிந்திடும் சொற்கள், வாதங்கள் இவற்றால் இந்த அரசியலைச் சிதைவுபடுத்தி எனது செங்கோலுக்கு இடையூருக அவர்கள் நின்றால் - அரச சக்தி களுக்கிடையே தடங்கலும் தடுமாற்றமும் உண்டு பண்ணி வந்தால், அரச மகுடத்திற்கு அவமதிப்பும் அவமானமும் இழைப்பாரானால் - இத்தகைய முள் நிரம்பிய அரியாசனத் தில் நான் வீற்றிருப்பதில் பயனில்லை; என்னை மன்னிப் பீர்கள், தந்தையே! வேந்தே, பாண்டவர்களுக்கே இந்தக் கொற்றத்தை ஈந்து நான் காட்டில் வாழ்ந்திட விலகிச் செல்கிறேன்.

த: குழந்தாய், என்ன ரோஷமடா! கடுமையானாலும் நல் லெண்ணத்துடன் வரும் நிந்தைச் சொற்களைக் கேட்பத னால், தந்தையின் அன்பு சற்று மட்டுப்படுமாயினும் அது நலனுக்குத்தானே? அதருமத்துக்கு இடந் தந்தேன்; அறி வினை இழந்தேன்; இவை எல்லாம் அந்தப் பாசத்தால்தான்; உன்னைப் பாழாக்கியதும் அந்தப் பாசமே. பழமை மிக்க இந்தக் குரு மரபென்னும் காட்டில் ஊழித் தீயை மூட்டி விட்டேன். இருப்பினும், மகனே, எனக்குப் பாசமில்லை என்று என்னைப் பழிக்காதே! மின்னிடும் மாணிக்கத்தைப் பெறக் கொடிய கருநாகத்தை விரும்பினாய். என் கையா லேயே அதனைப் பிடித்து உன்னிடம் தந்தேன். நான் குருடனடா. புறத்திலும் உள்ளத்திலும் நான் என்றுமே

கண் அவிந்தவன். உன்னை அழைத்துக்கொண்டு பிரளய இருட்டினுள் செல்கின்றேன். கூக்குரலிட்டு நண்பர்கள் என்னைத் தடுக்கின்றனர். இரவில் உலவும் பறவைகள் அலறியே தீய நிமித்தம் காட்டுகின்றன. என்னுடைய வழி வர வரக் குறுகுகிறது. விழப் போகும் பேரிடியை நினைத்து என் உடல் நடுங்குகிறது. இருப்பினும், திண்ணமாகவே இந்தப் பயங்கரப் பாசத்தால் உன்னை என் மார்புடன் தழுவி, காற்றின் வலிவுடன், குருட்டு வேகத்தில் அழிவின் பாதலத்தை நோக்கி, மதி மயங்கி, வெறிபிடித்து, பேயென நகைத்து, விண்வீழ் கொள்ளியென விரைகின்றேன். நீயும் நானுமே தான்; நமக்குத் துணை வச்சிரம் ஏந்தும் அந்த அந்தர்யாமி தான்! எதிரில் நிற்பதை நாம் நோக்கவில்லை; பின் தொடர்ந்து வருவதை விலக்கிடோம்; பள்ளத்தை நோக்கியே பயங்கரச் சுழற்சியில் சிக்கி விழத்தான் செல்கிறோம். இறைவனின் கொழுதடி நம் தலைமீது விழுமென்றும் அந்தத் தருணம் வருமென்றும் திடுமென ஒரு சமயம் நாம் உணர்கிறோம். அதுவரைத் தந்தையின் பாசத்தைக் குறித்து ஐயம் கொள்ளாதே! என் அணைப்பினை உதறிவிடாதே! அதுவரை உன் கை கொண்டமட்டும் தன்னலங் கொண்டு செல்வத்தைக் கொள்ளை கொள். வெற்றி அடைவாய்; இன்பம் எய்துவாய்; தனிச் செங்கோல் ஓச்சு!....யாரடா அங்கே? வெற்றி முரசினைக் கொட்டுங்கள்; சூனிய வானில் வெற்றிக் கொடியை உயர்த்துவீர். இந்த விழவில் நீதி, அறம், உற்றோர், உடன்பிறந்தவர் எவருமே இல்லை. விதுரன் பீஷ்மர் இவர்களும் இல்லை; சஞ்சயனும் இல்லை. உலகத்தவர் பழிமொழியோ, வெட்கமோ, அச்சமோ எதுவுமே இல்லை. மரபினைக் காக்கத் திருமடந்தை இல்லை இனி. குருடனை தந்தை, அறிவுக் கண் இழந்த அவன் மகன், அழிவுக் காலத்தைக் காட்டும் யமன் இவர்களே எஞ்சுவர்.

(ஒற்றர்களின் வருகை)

**ஒற்றன்:** *அரசே! எரியோம்புதல், கடவுள் வழிபாடு இவற்றைத் துறந்து, அந்திப்பொழுதில் ஆற்றும் கடமைகளையும் ஒழித்து, பாண்டவர்களை எதிர்நோக்கி அந்தணர்கள் சதுக்கத்தில் வந்து நிற்கின்றனர். நகரத்தவர் எவரும் இல்லங்களில் தங்கவில்லை; கடை கண்ணிகள் யாவும் மூடிக் கிடக்கின்றன. சந்தி வேளை ஆகியும் பைரவக் கடவுளர் ஆலயத்தில் சங்கொலியோ இன்னியமோ கேட்கவில்லை, புரவல! விளக்குக்கூட எரியவில்லை. நகரின் தோரண வாயிலை நோக்கி, நல்லாடையின்றி, கண்ணீர்*

சோரத் துயருழந்து நரநாரியர் கூட்டங் கூட்டமாகச் செல்கின்றனர்.

**துரி:** *துரியோதனன் எழுந்துவிட்டது அவர்களுக்குத் தெரியாது: மூடர்களே! துரதிர்ஷ்டம் பிடித்தவர்களே! கடுகி வருகிறது உங்களுக்குக் கெட்ட நாள். அரசனும் மக்களும் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளும் தருணம் வருகிறது. பார்க்கலாம், இந்தக் குடிமக்களின் திமிரை! நஞ்சு இராத பாம்பு சீறிப் படம் விரிப்பது போலத்தான் இதுவும் படைக்கலம் இராத வெறும் ஆர்ப்பாட்டமே!*

*(காவலன் வருகை)*

**காவ:** *அரசே! பட்டமாதேவி காந்தாரி அம்மை தங்களைக் காண விரும்புகிறார்.*

**திருத:** *வரச் சொல்; அவளுக்காகக் காத்திருக்கிறேன்.*

**துரி:** *அப்படியானால், தந்தையே, நான் போகிறேன்.*

*(செல்கிறான்)*

**திருத:** *ஓடிப் போகிறாயா? அந்தோ! நீ எப்படிப் பொறுப்பாய் உத்தமியான உன் அன்னை விழியிலிருந்து இறங்கும் பேரிடியை? புண்ணியத்துக்கு அஞ்சி ஓடுபவனே! உனக்கு வெட்கமில்லையா?*

*(காந்தாரி வருகிறாள்)*

**காந்தாரி:** *திருவடிகளில் வணங்கி ஒரு விண்ணப்பம் செய்துகொள்கிறேன். கருணை கூர்ந்து அதை நிறைவேற்ற வேண்டும், நாதா.*

**திருத:** *என்றைக்காவது நிறைவேறாது இருந்ததா, உனது வேண்டுகோள்?*

**காந்:** *துறந்துவிடுங்கள் அவனை, இந்தத் தடவை—*

**திருத:** *யாரை, பட்டமாதேவி?*

**காந்:** *தருமத்தின் வாளினைப் பயங்கரத்தின் சாணைக்கல்லில் இட்டுப் பாபச் செயலில் இறங்கும் அந்த அறிவிலியை—*

**திருத:** *யார் அவன்? எங்கே இருக்கிறான்? அவன் பெயரை மட்டும் சொல்.*

**காந்:** *மகன் துரியோதனன்—*

**திருத:** *அவனையா துறப்பது?*

**காந்:** *ஆமாம்; இந்தக் கோரிக்கையைத்தான் தங்கள் திருவடிகளில் வைத்தேன்.*

**திருத:** *ஐயோ, கடுமையான வேண்டுதல், ஏ காந்தாரி, ராஜமாதா—*

**காந்:** இந்தப் பிரார்த்தனை - முறையிடு - என்னுடையது மட்டுமா? ஏ கௌரவ, குரு மரபின் முன்னோர்கள் சொர்க்கத்திலிருந்து இந்த வேண்டுகோளையே விடுக்கின்றனர். மன்னவா, துறந்திடுவீர், துறந்திடுவீர் அவனை! அவனுடைய அட்டூழியங்களால் கௌரவ குலத்தின் இலட்சுமியே இரவும் பகலும் கண்ணீர் வடித்து, நாட்டை விட்டு விடைபெறும் தருணத்திற்காகக் காத்திருக்கிறாள்.

**திருத:** நன்னெறி வழுவிச் சென்றவனை அறக்கடவுள் காய்ந்திடும்..நானோ தந்தை.

**காந்:** நான் அவனுக்குத் தாயல்லவா? அவனைக் கருத் தரித்துச் சற்றும் உறங்காமல் என் இதயத்துள் சுமக்கவில்லையா? அவன் சிசுவாக இருக்கையில், கரவற்ற அவனது முகத்தை நோக்கி அன்பும் ஆதரவும் கொண்டு என் உள்ளம் பூரிக்க, முலைப்பால் ஊட்டி வளர்க்கவில்லையா? கிளையில் ஒட்டிய கனியெனத் தன் சின்னஞ் சிறு கைத்தளிரால் என் மார்பைத் தடவி அவன் வளரவில்லையா? நான் சிரித்தால் அவனும் சிரிப்பான். என் பேச்சைக் கொண்டு மழலை பொழிவான். என் உயிரிலிருந்தே தன் உயிரையும் பெற்றான். இருப்பினும், அரசே, இதோ கூறுகிறேன்: அந்த மகன் துரியோதனனைத் துறந்துவிடுங்கள்!

**திருத:** அவனைத் துறந்துவிட்டு எதை நம்பி நான் வாழ்வது?

**காந்:** உமது தருமத்தை.

**திருத:** அந்தத் தருமம் எதைத் தந்திடும்?

**காந்:** புதுப் புது வகையான துயரைத்தான். பிள்ளைப் பாசம், அரச இன்பம் இவற்றை அதருமத்துக்கு எதிராகப் பணயம் வைத்து, முள்ளென உறுத்தினும் தருமத்தையே தழுவுவோம்.

**திருத:** அந்தோ, அன்புடையாளே! அறத்தினுக்கு அஞ்சியே சூதாட்டத்தில் பாண்டவர்கள் இழந்த செல்வத்தையும் அரசையும் அவர்களுக்கே ஒரு சமயம் திருப்பித் தந்தேன். மறு கணமே தந்தையின் வாஞ்சை என் செவிக்குள் நூறு தடவைக்குமேல், 'என்ன செய்தாயடா! ஒரே சமயத்தில் தருமம், அதருமம் என்ற இரு தோணியிலும் காலை வைத்து எவனாவது முன்னுக்கு வந்தானா? இந்தப் பாபத்தின் சுழலில் கௌரவ மக்கள் இறங்கிவிட்ட பிறகு தருமத்துக்கு உடன்படுவது என்பது பொய்யே. பாக்கியமற்றவனே, முதியவனே, அறிவை இழந்தவனே, வலிமையற்று இந்தத் தயக்கத்தில் சிக்கி என்ன செய்தாய்! அவ

மதிப்புக்குள்ளாக்கி அரசினைத் திருப்பித் தந்தாயானல் பாண்டவர்களின் நல்லெண்ணம் கிடைத்துவிடாது; புதிய தொந்தரைதான் - நெருப்பில் இட்ட பரிசேதான்! அவமானத்துக்கு உள்ளானோர் கையில் திறமையென்னும் படைக்கலத்தைக் கொடுப்பது நீ மரித்தொழிவதற்கேயாம். திறமை மிக்கவரை மேலோடு வருத்துவதை நிறுத்தாதே; அடியோடு நசுக்கிவிடு! பாபத்துடன் வீண் விளையாட்டு எதற்கு? அதை நீ ஏற்பதானல் பூரண விருப்புடன் ஏற்றிடுவாய்' என்று ஓதுகிறது; தீய சிந்தனை, தந்தையின் வாஞ்சை என்னும் உருவில் இப்படி என் காதில் மெல்லக் குத்திக் கூறியது. கூரிய ஊசியெனத் துளைத்தது அதன் பேச்சு. மீண்டும் பாண்டவர்களை அனுப்பிவிட்டேன். சூதாட்டத்தின் சூழ்ச்சியால் நீண்ட வனவாசம் செய்ய அவர்களைத் துரத்திவிட்டேன். அந்தோ, தருமமே! அந்தோ, இயற்கையின் போக்கே! இந்த வாழ்வின் மருமத்தை யாரே அறிவார்?

**காந்:** ஐசுவரியத்தின் ஏதுவன்று தருமம். இன்பத்திற்கு அழைத்துச் செல்லும் குறுகிய பாலம் அன்று அது. தருமமே தருமத்தின் முடிவாகும். கல்லாப் பேதை நான். தருமத்தைப் பற்றி உங்களுக்கு எடுத்துச் சொல்ல என்னல் ஆகுமா, ஐயா? இவை யாவும் உங்களுக்குத் தெரிந்தவைதாம். பாண்டவர்கள் காட்டுக்குச் செல்வார்கள்; திரும்பச் சொன்னலும் திரும்பார்; உறுதி பூண்டவர்கள். இப்பொழுது இந்தப் பேரரசுக்கு நீங்களே தனிப் பெருந் தலைவர், வேந்தே! இப்பொழுது மகனைத் துறந்திடும். பாபம் என்னவென்று அறியாதவர்களுக்குத் துன்பம் தந்து முழுச் சுகத்தையும் நீரே பெறவேண்டாம். நீதி முறைமையை மக்கள் மன்றத்திலிருந்து அகற்றி விடாதீர். துன்பத்தைப் பொறுப்பது எளிதன்று. இன்றுமுதல், தரும வேந்தே, அதை என் தலை மீது எடுத்து வைப்பீர்.

**திருத:** ஐயோ, பட்ட மாதேவியே! உண்மை மிக்கது உனது நல்லுரை; உன் வாக்கிலிருந்து வருவது தீவிர உண்மையே.

**காந்:** அதருமத்தின் தேன் பூச்சுடைய விஷக் கனியை வைத்துக் கொண்டு ஆடுகின்றான் மகன். வாஞ்சையில் மறந்து அக்கனியை அவன் உண்ணத் தராதீர். அதைப் பிடுங்கி எறிந்துவிட்டு, அவனை அழ மூட்டுங்கள். சூழ்வினையால் பெற்ற, பாபத்தால் பெருத்த அரசு, செல்வம், பரிவாரம் இவற்றைத் துறந்து அவனும் வெளியே போகட்டும். வஞ்சனைக்கு இரையாகிய பாண்டவர்களுக்குச் சமமாக அவனும் துன்பத்தை நுகரட்டும்.

**திருத:** இறைவன் தருமத்தினின்று பிறழாதவன். அவன் விழிப்புடன் இருக்கிறான். அவனுடைய தரும தண்டம் எப்போதும் ஓங்கியே நிற்கிறது. அசையாத நெஞ்சத்தோய்! அவனுடைய உலகில், அவன் தன் வினையை ஆற்றிச் செல்வான். நான் தந்தை—

**காந்:** நீங்கள் அரசர், வேந்தர்வேந்தர், இறைவனின் இடது கரம் போன்றவர். அறத்தைக் காக்கும் உரிமையை உம் கையிலேயே அவன் அளித்துள்ளான். ஒன்று வினவுகின்றேன் உங்களை: உங்கள் பிரஜை எவனாவது கற்புடைய அபலையை, குற்றம் அவள் செய்யாதிருப்பினும் பிறர் வீட்டிலிருந்து இழுத்து வந்து துன்புறுத்துவானாயின், என்ன தண்டனை அவனுக்குத் தருவீர்?

**திருத:** நாட்டின் எல்லையை விட்டே அப்புறப்படுத்துவேன்.

**காந்:** ஆகவே, இன்று அரசன் காலடியில் விழுந்து, உலகத்துப் பெண்பாலார் சார்பில் கண்ணீர் விட்டு நான் நியாய விசாரணை செய்ய உம்மை வேண்டுகிறேன். மகன் துரியோதனன் குற்றம் செய்தவன், ஐயனே! நீங்கள் இதற்குச் சாட்சியம், அரசே! தன்னலத்தை முன்னிட்டு ஆண்களிடையே சண்டை சச்சரவெல்லாம் நித்தியம் மூள்வதுண்டு. நல்லது, கெட்டது என்பதை உணரார் அவர்கள். சூழ்ச்சி, மருட்டல், கோள் இவை போன்ற ஆயிரம் வழிகளைக் கையாள்வர். ஆண்களுடைய போக்கு ஆண்களுக்குத்தான் தெரியும்! வன்மைக்கு எதிர்ப்பு வன்மைதான். சூழ்ச்சியைக் கவிழ்க்க மற்றொரு சூழ்ச்சி. நாங்களே இதற்கெல்லாம் விலகித் தொலைவில் நிற்பவர். நாங்கள் இல்லறப் பணியில் அமைதி கண்டு அந்தப்புரத்துள் வாழ்கிறோம்; வெளிப் போராட்டத்தினால் விளையும் வெம்மையை அங்குமா கொண்டு வர வேண்டும்? இது ஆடவர்களுடன் நிற்கவில்லையே! அந்தப்புரத்தினுள் நுழைந்து, திக்கற்றவளும் இல்லறத்திலுள்ளவளுமான ஒரு பெண்ணின் புனித உடலை மாசு மிகுந்த கையால் தீண்டி இழிவுபடுத்தவேண்டுமா? கணவன்மீது மூண்டெழுந்த பகையால், அவனுடைய பத்தினிப் பெண்ணின் மானத்தைப் போக்கி வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் மனிதன் கல்நெஞ்சன் மட்டுமல்ல; பேடியும் ஆவான். அரசே, அவனுக்குரிய தண்டனை என்னவோ? மாசில்லாத புருவம்சத்திற்கு ஒரு பாபம் தோன்றினாலும் அதைப் பொறுத்துக் கொள்ளலாம்; ஆனால், ஐயா, வீரமக்களை என் வயிற்றில் பெற்றேன் எனப் பெருமிதம் கொண்டிருந்தேன். ஐயோ, நாதா! பாவம், அநாதையான பாஞ்சாலியின் அழுகுரல்

இந்தப் பாறைச் சுவரினையும் வெட்கம், வெறுப்பு, இரக்கம், அநுதாபம் இவற்றை எழுப்பி இளகச் செய்ததே! சட்டென்று சாளர வாயிலருகில் வந்து என்ன வென்று நோக்கினேன். அந்த அபலையின் இடையிலிருந்து துகிலைப் பறித்தவண்ணம் காந்தாரியின் பேய் மக்கள், அந்த நெடுஞ் சபையில் இடி இடியென்று நகைப்பதைக் கண்டேன். தரும தேவதைக்குத்தான் தெரியும்: அன்றே என் ஜன்மத்துக்கும், மக்களை ஈன்ற என் பெருமிதம் தூளாகியது. கௌரவ மன்னர்களே, உங்கள் ஆண்மை எங்கே பதுங்கிக்கொண்டதோ? பரதகுலத்தவரே, நீங்கள் யாவரும் தேர் ஊரும் திறல் வேந்தர்கள். உயிரற்ற பொருள்களென அதைப் பார்த்துக்கொண்டு அங்கு வீற்றிருந்தீர்கள்! உங்களில் சிலர் நகைத்தனர்; சிலர் குதூகலத்தால் காதோடு காது வைத்துப் பேசினர். படைக் கொட்டிலில் வாளும் வேலும் மழுங்கிய மின்னலென உறங்கின. அரசே! என் வேண்டுதலை ஏற்பீர்; அன்னையின் அவமானத்தைப் போக்குவீர். வீர தருமத்தை நிலைநிறுத்தும். காலின்கீழ்க் குழைபடும் பெண் தன்மையின் அழுகையைத் துடைத்திடுவீர்; தாழ்வுற்ற நெறிமுறையைத் தலை தூக்கச் செய்வீர்; துரியோதனனைத் துறப்பீர்.

**திருத:** அநுதாபம் வாட்டியும் என் உள்ளத்தை வீணே இடித்துச் சொல்கிறாய்.

**காந்:** என்னையும் வேதனைகள் நூறு மடங்காக அலைக்கவில்லையா, நாதா? தண்டனைக்கு உரியவருடன் தண்டனை விதிப்பவன் சமமமான அதிர்ச்சி கொண்டு கண்ணீர் சிந்துவானாயின் அதுவே சிறப்பான நீதி விசாரணையாகும். எவர் பொருட்டு இதயத்துள் சிறிதும் இரக்கம் இல்லையோ, அவருக்குத் தண்டனை விதிப்பது வலிவுள்ளவன் செய்யும் கொடுமையாகும். உம் புத்திரனுக்கே இத்தகைய தண்டனையை இட உங்களால் ஆகாது போனால், பிறரையும் தண்டனைக்கு உட்படுத்தக் கூடாது. வேறு ஒருவன் குற்றம் செய்து தண்டனை பெறுவானாயின், அவன் பொருட்டு வேதனை கொள்ள ஒரு தந்தை இருப்பான். அப்பொழுது நீங்கள் அவன் விஷயத்தில் பெருங்குற்றம் செய்தவராவீர்; நீதிபதியே! நாம் அனைவரும் இந்த உலகு படைத்தவனின் மக்கள் என்பது உமக்குத் தெரியும். சொந்த மகனை விசாரணை செய்ய அந்த நாராயணன் உமக்கு உரிமை அளித்துள்ளான். துயரையும் தருகிறான்; அதனுடன் துயரையும் தான் அடைகிறான். இன்றேல், நீதி வழங்குவதற்கே அவனுக்குத் தகுதி

இராதே! படித்தறியாத பேதை நான். என் உள்ளத்தில் இந்தப் பேருண்மையை உணர்கின்றேன். விசாரணையின்றிப் பாபியாகிய மகனை மன்னித்தீராஞல், அரசே, குற்றம் செய்த மற்றவர்களுக்கு நீர் அளித்த தண்டனை யாவும் உங்கள்மீதே திரும்பும். உமது நியாயத் தீர்ப்பு உமது பெயரையே கறைப்படுத்தும். சொன்னேன்: அந்தப் பாபி துரியோதனனைத் துறந்திடும்!

**திருத:** அன்புடையாளே, அடக்கிக் கொள், உன் வார்த்தையை! இந்தப் பாச வலையை அறுத்தெறிய என்னுல் ஆகாது. நல்லறத்தைப் புகட்டும் இந்தப் பேச்சுக்கள் வீணே என்னை வருத்துகின்றன. பாபியான என் மகனைத் துறப்பது இறைவன் கையிலுள்ள காரியம். அதனுலேயே மகனைத் துறக்க என்னுல் முடியவில்லை. அவனுக்குத் துணை நான் ஒருவன்தானே! வெறிகொண்ட இந்தச் சுழலிடையே குதித்திருக்கும் என் மகனை எப்படி விட்டுச் செல்வேன்? அவனை மீட்கும் நம்பிக்கை இராது போனுலும் என்னுல் முடிந்த மட்டும், அவனை என் மார்புறத் தழுவிக்கொள்வேன்.... அவனுடன் சேர்ந்தே அதே பாபச் சுழலில் சிக்கி அழிவின் ஆழத்துள் மூழ்கி இறப்பேன். அவனது பாபச் சுமையில் பங்கு கொள்வேன். அவனுடைய தீய சிந்தனை விளைவித்ததில் பாதி எனக்கும் பாகம் உண்டு. இதுவே எனக்குள்ள ஆறுதல். இது விசாரணைக்கு ஏற்ற சமயம் அன்று. இதற்கு வழியே இல்லை. நடக்க வேண்டியது நடந்தாகிவிட்டது; அதன் விளைவு வந்துதானே தீரும்.

(செல்கின்றுன்)

**காந்:** அமைதியை இழந்த என் நெஞ்சமே, நிலை கலங்காது நில்! விதிக்கு உன் தலையைத் தாழ்த்து: பொறுமையுடன் காத்திரு. நீள் இரவுக்குப் பின்னர்க் காலம் தன்னைத் திருத்திக்கொள்ள விழித்தெழுகையில், பொறுக்க முடியாத இறுக்கத்தால் காற்று அசைவின்றி இருப்பது போலவே தோன்றும். திடுமெனப் புயல் எழுகிறது; பயங்கரக் கொடுக்கால் குருட்டுத் தேள் ஒன்று கொட்டுவது போல் தலைமீது இடிமின்னலைப் பாய்ச்சுகிறது. காலம் இப்படி உறக்கம் தெளிந்து எழுவதைக் கண்டு, 'என்னே இக்காலத்தின் கோலம்!' என்கின்றனர் யாவரும். தலையை வணங்கு, பெண்ணே! கும்பிடு மகா காலனின் கழலினை. ரௌத்திர உலகத்திலிருந்து விசையுடன் தேர் உருண்டு வரும் பேரொலி, அதோ இடிமுழக்கமெனக் கேட்கிறது! நடுங்கித் துவளும் உன் இதய பிண்டத்தை அதன் சக்கரத்தின் கீழ்ப் பரப்பிடு. இமைக்கும்

நேரந்தான்; அதன் கீழ் நசுங்கி, இரத்தம் தோய்ந்த உன் உள்ளம் காலக் கடவுளுக்குக் காணிக்கை செலுத்தும் செங் குவளையாகத் திகழட்டும். வானளாவப் புழுதிப் படலம் பறக் கும்; மாநிலமே நடுங்கிடும்; சட்டென்று எங்கும் அழுகை யோலம் எழும்: 'ஐயோ, பெண்ணினமே! அநாதைப் பெண் களே! ஐயோ! ஐயோ! வீரர்களின் பத்தினிமாரே! வீரரை ஈன்ற அன்னைமாரே! ஐயோ!' என்ற கூக்குரல்தான். அச்சம யம் புழுதியில் தலை தாழ்த்தி, கண்களைப் பொத்தி மெல்லப் புரள்வாய். அதன் பின்னர், நிச்சயமாக வருமே பெரிய மாறு தல்; கடுமையும், கருணையும் கலந்த, விவரிக்கவொண்ணுத பேரமைதி..நமோ..நமோ..நம: நலனைத் தரும், தண்மை நிரம்பிய மன்னிப்பு...நமோ...நமோ...பகையால் மூண்ட பயங்கரப் பரிணமம்...சிதையின் சாம்பல் பூசிய விடுதலை!

[துரியோதனன் மனைவி பானுமதியின் வருகை; அவள் பணிப்பெண்களை நோக்கிச் சொல்கிருள்.]

**பானு:** இந்துமுகி! அடீ பரபிருதை! மலர்மாலை, மங்கல அணிகள், புதுக் கூறை யாவும் தலைமீது தூக்கிக்கொள்ளுங்கள்.

**காந்:** குழந்தாய், மெல்ல...மெல்ல! கௌரவர் அரண்மனையில் இன்று விழா போலும்! புது ஆடை அணிகலனுடன் எங்கே செல்கிருய், அம்மா?

**பானு:** பகைவர் தோற்றுப் போய் நாட்டை விட்டு ஓடிப்போகும் நல்ல வேளை அல்லவா இன்று!

**காந்:** உற்ருர் உறவினர் எவருக்குப் பகைவரோ அவர்கள் ஆன்மாவே அவர்களுக்கு நித்திய விரோதி; தருமமே அவர்களுக்குச் சத்துரு; வெல்லற்கரிய பகைவர். எதற்காக இந்தப் புது அணிகள், நலம் மிக்கவளே?

**பானு:** தோள் வலிமையால் உலகை வென்று அந்தப் பஞ்சவர் தம் மடந்தை பாஞ்சாலியை மணிரத்தின அணிகளால் அலங் கரித்தனர். ராஜாசூய வேள்வியின்போது செல்வத்தில் இறு மாந்திருந்த அந்தத் திரௌபதியின் உடலில் மின்னின மணிக்குவை கௌரவ வனிதையரின் இருதயத்துள் ஆயிரம் ஊசிகளெனப் பாய்ந்து வருத்தியது. இன்று அந்த நகை களை நான் பூண்டுள்ளேன். அவர்கள் காடு நோக்கிச் செல் கின்றனர்.

**காந்:** பேதாய்! நீ நல்ல படிப்பினை கற்கவில்லை இன்னும். இந்த மணி மாணிக்கத்தைக் கொண்டே இவ்வாறு அகந்தை கொள்கிருய். பயங்கர ஒளியை விடுகின்றன இவை. இது ஊழிக்கூத்தின் அலங்காரம்! இன்று இந்த மணிக்குவை யுக

முடிவில் தோன்றும் எரிநட்சத்திரம் என உன்னை எரித்திட வில்லையா? இந்த ரத்தின நெற்றிச்சுட்டி பாக்கியத்தைக் குலைக்கும் இடியின் அனற்கொழுந்து. உன்னைக் கண்டதும் என் உடலெங்கும் அச்சத்தின் நடுக்கம் பாய்கிறது. எனது உள்ளம் ஓவெனக் கதறுகிறது. நீ பூண்டுள்ள அணிகலன் களின் அசைவு, தாண்டவமாடும் பைரவியின் கிண்கிணி ஒலிபோல் என் செவியில் ஒலிக்கிறது.

பாநு: அம்மா, நாம் க்ஷத்திரிய மாதர்கள்; துர்ப்பாக்கியத் திற்கு அஞ்சாதவர். வெற்றி சில சமயம் வரும்: தோல்வி சில சமயம் நேரும். க்ஷத்திரிய சூரியனுக்கு எழுச்சி, வீழ்ச்சி இரண்டுமே உண்டு. காயும் உச்சிப் பகலும் உண்டு; தாழ்ந்திடும் அந்திப் பொழுதும் உண்டு. அம்மா, இதை நினைவில் கொண்டே க்ஷத்திரிய மடந்தையர் உள்ளத்திடை ஐயம் ஊசலாடினாலும், எந்தத் துன்பத்துக்கும் சிறிதும் அஞ்சார். அப்படிக் கெட்ட நாள் வந்திடின் தமக்கு நேரும் துர்ப்பாக்கியத்தை எள்ளி நகைப்பர். எப்படி மரிப்பது என்ற வழியும் அவர்களுக்குத் தெரியும், தேவி! எப்படி வாழ்வது என்பதையும் கற்றறிந்திருக்கிறேன். உங்கள் திருவடிகளில் வணங்குகின்றேன்.

காந்: குழந்தாய், உனக்கு மட்டுமா, அம்மா? நாம் எல்லோருமே அந்தப் பசிக்கு இரையாவோம். ஒரே அழுகையோலம் நாடெங்கிலும் நிரம்பும்; வீரர்கள் படுகளத்தில் மடிவார்கள். இரத்தச் சேற்றிலே, கைம்பெண்களின் கண்ணீர் பெருகி யோடும். அணி அலங்காரம் யாவும், மங்கல மகளிரின் உடலினின்று கழன்று, சூறுவளியில் சிதைந்து போன மாந் தளிரென உதிர்ந்து கிடக்கும். குழந்தாய், தகர்த்தெறி யாதே, கட்டமைந்த பாலத்தை! விளையாட்டெனப் புரட்சிக் கொடியைத் தூக்காதே, வாழும் வீட்டில்! இது மகிழ்ச்சிக் குரிய நாளன்று. நம் உறவினருக்கு மூண்ட கேட்டினைச் சாக் கிட்டு உன் உடலில் இந்த நகைகளைப் பூண்டு பெருமிதம் கொள்ளாதே! இன்று தொடங்கி தூய உள்ளத்துடன் பட் டினி நோன்பு இரு. பிணைத்த கூந்தலை விரித்திடு. தெய் வத்துக்கு அமைதியுள்ளத்துடன் அருச்சனை செய். பாபம் தலைவிரித்தே குதூகலிக்க இந்த நாளில் உனது அகந்தை யினால் இறைவனை இழிவுபடுத்தாதே! இழைகளைக் கழற்றி எறி! வண்ண ஆடையைக் களைந்திடு! விழாவின் வாத்திய ஒலியை நிறுத்து! அரச ஆடம்பரத்தைத் துறந்திடு! கனல்

எரியும் இடத்துக்குச் செல், மகளே! புரோகிதனை அழைத்திடு; தூய சிந்தனையுடன் காலத்தை எதிர்நோக்கி இரு!

(பானுமதி செல்கிறாள்)

[திரௌபதியுடன் பாண்டவர் ஐவர் வருகை]

**யுதிட்டிரன்:** விடை பெறுமுன், அம்மா, உங்கள் ஆசியைக் கோரி வந்துள்ளேன்.

**காந்:** என் குழந்தைகளே, உங்களுடைய பாக்கியக் கதிரவன் துன்ப இரவு கழிந்ததும் இரு மடங்கு ஒளியுடன் எழும். வாயு தேவனிடமிருந்து வன்மையும், கதிரவனிடமிருந்து ஒளியும், மாநிலத்திலிருந்து பொறுமையும் சகிப்பும் பெறுவீராக! துயரையே நான் விரதமாகக் கொண்டுள்ளேன், என் மகனே. வறுமையின் மறைவில் இலட்சுமி உங்கள் பின்னாலேயே யாரும் அறியாவண்ணம் எளிய வேடம் கொண்டு வருவாள்; துயரினின்று உங்கள் பொருட்டு அழியாப் பேறு அவள் திரட்டித் தருவாள். என்றும் அச்சமின்றியே உங்களுடைய வனவாழ்க்கை இருப்பதாக. ஒரு பாபத்தையும் அறியாமல் நீங்கள் படும் இந்தத் துன்பம் சுடச் சுடப் பொன் போல் ஒளிவீசும் உங்கள் உள்ளத்தில். இதுவே உங்களுக்கு மிகவும் துணை செய்யும். இந்தத் துயருக்குக் கடமைப்பட்டிருப்பவர் தருமதேவதையான விதி புருஷர். அவர் கையாலேயே இந்தக் கடமையைத் தீர்க்கும்பொழுது இவ்வுலகில் உங்களுக்கு இடையூறாக தேவரோ மனிதரோ நிற்க முடியாதே! என் மகன் செய்துள்ள தவறுகள் அனைத்தையும் துண்டித்து விடட்டும், நான் உங்களுக்குத் தரும் ஆசி. என் பிள்ளைகளைவிடச் சிறந்த புதல்வர்களே! இந்த அநீதங்கள், ஆழ்கடலைக் கடைந்தெடுத்த நலத்தையே விளைவிப்பனவாக! (திரௌபதியைத் தழுவி) மண்ணில் வீழ்ந்த பொற்கொடி! என் அருமைச் செல்வி! பாம்பு விழுங்கிய மதியே! ஒரு முறை முகம் நிமிர்ந்து பார்: நான் கூறுவதைக் கேட்பாய். உன்னை அவமதித்ததால் அவர்களும் அவமதிப்புக்கு உள்ளானார்கள். இந்த உலகில் என்றென்றும் இது பதிந்து நிற்கும். அழிக்க வொண்ணாதது இந்தக் களங்கம். உனக்கு நேரிட்ட இந்த அவமானம், இந்த உலகத்துக் குலமடந்தையர் அத்தனை பேருக்குந்தான்! பத்தினிப் பெண்ணை ஒரு பேடி மகன் அலைக்கழித்த இந்தக் கதையின் வரலாறு மறையாது. முகம் வாடாமல் கணவன்மாருடன் செல்வாய், அம்மா; நீ தங்கும் காட்டகத்தையே பொன்னுலகாக்கு; துன்பத்தை இன்பமாக மாற்று. எங்கள் குடி

புகுந்த மகளே, உன் கணவரின் உள்ளத் துயரினை எண்ணிக் கற்புக்கரசியாய்த் திகழ்வாய். அரச மாளிகையில்தான் இரவு பகலும், பல வகை ஏற்பாடுகள். வனத்தில் நீ தனி ஆள். எல்லா இன்பமும், எல்லாருடைய நட்புரிமை, பாக்கியம், ஆறுதல் யாவும் உன் ஒருத்திக்கே. எல்லோருக்கும் நீயே ஆதரவு. சோர்விடைத் தென்பினை ஊட்டு; அமைதியைத் தருவாய்; நோய்க்கு மருந்து போன்றவள் நீ; கெட்ட நாளில் கைகொடுக்கும் மங்கல தேவதை நீ; இருட்டினை ஒளிபெறச் செய்யும் உதய வேளை நீ; யாவருக்கும் உறைவிடமாய்த் தனிச் சிறப்புடன் திகழ்வாய். பணி செய்வதே கடமையெனக் கொள். தாயாக இருந்திடுவாய். இனிய மனையாட்டியாக விளங்குவாய். உனது கற்பென்னும் வெண் தாமரை முழு மணத்துடன் இதழ் விரித்து அழியாப் பெருமையை அளிக்கும்.

(மார்ச்சு, 1900) —காஹிநி

## 32

## வைசாகம்

ஏ பயங்கரனே, சினந்தெழும் வைசாகமே!
செம்புழுதியென உன் சடைக்கற்றை
விரிகோலமாய்ப் பறந்திட
தவத்தால் காயும் மேனியாய்
அச்சந் தரும் வங்கியம் வாயில் வைத்து
யாரை அழைக்கின்றாயோ?

ஏ பயங்கரனே, வெகுண்டெழும் வைசாகமே!
நிழலெனத் தொடரும் உன் ஏவல்மக்கள்
செப்புத் தகடெனத் தோன்றிடும்
தொடுவான் பிளவிலிருந்து
ஓடி வருகின்றனர்.

புலன் காணு உன் ஏவலாட்கள்
பகல் வேளையில் ஆடும் வெறியாடல்தான் என்னே!
வெறியாடி ஓய்ந்து, வெங்கனல் மூச்செறிகிறது;
இருந்து இருந்து எரித்து எரித்துச் சுழல்கிறது
உக்கிர விசையுடன்.
புல்லும் சருகும் பறந்திட,

வெற்று வானை உலைத்தே
சுழலும் சந்தத்துடன் ஆடுகிறது புழுதிப் படலம்;
வெவ்விய மூச்செறிகிறது கோடைக் கனல்.
கண்கள் சுடர்விடும் மேனி உலர்ந்த
கடுந்தவத்தோய்!
செவ்விழி தூக்கி, நுதலிடை நிறுத்திப
பதுமாசனம் இட்டு,
நீர் வறண்ட ஆற்றங்கரையில், பசும் பயிர் ஆடா
வேட்கையால் வெடிக்கும் வயல் வெளியில்வீற்றிரு.
எதிலும் நாட்டம் இராதோய்!
விழிகள் கனலும் மெய்உலர் தவசியே!
மாபெரு வானத்தை நக்கித் தின்னவே
சுடலைத் தீயின் செந்நாக்கு
உன்முன் ஒளிர்ந்திடுகிறது.
பின்னெழுந்த ஆண்டில் உலகம் ஒதுக்கிய
மரித்த புழுதிக் குவைதனைச் சாம்பலாக்கிச்
சுடர்கிறது சுடலைத்தீ உன்முன்.

ஏ வைராகி, அமைதியின் மந்திரமதை ஓதிடு;
இடமும் வலமும் உன் கம்பீரக்குரல்
ஆற்றைக் கடந்து, ஊர்கள் எங்கும்
விடர்வெளி யாவும் நிரப்பியே பரவட்டும்.
ஏ வைராகி, அமைதியின் மந்திரம் ஓதிடு;
கருணை இழையும் உனது மந்திரத்துடன்
உள்ளமதை உருக்கிடும் துயர் அனைத்தும்
பாரெங்கிலும் பரவி நிற்கட்டும்.
புறுவின் களைப்புறுங் குரலில்,
சுருங்கிச் செல்லும் கங்கையின் நீரில்,
அரசமரத்தின் நிழலில்,
கருணை இழையும் உன் மந்திரத்தைப் பரப்பு.
இன்ப துன்பம், ஆசை நிராசை யாவுமே
நீ ஊதிடும் துகளினைப் போல்
வானிடைப் பறக்கட்டும்.
புதரில் உதிரும் மலரின் இன்மணத்தைத்
துயர்கொள் வானிடை நிரப்பிடு.
உனது காவி ஆடையை
பரந்த வைராக்கியத்தால் போர்த்து.
வானிடை விரித்துப் போர்த்திடு!
மூப்பு சாக்காடு, பசி வேட்கை,

கணக்கில்லா நரநாரியரின் கலங்கிய சித்தம்
இவற்றிடைப் பரப்பிடு உனது காவியாடையை.
உன் குரலை எழுப்பு, ஏ வெம்மை வைசாகமே!
பகல் உறக்கம் உதறியே வாயிலை விட்டு
நான் வெளியே சென்றிடுவேன்.
புல் தீய்ந்து எவரும் நடமாடாத
வானைத் தொடும் நெடுவெளியை
அசைவின்றிப் பேச்சின்றி நோக்கிடுவேன்.
ஏ பயங்கரனே, வெம்மை வைசாகமே!
(மே, 1900) —கல்பனு

## 33

# புது மழை

இன்று எனது உள்ளம் தோகை மயிலென
ஆடுகின்றதடா!
பலநிற உணர்வும் மனவெழுச்சியும்
பீலி விரித்தே ஆடுகின்றனவே!
நெஞ்சாகுலத்துடன், யாரை விரும்பியோ
வானத்தை நோக்கி உல்லாசமாகவே
எனது உள்ளம், இன்று தோகை மயிலெனவே
ஆடுகின்றதடா!

கிடுகிடுவென வானிலே
உறுமுகின்றன கார்முகில்கள்.
தாவியே வருகிறது மழையின் பாட்டம்.
பைங்கதிர்கள் அசைந்தாடுகின்றன.
புறு தன் கூட்டில் அஞ்சி நடுங்குகிறது.
ஓயாது கத்துகிறது தவளையும்.
கிடுகிடுவென உறுமுகின்றன கருமுகில்கள்.
நீருண்ட முகிலின் நீல மை
என் கண்களில் படிகின்றது.

இளம் புல்தளிரிலும், இருண்ட காட்டு நிழலிலும்
எனது உள்ளம் படர்ந்து செல்கின்றது.
சிலிர்த்திடும் கடப்பஞ் சோலையில்
இன்று மலர்ச்சியுடன் உயிர் எழுகின்றது.
நீருண்ட முகிலின் நீல மை என் கண்களில் படிகின்றது.
மாளிகைமீது இன்று தன் கூந்தலை விரித்திட்டவள் யாரோ?
தன் மென்குழலை விரித்திட்டவள் யாரோ?

புது மேகமென நீல ஆடையைத்
தன் மார்பினில் இழுத்துக்கொண்டவள் யாரோ?
சட்டென மறையும் மின்னொளியில்
இப்படி விளையாடுகின்றவள் யாரோ?
மாளிகைமீது இன்று, தன் கூந்தலை விரித்திட்டவள் யாரோ?

ஆற்றங்கரையில் மெல்லிய புல் அணையில்
துல்லிய ஆடையுடன் பைந்நிற ஆடை போர்த்து
வீற்றிருப்பவள் யாரோ?

தொடுவானிடை யாரை நோக்குகின்றாள் அவள்?
துறையை விட்டு அவள் குடம் நீரில் மிதந்து செல்கிறதே!
புது மாலதி மலரின் மெல்லிய இதழைப்
பல்லால் கடிக்கின்றாள். வேறெங்கோ மனம் நிலைத்திட,
ஆற்றங்கரையில் மெல்லிய புல் பாயலில்
பைந்நிற ஆடையுடன் வீற்றிருப்பவள் யாரோ?

யாரும் இராத அம் மகிழமரத்தடியில், அதன் கிளையில்
ஊசலில் ஆடும் அவள் யாரோ?
புலபுலவென்று உதிரும் பூக்கள்;
அவள் மேலாடை காற்றில் விரிகிறது;
அலையெனப் பறக்கும் கூந்தல் அவள் கண்ணை மூடுகிறது;
அவள் குழல் அவிழ்ந்து விழுகிறது;
யாரும் இராத அம்மகிழ மரத்தடியில், அதன் கிளையில்
ஊசலில் ஆடும் அவள் யாரோ?

மடலவிழ் தாழைசூழ் வேலியில், தன்
பரிசலைப் பிணைத்தவள் யாரோ?

பாசியைக் குவை குவையாய் வாரியே
தன் மடியில் வைத்துக்கொள்கின்றாள் அவள்;
மடலவிழ் தாழைசூழ் வேலியில், தன் சிறு பரிசலைப் பிணைத்தே
நெஞ்சை அள்ளும் மழையின் பாட்டைக்
கண்ணீர் மல்கிட, இசைத்திடுகின்றாள் அவள்.

இன்று எனது உள்ளம் தோகை மயிலேன ஆடுகின்றதடா;
உள்ளம் ஆடுகின்றதடா!
பெயலரிய பெருமழையும் புதுத்தளிர்மீது பொழிகின்றதடா!
காட்டைக் கலக்குவது போல் ஒலித்திடும் சிள் வண்டு.

கரை புரண்டே ஆற்றுப் பெருக்கு
ஊர்வரைக்கும் வந்துவிட்டதடா!
இன்று எனது உள்ளம் தோகை மயிலென ஆடுகின்றதடா;
உள்ளம் ஆடுகின்றதடா!

(2 ஜூன், 1900)

—க்ஷணிகா

## 34

## பிரிவாற்றாமை

நீ பிரிந்து போகையில்
நல்ல பட்டப்பகல்;
கதிரவன் நடுவானில் நின்றான்;
காய்ந்திடும் வெயில்.
வீட்டு வேலை யாவும் முடித்துத்
தனியே என் அறையில் இருந்தேன்;
என்னுள் ஆழ்ந்தே
சாளர வாயிலில் இருந்தேன்.

பங்குனி மாதம்;
வயல் பலவற்றின்
விதவித மணம் ஏந்தி
திறந்த வாயிலூடே
வெம்மைக் காற்று வீசியது.
புறாக்கள் இரண்டு பகல் முழுவதும்
அமைதியை இழந்தே கூவின.
பங்குனி மாதம்
வயல் பலவற்றின்
வித விதச் செய்தியை ஏந்தி,
வண்டினம் ஒன்று இறகு இசைத்துத்
திரிந்தது வெறுமே.
அவ்வேளையில் பாதையிலே எவரும் இல்லை.
ஓய்ந்து ஒலியடங்கியது ஊர்.
சவுக்கு மரத்தினூடே
நிற்காமல் கேட்கும் ஒலி.
எனது உள்ளத் தனிமையில்
தொலைவில் விம்மும் குழலிசையுடன்
வானெங்கிலும் யார் பெயரையோ
மெல்ல மிடைந்தேன்.
பாதையில் அவ்வேளை எவருமே இல்லை;
ஓய்ந்து ஒலியடங்கியது ஊர்.

வீடுகள்தோறும் வாயிற் கதவு
தாழிட்டிருந்தது.
விழித்திருந்தேன் நான்மட்டும்.
வீசிய ஒரு பிள்ளைக் காற்றினால்
பின்னாத என் கூந்தல் பறந்ததுவே.

கரையோர மரத்தின் இன்னிழற்கீழ்
ஆற்றின் ஓட்டத்தில் அலையே இல்லை.
காய்ந்திடும் வானம்
ஒரு சோம்பல் வெண்முகிலுடன் சோர்ந்திருந்தது.
வீடுகள் எங்கும் தாழிட்டிருந்தன;
நான் மட்டும் விழித்திருந்தேன்.

நீ பிரிந்து சென்றபொழுது
நடுப்பகல் வேளை;
காய்ந்த மேட்டு வெளியூடே
சென்றிடும் வறண்ட பாதை;
வெயில் சுட்டெரித்தது.
நெருங்கிப் பின்னிய ஆலமரத்து நிழலில்
ஓயாது கூவிடும் இரட்டைப் புறுக்கள்.
சாளர வாயிலில் தனியே இருந்தேன்.
வெற்றிடமாய் நின்றது
என் பள்ளியறை.
நீ பிரிந்த சென்றபொழுது
நல்ல நடுப்பகல்.

(3 ஜூன், 1900) —க்ஷணிகா

## 35

## கருமுகை

கருமுகை என்றே நான் அவளை அழைப்பேன்;
ஊரினர் கறுப்பி என்றே அவளை அழைத்திடுவர்.
கருமுகில் கவிந்து வரும் மேட்டு வெளியில்
மாமை எழிலுடைய அந்த மான் விழியாளைக் கண்டேன்.
தலையில் முக்காடு இல்லை அவளுக்கு;
பின்புறம் பெருகியது அவள் கருமென் கூந்தல்.
கறுப்பா? அவள் கறுப்பாயிருப்பினும்
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன் நான்.

இருண்ட மேகம் இறங்கி வருவதை நோக்கி
தன் மாநிறப் பசு இரண்டினையும் கூவி அழைத்தாள்.
அந்த மாமை எழிலுடையாள்; கவலையால் கால் தடுமாறத்
தன் குடில் விட்டு ஓடியே வந்தாள்.
புருவங்களைச் சுளித்து வானிடை நோக்கினுள்;
கிடுகிடெனும் இடிக் குரலினைக் கேட்டாள்.

கறுப்பா அவள்! கறுப்பாயிருப்பின் என்ன?
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன்.
கீழ்க்காற்று எழுந்தது திடுமெனத் தாவியே;
வயலில் கதிர்களுடன் விளையாடிச் சென்றது.
வரப்புமீது தனியே அவள் நின்றிருந்தாள்;
அம்மேட்டு வெளியில் எவருமே இல்லை.
என்னை அவள் நோக்கினளா, இல்லையா என்பது
எனக்கும் அப்பேதைக்குந்தானே தெரியும்!
கறுப்பா அவள்? கறுப்பாயிருப்பின் என்ன?
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன்.

கிழக்குக் கோடியில் மையிருள் மேகம்
ஆனி மாதத்தில் இப்படித்தான் வருமோ?
தமாலச் சோலையில் இருள்கவி நிழல்
ஆடிமாதத்தில் இப்படியே தோன்றுமோ?
உளத்தினில் சட்டென ஒரு தென்பு
ஆவணி இரவினில் இப்படி எழுமோ?
கறுப்பா அவள்? கறுப்பாயிருப்பின் என்ன?
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன் நான்.
கருமுகை என்றே உன்னை நான் அழைப்பேன், பெண்ணே!
மற்றவர் எப்படி அழைப்பினும் அழைக்கட்டும்.
மைனு பாடாத மேட்டு வெளியில்
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன் நான்.

தலையில் ஆடையே இல்லை அவளுக்கு;
வெட்கம் கொள்ளவும் அவளுக்குப் பொழுது இல்லை.
கறுப்பா அவள்? கறுப்பாயிருப்பின் என்ன?
கருமை செறிந்த அவள் மான்விழிகளைக் கண்டேன் நான்!

*(28 ஜூன், 1900)* —க்ஷணிகா

## 36

# தோற்றம்

வெகு நாள் முன், ஒரு பங்குனி இரவினில்
நீ வருவாய் என நம்பி இருந்தேன்.
ஆனால் நீயோ அடர் மழைநாளில் வந்தாய்.
இன்று வெடிபடு சந்தத்தில்
புது முகிலின் கம்பீரக் குரலில்
எனது உள்ளத்தில் எழும் இசைதனை பூர்த்தி செய்திடு நீ.
நீர்மலியும் இம்மழைநாளில்
தொலைவிலேயே உன் பொன்னவிர் போர்வையும்
புதுச் சம்பகமலர் இழையும் என் கண்ணில் பட்டனவே.
அருகினில் வந்ததும் அவை
கருநீலம் தோய்ந்த புத்தம் புதிய கலிங்கமாதல் கண்டேன்.
குலுக்கி மினுக்கிடு உனது நடையிலே ஓர் ஒயில்;
நீ அணிந்த அந்தச் சம்பக இழைதான் எங்கே?
வனத்தில் உலவியே, தருவினை வளைத்தே
மலர் கொய்வதைக் கண்டேனே.
உனது மெல்லிடையில் தவழும் கிண்கிணி மேகலை
மெல்ல ஆர்ப்பதைக் கேட்டேன் நான்.
வனநிழலில் நீ உலாவுகையில்
உன் நறுமண மூச்சு
என்மேல் படிவது போல் மருண்டேனே.
உலகு நிரம்பி வந்துள்ளாய் இன்று -
விசும்பிடைக் விரிகுழல் பரப்பியே,
சரணமதில் வனமலர் பூண்டே.
நீர்மலி முகிலெனத் திகழும்
உனது தண்ணிழல் என்னை மறைத்திடுமே.
நின் மெல்லடிகளில் வனமலர் பூண்ட இத்தோற்றம்,
கருமைபடர் இக்களிப்பின் கோலம்
எனது இதய வாரிதிக் கரை யாவையும்
பேராகுலத்தில் ஆழ்த்திடுமே,
பங்குனி இளவேனில், பூங்காவில் வீற்றே
நான் தொடுத்த மலர்ச்சரம் யாவும்
உனக்கான பரிசன்றே.
நீ போகும் இடமெங்கும், உன்னைப் பின்தொடர்ந்தே
உன் புகழின் பாட்டே ஒலித்திடுமே!
இச் சிறு யாழின் ஒலி மங்கும் நரம்பினில்
அப்பாட்டினை இசைக்க வல்லேன் நான்.

இது உனக்கு ஏற்ற பரிசே அன்று.
கணமே காட்சிதரும் உன் எழில் உருவம்
மழையினைத் தொலைவில் ஒதுக்கி
என் கண்முன் வருமென யாரே அறிவார்?
இவ்வளவு வெட்கம் தருமென யார் அறிவார்?
உனக்கேற்ப நான் அழகு செய்துகொள்ளவும் இல்லை.
என் பள்ளியறை வாயிலில், பூசைக்குரிய
கையுறைதனை வைத்தவர் யாரோ?
ஈதென்ன, நீ எனக்குத் தரும் அற்புதக் காட்சி!
மன்னிப்பாய் என்னை, மன்னித்திடு;
உன் வரவேற்புக்குரியதை
நான் செய்யத் தவறினேன்.
கணப் பொழுது இவ்விலைக் குடிலுள் கால் வைத்து
அகல் விளக்கொளியில் மெல்லவே வாராய்!
இந்த மூங்கிற் குழல்மீது உன் கடைக்கண் திருப்புவாய்;
என் பிழைதனைப் பொறுத்திடுவாய்.
புது இளவேனிலில் உன்னை எதிர்நோக்கி இருந்தேன்;
நீயோ வரவில்லை.
நிறை மழையில் நீ வருவாய், வருவாயே!
வருவாய், வானிடை முன்தானையை வீசி
என் புன்மைக் கனவைப் பறக்கடித்தே வருவாய்!
என் உள்ளம் நிரம்பும் பாட்டினை
இன்று, நீர்மலி இம்மழைதனில்
நிறைவு செய்திட வருவாயே!

(24 ஜூன், 1900) —க்ஷணிகா

## 37

# உணர்வெழுப்புதல்

காரணமிரா ஓர் இன்பச் சிலிர்ப்பால்
  கணமே நிலவும் இவ்வொளியில்
  கணமே நிலவும் கீதமதை
இசைத்திடு இன்று, என் உயிரே!

வருவோர் போவோர்; சிரிப்பவர் பார்ப்பவர்;
பின்புறம் திரும்பி நோக்காதவர்;
குதித்துத் தாவி ஓடுவோர்; எதையும் வினவாதவர்;
பூத்துக் கணமே விண்டு போவோர் -
இவர்கள் கீதமதை இன்று

இசைத்திடு என் உயிரே,
கணமே நிலவும் இவ்வொளியில்.

ஒவ்வொரு நிமிடத்தின் கதையை
உட்கார்ந்தே இன்று, புனையாதே இனி;
கோக்காதே நினைவின் மாலையை;
வருவது வரட்டும், நடப்பது நடக்கட்டும்;
நில்லாமல் சென்றிடு; துயர்தான் மாயட்டும்.

வானும் வையமும் நிமிடமே நிலவும் பண்ணினை இசைத்து
ஆடிப் பாடிக் களித்திடட்டும்.
நொடிப் பொழுதாகி, நிமிடக் கதை யாவும் முடிவுறுக!
முடிவுறுவதை முடிவுற விடுவாய்;
அறுந்த மாலையினின்று நழுவிய மலரை
எடுத்திட விரும்பாதே!

அறிய வேண்டாததொன்றை அறிந்துகொள்ளாதே;
கிட்டாததைத் தேடிச் செல்லாதே;
நிரம்பாததொன்றை நிரப்பத்தான் கூடுமோ?
கிடத்ததைக் கொண்டு தணித்திடு ஆசையை;
அது முடியினும், முடிவுற விடுவாய்.

இரு இரு, கண்ணீர் விட்டுப் புலம்பாதே!
உன் கையால் பிணைத்த இந்தக் கட்டினை
உன் இரு கையாலும் பிய்த்து எறிவாயே!
அதன் இயல்பால், உன் முன் தோன்றுவதைப்
பேணியே அழைத்துக் கொள், உன் அகத்தினில்.
அரியதொரு செயல் புரியும் ஆற்றல்
இன்று வரை முடிவுறட்டும்;
கணமது திகழும் இன்ப விழவு இன்று;
கண்ணீர் விட்டுப் புலம்பாதே!
காரணமில்லா ஓர் இன்பச் சிலிர்ப்பு ஓடிடுமே.

ஆற்றுநீரில் பளபளக்கும் ஒளியினைப் போல்
இப்புவிமிசை உன் கட்டினைத் தளர்த்திக்
கொண்டாடிக் கழிப்பாய் வாழ்வினை.
வாகைப் பூவின் கூந்தலை மென்பனி
தொட்டு அசைப்பது போலக்
காரணமில்லா ஓர் இன்பச் சிலிர்ப்பால்,
இழுமென் ஒலியால் உன் இசை நிரம்பட்டும்.

(ஜூலை, 1900) —க்ஷணிகா

# 38

## சபதம்

'நான் தவசியாக இரேன், இரேன், இரேன்,
யார் என்ன கூறினும்!
ஏற்ற ஒரு தவமகள் எனக்கு அமையாது போனல்,
நிச்சயம் நான் ஒரு தவசியாக இருக்கமாட்டேன்.'
கடுமையான இவ் வுறுதி கொண்டுள்ளேன்.
எனக்கொரு மகிழஞ்சோலை கிடைக்காவிடின்,
என் மனத்திற்கேற்ற ஒரு மனத்தைப் பெறேனயின்
ஏற்ற ஒரு தவமகளை நான் காணேனயின்
நான் தவசியாக இரேன்.
வீட்டை நான் துறந்திடேன்;
வெறுப்புற்றே ஆண்டியாய் நான்
வெளியே போகேன்; போகேனே போகேன்,
ஞாலத்தையே மயக்கிடும் முறுவலாள்
என் வீட்டு வெளியே எவளும் இல்லையேல்!
நீல மேலாடையை விரித்திடும் அவள்
எனக்கு இராது போனல்,
இனிய தென்றலிலே
கலீர் கலீர் என அவள் சிலம்பொலியை
நான் கேட்காது போனல்
தவசியாக மாட்டேன்.
'ஏற்ற ஒரு தவமகளை நான் காணேனயின்
நான் தவசியாக மாட்டேன்' - இது உன் சபதமானல்,
அந்தத் தவ வலிமையால்
புது உலகினைப் புதிய இதயத்தில்
உருவாக்காது போயின்,
வீணையொலி செய்து
பொற் கவாடத்தைத் திறந்து
ஒரு புதிய கருவிழித் தாரகையை
நான் கண்டறியத் தவறினல்
நான் தவசி ஆகேன்;
ஒரு தவமகளைப் பெறேனயின்,
நான் தவசி ஆகேன்.

(ஜூலை, 1900) —க்ஷணிகா

## 39

## உரிய இடம்

'எந்தச் சந்தையில் விற்பனை போக விரும்புகின்றாய் நீ.
என் பாட்டே!
உனக்குரிய இடம் எங்கேயோ?
கல்விக் கடலனையர் வாழும் ஊரில்,
வானெங்கும் மூக்குத்தூள் நெடி பறக்கும்
பண்டிதர் இருக்கும் இடத்தில்
நிற்கத்தான் யாரால் ஆகும்?
மோக இருள் அகற்றும் மெய்கண்டார்
சுவடிகளைப் பிரித்து, "நெய்க்குத் தொன்னை ஆதாரமா?
தொன்னைக்கு நெய் ஆதாரமா?'' என
இரவும் பகலும் நுண்ணிய வாதங்கள்
தொடுக்கும் இடத்தில் ஒரு மூலையில்
இடங் கொள்ள விரும்புகின்றனையா நீ?'

பாட்டு இதைக் கேட்டு,
'இல்லை, இல்லை, இல்லை' என்றே மெல்ல முணுமுணுத்தது.

'எந்தச் சந்தையில் விலை போக விழைகின்றாய் நீ,
என் பாட்டே?
எந்தத் திசையோ உனது நாட்டம்?
கல்லால் சமைத்த மாளிகையில், செல்வமகன்
மெஹாகனி மரத்தட்டுக்களில்
நூல்கள் ஐயாயிரம் அடுக்கியுள்ளான்;
பொன்னெழுத்துப் பொறித்தவை யாவும்,
கை தொட்டு மாசு படாதவை.
அவற்றின் ஏடுகளை எவருமே பிரிக்கவில்லை;
சுவைத்துப் பாராத தேன் போன்று,
மோவா மலர்போன்று இருந்தன.
பணியாள், நாள் தவறாமல் துப்பறத் தட்டி வைக்கிறான்.
சீர்மலி என் பாட்டே, அங்கே
இடங்கொள்ள ஆசையோ உனக்கு?'

பாட்டு இதைக் கேட்டு,
'இல்லை, இல்லை, இல்லை' எனச் செவியோடு முணுமுணுத்தது:

'எந்தச் சந்தையில் விலை போக ஆசை கொள்கிறாய்,
என் பாட்டே?

உனக்குக் கௌரவம் தரும் இடம் எதுவோ?
பரீட்சைக்காக மாணவன்
விழுந்து விழுந்து படிக்கின்றான்;
ஆனால் அவன் மனமோ, எங்கோ திரிகிறது;
படிக்கத் தகுதியிராத புத்தகங்களே
அவன் முன் திறந்து உள்ளன.
பெரியவர்களுக்கு அஞ்சியே இன்கவிதையைச்
சுவர் மாடத்துள் வைத்துவிட்டான்.
கந்தலும் கூளமுமாய்ப் பொருள்கள்
குவிந்துள்ள அவ்விடத்தில்
நீ விளையாட விரும்புகின்றாயா?'

பாட்டு இதனைக்கேட்டு, அதனுள் போவதா வேண்டாமா என
இரு மனத்துடன் ஊசலாடியது.

'எந்தச் சந்தையில் விலை போக விரும்புகின்றாய்,
என் பாட்டே?
எங்கே உனக்குப் புகலிடம்?
இல்லத்து இலட்சுமி, உக்கிராணத்தில்
தன் தொல்லைகளுக்கிடையே
ஓய்வு சற்றுக் கிடைத்தபொழுது
பஞ்சணைக் கீழ் மறைத்துள்ள
புத்தகத்தை எடுப்பாள் நடுநடுவே.
குழந்தையின் விஷமத்தால் அது
கசங்கிக் கிழிந்து காட்சி தருகிறது.
கண் மை, குங்குமக் கறை ஏறிக்
கூந்தலின் நறுமணம் கமழ்ந்து
பஞ்சணை ஓரத்தில் புகுந்துகொள்ளவே,
கிழிந்த கோலமாய் இருக்கவே உனக்கு விருப்பமோ?'

மார்பு விம்மப் பாட்டு நிலைத்து நின்றது;
அங்கே போக அதற்கு ஆசைதான்.
அதனாலேயே, ஒரு குலைப்பு.

'எந்தச் சந்தையில் விலை போக விரும்புகிறாய்,
என் பாட்டே?
எந்த இடத்தில் உனக்கு உயிர்?
இளையவர் இருவர் - இன்பப் பித்தர்கள் -
மறைவையும் இருட்டையும் நோக்கி
யார் கண்ணிலும் படாமல் திரிகின்றனர்;

எவர் பொருட்டுப் பறவைகள் தீங்குரல் பயிற்றுகின்றனவோ,
ஆறு சலசலத்து இன்னிசை பாடுகின்றதோ,
மலரும் கொடியும் தளிரும் சந்தம் பல ஒலிக்கின்றனவோ
அவர்களிடமா நீ இருக்க விரும்புகிறாய், பாட்டே?
கண்பனியுடனே கரவற்ற சிரிப்புக் கூடும் இடத்திலா,
இவ்வுலகின் இனிய குழலிசைக்கு இடையிலா,
நீ உலாவ ஆசைப்படுகின்றாய்?'

சட்டெனத் துள்ளி எழுந்தே என் பாட்டு இயம்பியது:
'ஆமாம்; அதுவே எனக்கு உற்ற இடம்.'

(ஜூலை, 1900) —க்ஷணிகா

## 40

## அந்தக் காலம்

காளிதாசன் காலத்தில் நான் பிறந்திருப்பின்,
ஒன்பது ரத்தினங்களாகத் திகழ்ந்த
அந்தக் கவிவாணர்கள் வரிசையில்
தெய்வச் செயலாய் நான் பத்தாவது ரத்தினமாய்
விளங்கி இருப்பின்,
ஒரே துதிப்பாடலைப் படித்து,
உஞ்சைப் பதியில், மனிதர் வராத ஒரு மூலையில்
கானனம் சூழ்ந்த இல்லத்தை
அரசனிடமிருந்து பரிசாகப் பெற்றிருப்பேன்.
ரேவை ஆற்றங்கரையில், சம்பகத் தருநிழலில்
மாலை நண்ணியதும் ஓர் அரங்கினைக் கூட்டுவேன்.
செய்குன்றின்மீது அமர்ந்து, என் விருப்பம் போல்
குரல் விட்டுப் பாடுவேன்.
எனது வாழ்க்கைத் தோணி
மந்தாக்கிராந்தச் சந்தத்தில் ஊர்ந்திடுமே,
நான் மட்டும் காளிதாசன் காலத்தில் பிறந்திருப்பின் !

கவலையை விட்டுத் தொலைத்திருப்பேன்;
பரபரப்புக்கே இடந் தந்திருக்க மாட்டேன்;
மூப்பும் சாவும் வாரா என்றே
மெல்லடி வைத்துச் சென்றிருப்பேன்.
ஆறு பருவங்கள் வைத்துக்
கூடல் உவகையைக் கூறும்

அழகுக் காவியத்தை, ஆறு படலங்களாய்ப்
புனைந்திருப்பேனே!
வெம்மைக் கண்ணீர்ப் பெருக்கெனப்
பிரிவின் துயர் தோய்ந்தொழுகும்
உருக்கம் செறிந்த பாட்டதனை
இயற்றி இருப்பேனே!

ஆடி மாதத்து முகில்
மெல்ல அசைந்து செல்வது போன்று
எனது வாழ்விலே பரபரப்பே துளியும் இராது.
இனியாளின் மலரடி பட்டு
அசோகம் பொழில்கள் இணர் விரித்திடுமே.
அவளது வாயின் அமுதூறலைப் பெற்றே
மகிழ மலர்கள் பூத்து ஆகுலம் தந்திடுமே.
இனியாளின் தோழியர் பெயர்கள் யாவும்
ரேவைக் கரையில் வாழ் மகன்றிலின் குரலிசை போல்,
இனிய சந்தத்தில் ஒலித்திடுமே.
மஞ்சுலிகை, மஞ்சரிணி மடந்தையர் யாவரும்,
நிலவுதோய் சித்திரை இரவினில்
புதர்சூழ் குறியிடம் நோக்கி வருவர்.
இனியாளின் மலரடிபட்டு
அசோக மரக்கிளையில் மலர் மலிந்திடுமே.
இருசெறி மென்கூந்தலில் அவள் மௌவலை அணிவாள்;
அழகிற்கோ, அது வேறு எதற்கோ?
கைதனில் கமல மலரை ஏந்திடுவாள்;
முல்லை மலரைத் தன் மணிநிறக் குழலில் சூடுவாள்;
காது நுனியில் வாகை மென்மலர் பூணுவாள்;
கடப்ப மாலை தொங்கிடும் அவள் மேகலையில்;
எந்திர வாவியில் நீராடிய பின்னர்
ஓமாலிகைப் புகையை அளகத்திற்கு ஊட்டுவாள்;
பேதை, உலோத்திரப் பூப்பொடியை
முகத்தினில் திமிர்ந்திடுவாள்;
காரகில் நறுமணம் தயங்கிடும் அவள் உடைதனில்;
குரவக மலரைக் கருநிற அளகத்தினில் புனைவாள்;
குங்குமத் தொய்யில் அவள் மார்பினை மறைத்திடும்;
அவள் சேலைத் தலைப்பினில்
இணை அன்னத்தின் வரிவடிவம் துலங்கிடுமே.
பிரிவின் துயரினை எழுப்பும் ஆவணி மாதம்
அன்பன் வரவை எதிர்நோக்கி இருப்பாள்.
பூஜையின் பூக்களை வைத்து

அவன் வரும் நாளை எண்ணிடுவாள்.
மார்பில் வீணை தாங்கிப் பாடுகையில்
சொற்களை மறந்திடுவாள்.
கண்ணீர் தோய்ந்து அவள் நறுங்குழல் கலைந்திடுமே.
காதலனைக் கூடும் இன்ப இரவில்
அவள் காலில் புலம்பிடுமே வளைவார் சிலம்பு.
குங்குமத் தொய்யில் கீற்று அவள் மார்பினை மறைத்திடுமே.
தான் வளர்த்திடும் பூவைக்கு
இனியனின் பெயரைப் பயிற்றுவாள்;
கைவளை அசைத்து மயிலை ஆட வைப்பாள்;
புறுவைத் தன் மார்பில் அணைத்தே கொஞ்சுவாள்,
அதன் அலகுடன் தன் கொவ்வை இதழ் அழுத்தி.
சாரசப் பறவைக்குத் தின்னத் தருவாள் முளரி மொட்டை.
கூந்தல் வரிசையை அலப்பிக் கொண்டையைத் திருத்தித்
திஞ்சுவைச் சௌரசேனி மொழியில் மிழற்றுவாள்.
தோழியின் கழுத்தைத் தழுவி, 'ஹலா பிய ஸஹி' என்பாள்;
நீர் சொரி பாத்தியில் இளமாஞ்செடி நிழலில்
இனியன் பெயரை, தான் வளர்த்திடும்
பூவைக்குப் பயிற்றுவாள்.
ஒன்பது ரத்தினங்கள் திகழும் சபைதனில்
ஒரு புறம் இருந்திடுவேன் நான்.
தொலைவிலிருந்தே திங்நாகாசாரியருக்குத்
தலையைத் தாழ்த்திடுவேன்.
விசுவசேனன் என்றோ, தேவதத்தன் என்றோ
அல்லது வசுபூதி என்றோ
ஏற்ற பெயரையே நானும்
எனக்குச் சூட்டிக்கொள்வேன்—
ஸ்ரக்தரை அல்லது மாலினி விருத்தத்தில்
கொவ்வைக் கனி இதழாரைப் பாராட்டி
இயற்றிடுவேன் இரண்டொரு சிறு காப்பியம்.
செய்யுட்களைச் செய்ததுமே
விரைந்திடுவேன் இல்லம் நோக்கி.
ஒன்பது ரத்தினங்களிடையே
நானும் ஒரு பக்கம் இருந்திடுவேன்,
காளிதாசன் காலத்தில் நான் பிறந்திருப்பின்.
மாளவிகை எவளாவது ஒருத்தியின்
வலையில் நான் சிக்கியிருப்பேன்,
காளிதாசன் காலத்தில் நான் பிறந்திருப்பின்.
என்றாவது இளவேனில் விழவினிலே

யாழும் குழலும் இணைந்தே இசைக்கையில்
பூமலி புதரின் மறைவில் குறி இடத்திலோ,
பங்குனி நிலவினில் இளமை வெறி மூண்டே
அரசனின் சித்திர சாலையிலோ,
என் கண்ணில் சட்டென எவளேனும் படுவாள்.
என்னை நோக்கும் கள்ளத்தால், மாமரக் கிளையில்
தன் பூந்துகிலைச் சிக்கிடச் செய்வாள் அவள்.
அந்தோ, என்றோ மறைந்தது காளிதாசன் வாழ்ந்த காலம்!

அதைக் குறித்துப் பண்டிதர் விவாதம் செய்து
இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை.
அப்பழைய ஆண்டுகள் என்றோ போயினவே;
அந்நாள் வரலாறும் மௌனமாகிவிட்டது.
அது போகட்டும் ஒரு புறம்; ஆனால் வீண் வாதம் ஓயவில்லை.
அந்தோ! அந்நாளுடன், நாகரிக மடந்தையர்
நிபுணிகை, சதுரிகை, மாளவிகையும் மறைந்தனரே.
வரமாலைகள் ஏந்திய தட்டுடன்
அவர்கள் எந்த வானுலகிற்குச் சென்றனரோ?
அந்தோ, மறைந்தே போயிற்றே
காளிதாசன் வாழ்ந்த அக்காலம்!

இனியருடன் கூடிக் களிக்காத
அவ்வணங்குகளின் துயரந்தான்
என்னை மிகவும் அசைத்திடுகிறது.
இருப்பினும், என் உணர்வு எனக்கு இருந்தது.
மங்கை எவள் வாயமுதமும் பெறுவிடினும்
அன்று போலவே மகிழும் பூக்கிறது.
பங்குனி மாதம் அசோகம் பொழிலிடை
உள்ளமும் உடலும் சோர்ந்திருக்கையில்
தென்திசையிலிருந்து வந்திடும்
ஒரு மெல்லிய மூச்சு இன்பம் பயக்கிறது.
அக்காலத்து அணங்குகளைப் போல்
யாருமே இன்று கண்ணில் படாது போயினும்,
எத்திசையே சென்றாலும், எனக்கு ஓர் ஆறுதலே.

இன்று இம்மண்மீது யாரெல்லாம்
உயிருடன் உலாவுகின்றனரோ,
காளிதாசன் கண்களில், இவர்களுடைய சித்திரம்
அழகாகவே தோன்றியிருக்கும்.
காலில் சோடும் மேசோடும்

இவர்கள் அணிந்திருந்தால்தான் என்ன,
நேராகத்தான் நடந்து செல்கின்றனர்.
மற்றவர் மொழிதனில் நன்ருகத்தான்
மாற்றங்கள் பேசுகின்றனர்.

காளிதாசன் காலத்தில் இருந்தது போலவே
எழில் நோக்கு இவர்கள் கண் ஓரங்களில் உள்ளது.
அந்த நிபுணிகை, சதுரிகை இவர்களை நினைத்து
நான் வாடிச் சாவானேன், தம்பி?
அவர்கள் இன்று வேறு வேறு பெயரில்
இம்மண்ணுலகில் உலாவுகின்றனரே!
கடைசியில், இம்மகிழ்ச்சி கொண்டே
பெருமிதத்தாலே ஓடி ஆடுகின்றேன்.

காளிதாசன் என்ற பெயரில்
எவனே ஒருத்தன் இருந்தான்;
ஆனல் இதோ நான் இருக்கிறேனே,
உயிர்த் துடிப்புடன் ஓர் ஆள்!
அவன் காலத்தின் மணம்
சற்று எனக்கு வந்தபோதிலும்
என் காலத்து வாசனை துளியாகிலும்
அம் மகாகவிக்குப் போகாது; இது திண்ணம்!
கூந்தலை அலப்பிச் செல்கிருளே,
இக்காலத்துக் கட்டழகி -
இவளுடைய சித்திரம் வந்திராது
அவனுடைய கற்பனைக் கண்ணெதிரே.
இனியளே, உன் மதர் விழிகள் பொழியும்
பரிசைப் பெறவே இன்று நான்
காளிதாசனையும் விஞ்சிய பெருமிதத்துடன்
சுற்றிச் சுற்றி அலைகின்றேனே.

(ஜூலை, 1900) —க்ஷணிகா

## 41
# நீதிக் கோல்

உனது நீதிக்கோலை, ஒவ்வொருவர் கையிலும்
நீயே தந்துள்ளாய்;
நியாயம் வழங்கும் உரிமையும்
தந்துள்ளாய் எவர்க்கும், மன்னர் மன்ன!
நீ அளித்த பெருமை மிகுந்த அக்கடமையை,
அந்தக் கடினப் பணியைத் தாழ்வுடன் வணங்கியே
என் சிரமிசைக் கொள்கின்றேன்.
உனது பணியை ஆற்றும் எத்திறத்திலும் நான்
எவருக்கும் அஞ்சாமல் இருந்திட வேண்டுவனே;
ஓ உருத்திரனே, பொறுமை எங்கு நலிந்த உள்ளத்தைக் காட்டுமோ,
அங்கே உனது கட்டளை நிறைவேற
நான் சற்றும் இளகா நெஞ்சுடன்
ஏவல் புரிய வேண்டுவனே.
உனது குறிப்பினை உணர்ந்தே கூர்நுனி வாளென
என் நா உண்மைப் பொலிவுடன் புகன்றிட வேண்டும்.
உனது நீதிமன்றத்தினில், எனக்குரிய இடத்தில் நின்று
உன் மேன்மையை நான் காத்திட வேண்டும்.
அநீதம் செய்வோர், அதனைப் பொறுத்திடுவோர்
இருவரையுமே, உனது வெகுளித் தீ
புல்லெனத் தீய்த்திட வேண்டும்.

(ஜூன்-ஜூலை, 1901) —நைவேத்ய

## 42
# அருள் வேட்டல்

அச்சம் நீங்கிய சித்தம் எங்கோ;
நிமிர்ந்து தலை எங்கு நிற்கிறதோ;
அறிவினுக்கு எங்கே சுதந்திரமோ;
வீட்டின் சுவரிடையே அல்லும் பகலும்
உலகம் துண்டாகி எங்கே குறுக்கிடவில்லையோ;
உள்ளத்தினின்று வாக்குக் குமிழ்த்து எங்கே எழுமோ;
கட்டுக்கடங்காத தொழில் வெள்ளம்
நாடெங்கிலும், திசைதோறும்
எண்ணிலாப் பயன் தரும் வகையில்

பாய்ந்து, எங்கே செல்கிறதோ;
மூட வழக்கமெனும் மணற்குவையுள்
சருச்சையின் ஊற்று எங்கே தூர்ந்து விடவில்லையோ;
ஆண்மை, எங்கே சிர்குலைந்து போகாதோ
செயல், சிந்தனை இவற்றிடையே
ஆனந்த வடிவாய் நிலவும் தலைவனே,
தவறியவர்களை உன் கரத்தாலேயே
இரக்கம் சிறிதுமின்றி எங்கே தண்டிக்கின்றனையோ
அத்தகைய பொன்னுலகினிலே, ஐயனே,
பாரத நாட்டினை விழிப்புறச் செய்வாய்!

(ஜூன்-ஜூலை, 1901) —நைவேத்ய

## 43

## வீடு பேறு

(மோட்சம்)

துறவறச் சாதனையால் விடுதலை-
அது எனக்கு வேண்டியதில்லை!
அலகிலா பந்தந்தனிலே பேரானந்தம் தரும்
விடுதலையின் சுவைதனைப் பெறுவேனே.
வண்ணமும் மணமும் கலந்தே, இடையறாது
இவ்வையமெனும் மண்கலத்தில் பெய்திடுவாய்
உன் அமிழ்தினை.
நீ உறையும் கோயிலிலே, பல திரியிட்டே
உன் சுடரினை ஏற்றி என் வாழ்வினை
ஒளியுறச் செய்வாயே!
ஐம்பொறி வாயில் அடைத்தே
யோகம் புரிவது என் வழியல்ல.
காணும் காட்சியிலும்,
நுகரும் மணத்திலும்
இசைக்கும் பாட்டினிலும்
உள்ள மகிழ்ச்சி யாவும்
உனக்கு ஆனந்தமாகிவிடுமே.
எனது மோகமே விடுதலை உருவில் ஒளிரும்;
எனது காதலே பக்தியின் வடிவாய்ப் பயன் தருமே.

(ஜூன்-ஜூலை, 1901) —நைவேத்ய

## 44

## உய்வு

நலங் கெட்ட இந்நாட்டினின்று
இழிவு தரும் அச்சம் யாவுமே
அகற்றிடுவாய், மங்கலம் நிரம்பியவனே!
மனிதரால் வரும் துன்பம்,
அரசினால் நேரும் தீம்பு
மறலியால் மூளும் அச்சம் யாவையுமே
எளிய உயிரினை ஒடுக்கிடும்.
இப்பாறையின் பளுவை;
நொறுங்கிக் குழைந்து
மண்மிசை உழன்றிடும் இவ்வேதனையை;
நீடித்த இந்தத் தாழ்வினை;
கணமும் உயிரை வாட்டும் அவமதிப்பினை;
உளத்தையும் புறத்தையும் இறுக்கிடும்
இவ்வடிமைத் தளையை;
நடுங்கிச் சிரம் தாழ்ந்து, பலர் காலடியில்
மனிதத் தன்மையை இழந்திடும் இக்கொடுமையை;
மாபெரும் இழிவின் குவையை
உன் காலால் மிதித்துத் துகளாக்கிடு.
மங்கலம் தரும் விடியற்காலையிலே,
எல்லையிலா வானிடையே
பரவிய ஒளியினிலே,
காற்றின் திறந்த மூச்சிடையே
தலை நிமிர்ந்து நின்றிடுவேனே.

(ஜூன்-ஜூலை, 1901) —நைவேத்ய

## 45

# பிரதிநிதி

பசுமை எழிலுடை இம்மாநிலமீது
நீ காதல் கொண்டிருந்தாய்;
இன்பம் குலவியது உனது இன்முறுவலிலே;
உலகுடன் ஒட்ட ஒழுகியே
இன்புறும் வகைதனை நீ அறிந்திருந்தாய்.
ஆகவே, எண்ணம் ஏக்கமின்றி
இருந்தது உன் இதயம்.
பசுமை எழிலுடை இம்மாநிலம்
உனதாகவே இருந்தது.
இன்று, வெறிச்சென்ற இவ்வான வெளியெங்கும்
நோக்கிட உனது கண் அலை பாய்கிறது.
உனது குறுநகையும், நோக்கினில் ஊறும் இன்பமும்,
அனைவரையும் அணைத்தே விடைதனை இசைத்தே சென்றிடும்,
பனைமரம் சூழ் இவ்வூர் எல்லையும் கடந்தே.
உன் விருப்பினை என் கண்களில் வைத்தே
என் நோக்கினில் உன் நோக்கினைச் சேர்த்தாய்.
இன்று நான் தனியே ஓர் ஆளாய்
இருவர் நோக்குடன் காண்கின்றேன்.
எனது நெஞ்சிலே வீற்று நுகர்கின்றனை,
உன் மயலுடை நாட்டம் என் கருவிழியில் தோய்த்தே.
குளிர்நாள் ஒளி இதோ வனத்தில் சிலிர்க்கிறது;
வாகையின் பழுப்பிலைகள் காற்றில் உதிர்கின்றன.
என் மனத்துள்ளும் உன் மனத்தினிலும்
எப்பொழுதும் களியாட்டம்.
இவ்வொளியும் நிழலும் ஆகுலத்தால் நடுக்குற
இக்குளிர்நாள் பகலில், சலசலக்கும் காடதனில்
என் வாழ்வினிலே உயிர்த்தெழு, உயிர்த்தெழு நீ!
என் உளத்தைக் கொண்டே என் விருப்பினைப் பெற்றிடு.
என் அகத்தில் இதனை மறைவில் உணர்ந்தேன்;
இன்று நீ, என்னுள் நாளுகிவிட்டாய்;
என் வாழ்வினிலே நீ உயிர்த்தெழுவாய், உயிர்த்தெழுவாயே!

(28 டிசம்பர், 1902) —ஸ்மரண்

## 46

# பிறந்த கதை

தாயைக் கேட்டது சேய்:
'நான் எங்கிருந்து வந்தேன், அம்மா,
என்னை எங்கே தேடிப் பிடித்தாயோ?' -
இதனைக் கேட்டே தாய் சற்றே சிரித்து
அழுகை வரத் தன் மகனை மார்போடு ஏந்தி,
'விருப்பாய் என் மனத்துள் இருந்தாய்' என்றாள்.

'இளமையில் என் பொம்மை விளையாட்டில் இருந்தாய்;
காலையில் சிவ பூசையின்பொழுது, பன்முறை
உன்னைப் பண்ணிக் கலைத்து அமைத்தேன்.
நீ என் கடவுளின் பக்கலில்
அவர் அமரும் பூசைப் பீடத்திலேயே இருந்தாய்.
அவருக்கு நான் ஆற்றிய பூசனை உன்னையும் அடைந்தது.

'என்னுள் என்றும் ஆசையின் குருத்தாய்,
என் காதலின் மலர்ச்சியாய்,
என் தாய், என் தாயின் அன்னை
இவர்கள் உயிரினில் மறைந்திருந்தாய்.
பழமையான எங்கள் வீட்டுக்
குல தேவதையின் மடியில் -
அது எத்தனை காலமோ அறியேன் -
நீ மறைந்திருந்தாய்!

'நிறை இளமையில் என் இதயம் பூத்திடுகையில்
இன்மணமென அதில் மலர்ந்திருந்தாய்.
இளமை பொங்கும் என் அங்கமெல்லாம்
உனது நளிர்மென் சாயலைத் தந்து
நீ பின்னிக் கொண்டிருந்தாய்.

'எல்லாத் தேவதைகளின் இனிய செல்வன்
நித்தியமான நீ; பழமையானவன்;
காலை இளம் ஒளியின் சமவயதினன்;
இவ்வுலகின் கனவினின்று இன்பக் பெருக்கில்
மிதந்து வந்து புதுமைப் பொருளாய்
என் அகத்தினில் நின்றாய்!

'கண்ணிமை சாய்க்காமல் உன்னையே நோக்குவேன்?
உனது இரகசியம் எனக்குப் புரியவில்லையடா!

எல்லாரிடமும் இருந்த நீ, எப்படி என் கண்மணி ஆனாய்?
கொடடா எனக்கு முத்தம் கொடடா!
தாயின் ஆசை மகனாகி, மதுரச் சிரிப்புடன்
இப்புவியினில் வந்தாய் நீ!

'உன்னை நான் போக்கிடுவேனோ என்ற திகிலில்
என் மார்போடு இறுத்திக்கொள்ள ஆசையடா!
நீ சற்றுக் கண்ணில் படாது போனாலோ
நான் அழுது மாய்வேனடா!
உலகு அளித்த இச்செல்வத்தை,
எந்த மாயப் பொறிக்குள் கட்டிப் பிடிப்பது, அறியேன்!
வன்மையிரா என் இரு கைக்குள்
அடக்கிக்கொள்வேனா?'

(செப்டம்பர், 1903) —சிசு

## 47

# வீர மகன்

அம்மாவை அழைத்துக்கொண்டு
ஊரெல்லாம் சுற்றிப் பார்க்க
எங்கோ தொலைவில் போவது போல்
நினைத்துக் கொள்வேன்.
நீ பல்லக்கில் வந்துகொண் டிருக்கிறாய், அம்மா;
அதன் இரு கதவுகள் சற்றுத் திறந்தே இருக்கும்;
உன் பக்கத்திலேயே வண்ணப் புரவி ஏறி
படபடவென்று வந்துசொண் டிருப்பேன்.
குதிரையின் குளம்பு மண்மீது படுவதால்
புழுதி மேகம் பரவிடுமே.
அந்திப் பொழுது, மலை வாயில் சூரியன்
விழும் வேளை; இரட்டை ஏரி உள்ள
மைதானத்துக்கு வந்துவிட்டோம்.
திசை எட்டியவரை வெறிச்சென்றிருந்தது;
மனிதர் எவரும் தென்படவில்லை.
'ஐயோ, எங்கே வந்துவிட்டோம்' என்று
உன் மனத்துக்குள் திகில் வந்துவிட்டது;
'எதற்குப் பயம், அம்மா; வறண்ட ஆற்றில்
அதோ நீர் ஓடுவது தெரிகிறதே' என்றேன்.
வெளி எங்கும் நெருஞ்சி முள்;
அதனூடே வளைந்து சென்றது பாதை.

பசுவோ கன்றோ ஒன்றுமே தென்படவில்லை.
ஊரை அடைவதற்குள் இருட்டியேவிட்டது;
எங்கே போகிறோம் என்பதே தெரியவில்லை;
வழியே புலப்படவில்லை இருளில்.
என்னைக் கூப்பிட்டுச் சொல்கிறாய் நீ:
'அந்த ஏரிகரையில் அதென்ன வெளிச்சம்?'
அதே சமயம் 'பிடி, பிடி டே டே' என்று
உரக்கக் கூவியே யாரோ வருகின்றனர்.
பயந்தே நீ சிவிகையுள் ஒடுங்கி
இஷ்ட தெய்வத்தை இதயத்துள் வேண்டுகிறாய்;
சிவிகை தூக்கும் ஆட்கள் பக்கத்து முட்புதரில்
அதனை இறக்கி நடுங்கியே செத்தனர்!
அப்பொழுது நான் உன் அருகினில் வந்து,
'நான் இருக்கிறேனே; பயமேன், அம்மா' என்கிறேன்.
கையில் தடியுடன், பரட்டைத் தலையாய்ச்
செவ்வந்திப்பூவைக் காதுகளில் செருகியே
வந்தனர் கள்ளக்கூட்டத்தினர்.
நான் அவர்களைப் பார்த்துச் சற்றும் கலங்காமல்,
'நில்லுங்களடா, சாக்கிரதை!
இன்னும் ஓர் அடி எடுத்து வைத்தீர்களோ;
இதோ பாருங்கள் என் கையில் இருப்பது என்ன?
வாள்! துண்டாக்கிடுவேன் உங்களை' என்றேன்.
அதைக் கேட்டு, அவர்கள் 'அடே, அடே' என்று
குதித்தே ஆரவாரம் செய்கின்றனர்.
'போகாதேடா, கண்ணு' என்கிறாய் நீ;
'அட, இரு சும்மா' என்கிறேன் நான்.
குதிரையுடன் கள்ளர் கூட்டத்தினுள் பாய்ந்தே
ஜணஜண வென்று வாளினைச் சுழற்றுகிறேன்.
என்ன பயங்கரச் சண்டை மூண்டது போ!
அதைக் கேட்டாலே மயிர்க்கூச்செழுமே!
ஓட்டம் பிடிக்கின்றனர் அத்தனை பேரும்.
வெட்டுண்ட எத்தனை தலைகள் உருண்டனவோ!
'இத்தனை பேருடன் சண்டையிட்டு
என் குழந்தை செத்துவிட்டானோ'
என்றே நினைப்பாய் நீ அச்சமயம்.
உடனே நான் உடலில் இரத்தம் படிய
வியர்த்திட ஓடியே உன்னருகில் வந்து,
'சண்டை ஓய்ந்தது, அம்மா' என்கிறேன்.
கேட்டதுமே சிவிகையை விட்டு இறங்கியே

எனக்கு முத்தம் தந்து மடியில் அணைத்தாய்.
'என் நல்ல காலம், என் பிள்ளை பக்கத்தில் இருந்தான்;
அவன் வராமல் இருந்தால் என் கதி என்ன ஆகியிருக்குமோ?'
என்பாய் நீ.
ஒவ்வொரு நாளும் இப்படி ஏதாவது
நடந்துகொண்டே இருந்தால்....
ஏனம்மா, இது உண்மையாக இருக்கக் கூடாது?
ஒரு கதை போலவே இருக்குமே; கேட்போரெல்லாம்
திகைத்தல்லவோ போவார்கள்—
'இப்படி எங்கேயாவது நடக்குமா என்ன;
குழந்தையின் உடலில் அவ்வளவு வலிவேது?' என்பார்
பேட்டையிலுள்ள யாவரும், [அண்ணா.
'நல்லவேளை, பையன் அம்மாவுடன் இருந்தானே!' என்பர்.

(செப்டம்பர், 1903) —சிசு

## 48

# அப்பூச்சி காட்டல்

விஷமம் செய்யவேண்டிச் சம்பக மரத்தில்
நான் ஒரு சம்பக மலராய் மாறிப்போனால்,
அம்மா, காலை வேளையில் அம்மரக்கிளையில்
இளந்தளிரிடையே புரண்டு விளையாடுவனே!
காணாமற்போன என்னை, அப்பொழுது
நீ தெரிந்துகொள்வாயா, அம்மா?

'கண்ணா, எங்கேடா?' என்று அழைப்பாய் நீ;
அப்போது பக்கெனச் சிரிப்பேன் நான்.
ஏதோ வேலையாக இருப்பாய் நீ;
எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொண்டிருப்பேன்.

குளித்தானதும் தலைமயிரைத் தொங்கவிட்டு
நீ சம்பக மரத்தின் நிழலில் வருவாய்;
அங்கிருந்து பூசை அறைக்குச் செல்வாய்.
தொலைவிலிருந்து பூவின் மணம் வரும்;
உனக்குத் தெரியாது, அது உன் குழந்தை
உடம்பிலிருந்து வரும் வாசனை என்று!

பகல் வேளை, எல்லோரும் உண்ட பிறகு
நீ மகாபாரதம் படிக்க உட்காருவாய்;

சம்பக மரத்தின் நிழல், அறையின் சன்னல் வழியாய்
உன் மடியில் வந்து படியும்.
புத்தகத்தின் ஏட்டில் அதன் நிழல் ஆடும்;
உனக்குத் தெரியாது, உன் கண்ணில்
உன் குழந்தையின் நிழல் ஆடுவது!

மாலை வேளை, அகல் விளக்கேற்றி நீ
மாட்டுத் தொழுவத்தில் வைக்கச் செல்லுகையில்
இப்பூவின் விளையாட்டை முடித்து
நான் பொட்டெனத் தரையில் உதிர்ந்திடுவேன்;
அம்மா மீண்டும் நான் உன் பிள்ளையாகிவிடுவேன்;
'கதை சொல்லு' என்று வருவேன் உன்னிடம்.
'துஷ்டப் பயலே, எங்கே போனாய்?' என்பாய் நீ;
'அதைச் சொல்ல மாட்டேன், அம்மா' என்பேன் நான்.

(செப்டம்பர், 1903) —சிசு

## 49

# வியனுலகெனும் விரிநீர்க் கரையினில்

வியனுலகேனும் விரிநீர்க் கரையினில்
கூடுவர் சிறுவர் யாவரும்.
எல்லையிலா வானவெளி தலைக்கு மேல்
அசைவிராமல் தோன்றிடுமே!
நுரைத்திடு நீலக்கடல் நீர் அதோ
நாட்டியம் ஆடுகின்றது, எவ்வேளையுமே;
கரையினில்தான் என்ன கொம்மாளம்!
கூடுவர் அங்கே சின்னஞ்சிறுவர்
மணலை வைத்தே சிற்றில் அமைப்பர்;
கிளிஞ்சில் கொண்டே களிப்புடன் ஆடுவர்;
தம் கைத்திறத்தாலே எளிதில் புனைந்த
சிறு இலைப் பரிசலைச் செலுத்திடுவாரே.
வியனுலகேனும் விரிநீர்க்கரையினில்
இளஞ்சிறுவர் விளையாடுவர் இன்பமுடன்.

நீந்துவதை அவர்கள் சிறிதும் அறியார்;
நீள்வலை வீசவும் அறியாரே!
முத்துக்கெனச் சிலர் கடலுள் குளிப்பர்;
திரவியம் திரட்ட ஓடம் செலுத்தி
வணிகர் ஓடுவர் திரைகடலில்.

கூழாங்கற்கள் பொறுக்கியே சிறுவர்
 கோபுரம்போல் குவித்திடுவர்;
பொன்னும் மணியும் தேடார் அவர்கள்;
 பலகணி வலையை வீசவும் அறியார்.
நுரையெழ நகைக்கும் விரிநீரும்
 கடலின் கரையும் சிரித்திடுமே;
அச்சந் தரும் பெரும் பேரலைகள்
 மெல்லிசை பயிற்றும் சிறுவர் காதினில் -
அன்னையவள் தொட்டிலை ஆட்டித்
 தாலாட்டிசைப்பது போன்றே.
சிறுவருடன் மாகடல் விளையாடுகிறது;
 சிரிக்கிறது கடலின் கரையும்.
வியனுலகெனும் விரிநீர்க் கரையினில்
 களிப்புடன் ஆடுவர் இளஞ்சிறுவர்.
கடுவளி பாய்ந்திடும் ககனத்தினில்;
 தோணிகள் கடலுள் தொலைவில் அமிழும்;
கூற்றுவன் ஓடித் திரிவான் எங்கும்;
 இளம்பிள்ளைகள் யாவரும் விளையாடுவர்;
வியனுலகெனும் விரிநீர்க்கரையினில்
 குழந்தைகளின் மாபெருங்கூட்டம் காண்!

(செப்டம்பர், 1903) —சிசு

## 50

# அபவாதம்

குழந்தாய், நீ கண்ணீர் விடுவதேன்?
 உன்னை யார் என்ன சொன்னார்கள்?
 மனம் விட்டு மொழிவாய் என்னிடம்!

எழுதப் போய் உன் கையிலும் முகத்திலும்
 மசியைப் பூசிக்கொண்டாயா?
அழுக்கேறியதற்கா உன்னைத் திட்டினர்?
 சீச்சீ! அவர்கள் இங்ஙனம் சொல்வது தகுமா?
பூரண மதியும் மறுவைக் கொண்டுளதே.
 அதனை அழுக்கு என்று சொல்லுவதுண்டோ?

குழந்தாய், குற்றம் கூறுகின்றனர் உன்மீது.
 வெறுப்பே உன்னிடம் கொள்கின்றனர் யாவரும்.

விளையாடப் போய், உடையைக் கிழித்துக்கொண்டாயே!
அதனால்தானே தரித்திரம் பிடித்த பயல் என்கின்றனர்?
சீச்சீ! இதென்ன பேச்சு?
கிழிந்த முகிலிடையே காலை ஒளி சிரிக்கிறது;
அதுவும் தரித்திரம் பிடித்ததா என்ன?

யார் எது சொல்லினும் நீ
காதில் போட்டுக்கொள்ளாதே!
உன்மேல் இந்த அபவாதம்
மேலும் மேலும் பெருகிடுமே!

இனிப்புப் பண்டம் என்றால் உனக்கு விருப்பம்;
இதனால் உன்னை வீட்டிலும் வெளியிலும்
ஆற்றாமை மிக்கவன் என்று ஏசினரோ?
சீச்சீ! இதென்ன, இப்படி?
உன்மேல் அளவிலா ஆசையால்தான்
இவ்வாறெல்லாம் சொல்லுவரே!

(செப்டம்பர், 1903) —சிசு

## 51

## அநுதாபம்

நான் குழந்தையாக இராமல்
உன் நாய்க் குட்டியாக் இருப்பின்,
உன் இலையில் இட்ட உணவினை விரும்பி
வாய் வைக்க நான் வந்தால்
அதட்டி என்னை விரட்டுவாய், இல்லையா?
உண்மையாகச் சொல், அம்மா;
என்னிடம் பொய் பேசாதே!

'சீ....போ போ!' என்பாய் என்னை;
'எங்கிருந்து வந்தது இப்பாழும் நாய்!' என்பாய்.
போ அம்மா!..போ அம்மா நீ!
என்னை உன் மடியிலிருந்து இறக்கிவிடு.
உன் கையில் நான் உண்ண மாட்டேன்.
உன் இலையிலிருந்து நான் உணவு கொள்ளேன்.

நான் குழந்தையாய் இராமல்
நான் உன் சிறு கிள்ளையாக இருப்பின்

எங்கே பறந்து போய்விடுமோ என்று
சங்கிலி பூட்டுவாய் என் காலில், இல்லையா?
உண்மையைச் சொல், அம்மா;
என்னை ஏமாற்றுமல் சொல்வாய்!
'பாழும் இந்தக் கிளி சங்கிலியைக் கழற்றிஞல்
பறந்தல்லவோ போய்விடும்!' என்பாய்.
என்னை இறக்கிவிடு, அம்மா!
என்மேல் உனக்கு ஆசை எதற்கு?
நான் உன் மடியில் இருக்க மாட்டேன்;
நான் காட்டுக்குப் போய்விடுவேன்.

(செப்டம்பர், 1903) —சிசு

## 52

## விமரிசகன்

அப்பா அத்தனை புத்தகம் எழுதுகிருரே;
எதைப்பற்றி எழுதுகிருர்? ஒன்றும் புரியவில்லையே!
அன்று உனக்குப் படித்துக் காட்டிஞரே,
புரிந்ததா, உண்மையாய்ச் சொல்வாய், அம்மா!
இந்த மாதிரி எழுதுவதால் என்ன பயன், சொல்லம்மா?

நீ பேசுகிற மாதிரி ஏன் அம்மா, அப்பா எழுதுவதில்லை?
ராஜாவின் கதையெல்லாம் அப்பாவுக்குப்
பாட்டி சொன்னதே இல்லையா, அம்மா?
அந்தக் கதையெல்லாம் மறந்து போய்விட்டாரா?
குளிக்க நாழிகையாஞல்
நீ போய்ப் போய் அவரைக் கூப்பிடுகிருய்;
இலையில் சாதம் வைத்துக் காத்திருக்கிருய்;
அவையெல்லாம் அப்பாவின் கவனத்தில் இல்லை.
எழுதியபடியே இருக்கிருர் எப்போதும்!
அப்பா அறைக்குள் நான் விளையாடப் போஞல்
என்னை அதட்டி, 'துஷ்டப் பயலே!
அப்பா எழுதுகிருரே; உனக்குத் தெரியவில்லை?' என்கிருய்.
உண்மையைச் சொல்லம்மா,
அவர் இப்படி எழுதுவதால் பயன் என்ன?

(செப்டம்பர், 1903) —சிசு

## 53

# செய்தியைச் சொல்வாய்

சொல்வாய், உன் செய்தியைச் சொல்வாய்,
என்றோ தொடங்கிய தொன்மையே!
எல்லையில்லா இரவிடை நீ
எதனை நோக்குகின்றாய்?
சொல்வாய், உன் செய்தியைச் சொல்லாயோ!

ஊழிதோறும் வந்திடும் வரலாறு அனைத்தும்
கடல் அனைய உனது ஆழத்துள் விழுகின்றனவே.
வாழ்வுகள்தாம் எத்தனை; அவற்றின் வழிகள்தாம் எத்தனை
கலந்தன காண் உன் கரும்புனலிடையே.
உன்னுள் புகுந்ததுமே, நின்றது அவற்றின் ஓட்டமும்;
மறைந்தே போயின, கலகலவென அவை பேசிய எல்லாம்.
அலையெழாத அச்சந் தரும் இம்மோனம் உனக்கேனோ?
எங்கு மறைத்தனையோ அத்தொன்மையை?
என்னுடன் மட்டும் சொல்லிவிடு இவ்வுண்மையை;
அசையாத் தொன்மையே, மறைந்து செல்வோய்!
உணர்வற்றவள் அல்லை நீ;
பேசாமல் இருப்பது ஏனோ?
நீ நகருவதை உணர்ந்திடுமே எனது உள்ளம்.
பன்னாள் பயனைத் திரட்டியே
என்னுள் வைத்திடும் தொன்மையே!
மறைவில் நீ எவ்வுலகிலும் செயல் புரிவாய்!
ஓடும் நாட்களின் ஓலத்திடையே
அசைவின்றி நிற்பவளே!
தொன்மையே, எனக்கு மட்டும்
சொல்லாயோ உன் செய்தியை!

(1903) —கதா ஓ காஹிநி

## 54

## கானல் நீர்

என் மனத்தினில் மயங்கியே நான்,
கத்தூரி மானைப் போல
வெறி மூண்டே வனந்தோறும் அலைகின்றேன்.
பங்குனி இரவில், தென்றல் வீசுகையில்
திக்குத் திசை தெரியாமல் அலைகின்றேன்.
பெற விரும்பினேன் ஒன்றை; அதை நான்
விரும்பியது தவறுகும்.
விரும்பாததையே முடிவில் பெறலானேன்.

என் நெஞ்சைவிட்டு வெளியேறும் எண்ணங்கள்
கானல் நீரெனவே அலைகின்றன.
கைநீட்டி நான் பற்ற விரையும்போது
அவை என் நெஞ்சிடை வருவதில்லை காண்!
பெற விரும்பினேன் ஒன்றை; அதை நான்
விரும்பியது தவறுகும்.
விரும்பாததையே முடிவில் பெறலானேன்.

எனது வேய்ங்குழல் தான் இசைத்த பாட்டைப்
பிடித்திடப் பார்த்தது, அடங்காப் பித்தன்போல்;
அது பற்றிய அப்பாட்டினில் பண்ணேதும் ஒலிக்கவில்லை.
பெற விரும்பினேன் ஒன்றை; அதை நான்
விரும்பியது தவறுகும்.
விரும்பாததையே முடிவில் பெறலானேன்.

(1903) —உத்ஸர்க்க

## 55

## நல்ல தருணம்

அன்னையே, இளவரசர் இன்று
நம் வாயில் வழியே போவார்.
வீட்டு வேலையில் எப்படி, அம்மா,
என் மனம் நிலைக்கும் இன்று?
நான் எத்தகைய ஆடையை அணிவது?
கூந்தலை எவ்வகை அழகுற முடிப்பது?
மேலாடையை எவ்வண்ணத்தில் கொள்வது?
மொழிவாய் என்னிடம், அம்மா!
வாய்பிளந்து நிற்கிறுயே;
அன்னையே என்ன உனக்கு?

சாளர வாயிலைச் சென்றடைவேன்;
என்னையே நோக்கிடும் இளவரசரின் கண்கள்.
இதை என் உள்ளத்தில் உணர்வேனே.
கடைக்கண் சற்றே வீசி, அவர்
என்னை விட்டு அகன்றிடுவார், வெகு தொலைவிக்.
இன்னியமும் உருக்கமாய் ஒலித்திட்டு
அவருடன் தொலைவில் மறைந்திடுமே!
இருப்பினும், இளவரசர் இன்று
என் வாயில் வழியே போவார்;
அணிகலன் பூணுமல் எப்படி இருப்பது, அம்மா?
அன்னையே! இளவரசர் என் வாயில் வழியே
சென்றதைப் பார்த்தேனே.
அவர் ஊர்ந்த தேரின் தங்கக் கொடிஞ்சிமீது
காலையொளி படர்ந்திருந்தது.
என் மறைவினைக் களைந்தே இமைப் பொழுது
சாளர வாயிலில் நின்று கண்ணுரக் கண்டேனே;
என் கழுத்தினில் அணிந்த மணிகளை உருவியே
அவர் செல்லும் வழியிடை வாரி இறைத்தேன்.
திடுக்கிட ஏன் இப்படி நோக்குகிருய் என்னை?
அன்னையே, என்ன உனக்கு?
அந்நிலத்தில் இறைபடும் மணிகளைத்
திரட்டத் தோன்றவில்லை எனக்கு;
தேர் உருளையின்கீழ் அவை நொறுங்கினவே.
இளவரசின் தேராழிச் சுவடு
நம் வாயிலில் புழுதியிடைப் பதிந்தது காண்!
வேறெவரும் அறியார் நான் தந்ததை;
புழுதி மறைத்துக்கொண்டது.
இருப்பினும், இளவரசர் என் வாயில் வழியே
போனதைக் கண்டேன்;
என் உள்ளத்துள் திகழும் அருமை மணிதன்னைப்
போக்கிடாமல் எங்ஙனம் இருப்பேன்
சொல், அம்மா!

(29 ஜூலை, 1905) —கேயா

## 56

# வீண்

நாணல் புதர் சூழ்ந்த பாழாற்றங்கரையினில்
அவளை நோக்கி நான்,
'தனியே மேலாடையில் சுடர் அகலினை மறைத்துச்
சென்றிடும் பெண்ணே, நீ யார்?
விளக்கே இல்லை என் அகத்தில்;
உன் அகலினை வைத்திடுவாய் அங்கே' என்றே வினவினேன்.
மங்கும் மாலைப் பொழுது; கருவிழி தூக்கி அவள்
சற்றே என்னை நோக்கினாள்;
'ஆற்றிடை இவ்விளக்கினைச் செலுத்திடவே
வந்தேன் இவ்வந்திப் பொழுதில்' என்றாள்.
நாணல் புதர் சூழ்ந்த பாழாற்று நீரில்
சுடர் தரும் அவ்வகல் வீணே செல்வதைக் கண்டேனே.
இருள் கவிந்தது; மீண்டும் அவளை,
'அத்தனை விளக்கு உன் இல்லத்தில் இருக்க
எவர் பொருட்டு இவ்விளக்கீடு, பெண்ணே?
விளக்கே இல்லை என் அகத்தில்;
உன் அகலினை வைத்திடுவாய் அங்கே' என வினவினேன்.
கருவிழியால் என்னைக் கூர்ந்தே நோக்கி அவள்,
'நான் ஏற்றிய இச்சிறு சுடரினை
வானத்துச் சுடருள் ஒன்றாய் ஒளிரச் செய்வேன்' என்பாள்.
வெறு வெளியில் அச்சிறு அகல் வீணே ஒளிர்ந்தது.
அவளை அணுகி மையிருள் நள்ளிரவில் வினவினேன்:
'உன் ஆடையின் மறைவில் விளக்கினைக் காத்து
இத்தனிமையில் யாரைக் குறித்துச் செல்கின்றாயோ?
விளக்கே இல்லை, என் அகத்தினில்;
உன் அகலினை வைத்திடுவாய் அங்கே.'
என்மேல் அவள் தன் கருவிழி பதித்து
அவ்விருளிடைக் கூறுவாள்:
'விளக்கீட்டில் வரிசையாய் வைத்திடவே
கொண்டுவந்தேன் சுடரும் இவ்வகலினை.'
கணக்கிலா அச்சுடர் வரிசையில் ஒன்றாய்
அவள் செலுத்திய விளக்கும் வீணாய்
ஒளி விடுவதைக் கண்டேனே!

*(10 ஆகஸ்ட், 1905)* கேயா

## 57

# உலோபி

பிச்சை எடுத்து ஊர்த்தெருவூடே
திரிந்து கொண்டிருந்தேன்.
பொன்தேர் ஏறிச் சென்றுகொண்டிருந்தாய் நீ அப்பொழுது.
விந்தைக் கனவே போல் அக்காட்சி
என் கண்ணுக்குத் தோற்றியது.
என்னே உன் அற்புத எழில்!
என்னே உன் அழகார் அணிகள்!
'இவ்வரசன் யாரோ?' என்று என்னுள் நினைத்தேன்.
"நல்ல வேளை இரவு கழிந்தது. இன்று
வாயில் தோறும் நான் அலைய வேண்டியதில்லை' என
நினைத்தேன் நான்.
அன்று வெளியே வந்ததுமே யார் முகத்தில் விழித்தேனோ?
'தேரில் ஊர்ந்து பொன்னும் மணியும் இறைத்தே செல்வாய்,
பிடிபிடியாய், அள்ளியே குவை குவையாய்;
அவற்றைப் பெறலாம்' என்று நினைத்தேனே.
தேர் என்னருகில் வந்து நின்றதைக் கண்டேன்.
என் முகம் நோக்கி முறுவலுடன் இறங்கினாய் நீ.
உன் மலர்ந்த முகம் கண்டதுமே தணிந்தன
என் துயரம் யாவும்.
அச்சமயம் நீ ஏனோ சட்டெனக் கைதனை நீட்டி,
'எனக்கு ஏதாகிலும் தருவாய்' என்றாயே.
ஐயோ, இதென்ன பேச்சு, மன்னர் மன்ன,
எனக்கு ஏதாகிலும் தருவாய் என்கிறாயே!
இதனைக் கேட்டுத் தலை தாழ்ந்திட நின்றேன் கணநேரம்.
இவ்வாண்டியிடம் பிச்சை கேட்கும் அளவு
உனக்கு உற்ற குறைதான் என்ன?
வேடிக்கை பார்க்கவோ என்னை
வஞ்சனை செய்கிறாய் இவ்வாறு?
ஒரு சிறு நெல் மணியைத் தந்தேன்
என் பிச்சைப் பைக்குள்ளிருந்தே.
உறைவிடம் வந்து, என் பிச்சைக் கலத்தைக்
கவிழ்த்தேன். என்னே அதிசயம்!
பிச்சையில் கிடைத்த நெல்மணிகளிடையே
கண்டேன் பொன்துணுக்கு ஒன்றை!
அவ்வரச ஆண்டிக்கு நான் ஈந்த சிறு நெல்
பொன்னாகித் திரும்பியது என்னிடமே.

*அழுதேன் விம்மியே, கண்களில் நீர் சோர;*
*ஏனோ, எனக்குள்ளன யாவும்*
*உனக்கே கொடாமல் போனேன் நான்?*

*(22 மார்ச்சு, 1906)* —கேயா

## 58

## விடை தரல்

*மன்னித்து என்னை விடை தருவீரே, தம்பிமாரே!*
*வினை செய்வோர் வழியில் வருபவன் அல்ல நான்.*
*அணி அணியாய் முன்னேகுவீர் யாவரும்:*
*கழுத்தினில் அணிவீர் வெற்றி மாலையை!*
*இந்தக் காட்டக நிழலிடைப் பின்தங்கியே*
*வர ஆசை கொள்கின்றேன் நான்.*
*அழையாதீர் என்னை, தம்பிமாரே!*
*உங்களுடன் சேர்ந்தே வெகு தூரம் வந்தேன்;*
*கை கோத்தே யாவரும் வழி நடந்தோம்.*
*பாதை இரண்டாகிப் பிரியும் இவ்விடந்தனில்*
*ஏனோ விண்டது என் இதயம்!*
*என்னுள் ஒரு பாழும் வேதனையை*
*ஏதோ மலரின் நறுமணம் தூண்டியது.*
*உங்களுடன் சேர்ந்து என்னால் வர முடியவில்லை.*
*எதனை நோக்கி இன்று நீங்கள் விரைகின்றீரோ*
*அது வெறும் பொய்யாகியது என் வரைக்கும்.*
*பொன்னும் மணியும் தேடிடும் இவ்வேட்கை,*
*அரசுகள் தோன்றுவதும் மறைவது,*
*உலகெங்கிலும் அலைத்திடும் சமயப் பூசல்கள் -*
*இவை யாவும் என் வரைக்கும் வெறும் பொய்யே;*
*மோட்டுக் கிளையில் மலரும் பொன் சம்பகம் வேண்டி*
*மரத்தின் பாத்தியில் நீர் பாய்ச்சுவதை ஒக்கும்!*
*வானை நிரப்பியே மனத்தை மயக்கும் சிரிப்பு*
*இன்று என் உள்ளத்தில் வேய்ங்குழல் இசைத்தது.*
*நடந்து நடந்து எனக்கு அலுத்துப் போயிற்று;*
*திடுமென வேலைகளுக்கு இடையூறு விளைந்தது;*
*ஒரே சொல் என் நெஞ்சினுள் ஒலிக்கிறது:*
*'எதன் மீதிலும் காதல் கொள்' என்பதே அது.*
*உள்ளத்தைக் கவர்ந்திடும் அச்சிரிப்பு*
*எதனினும் உயர்வன்றோ!*

எனக்கு விடை தாரீர் யாவரும்;
வேலையின்றி இருப்பதையே நான் விரும்புகின்றேன்.
முகில் ஊர்ந்திடும் வழியே செல்லும் யாத்திரிகன் நான்.
கடுவளியையும் எதிர்த்தே நான் நடந்திடுவேன்.
திசையிலாக் கடலில் செல்லும் மாலுமி நான்.
எதிலும் நாட்டமின்றிச் சுற்றித் திரிபவன் நானே.
விடை தருவீரே யாவரும்!

(28 மார்ச்சு, 1906) —கேயா

## 59

# கைதி

'கைதி, உன்னை இக்கடினத் தளையால்
கட்டியவர் யாரோ?'

'என் அத்தன் என்னைப் பிணைத்தான்.
வயிரம் பாய்ந்த இவ்வன்மைக் கயிற்றால்;
யாரையும் விட நானே மேலானவனென்றே
நினைத்துச் செருக்குற்றேன்.
என் வேந்தனுக்குரிய திறையை
என் அகத்திலே குவித்து வைத்தேன்.
உறக்கம் வரவே படுத்தேன்,
என் மன்னவன் துயிலும் சேக்கையிலே.
விழித்தெழுந்தேன்; என் களஞ்சியத்திலேயே
நான் கட்டுண்டிருப்பதைக் கண்டேன்.'

'கைதி, வயிரம் போல்
இந்த உறுதியான தளையினைச் செய்தது யார்?'

'நானே அதனை உருவாக்கிக் கொண்டேன்,
எவ்வளவோ கடினமாய் முயன்றே.
என் வீரத்தாலேயே வையத்தைக்
கட்டியாளக் கருதினேன்;
அதன் பொருட்டே இரவும் பகலும்
இவ்விரும்புத் தளையைச் செய்தேன்.
கனலில் இட்டு அதனைக் காய்ச்சி அடித்து
நான் உருவாக்கியதற்கோர் கணக்கும் உண்டோ!
ஆக்கி முடிந்ததும் அக்கடினத் தளையில்
கட்டுண்ட நான் கைதியானதைக் கண்டேனே.'

(22 ஏப்ரல், 1906) —கேயா

## 60

# பாரத புண்ணிய தீர்த்தம்

மனமே, இப்புண்ணியப் புவிதனில்
மெல்ல விழித்தெழுவாய் நீ;
மானிடர் பெருங்குலம் ஒன்ருய்க் கூடும்,
பாரதமென்னும் மாபெருங் கடற்கரையினிலே.

இரு கை கூப்பி இங்கே
ஓங்கிய சந்தந்தனிலே உவகையுடன்
மானிட தெய்வத்தை வணங்குவனே.
மாலையெனவே புண்ணியப் புனல் சூழ்ந்து
தியானத்தில் ஆழ்ந்திடும் இப்புவியே.
புனிதத்தலம் இது என்றுமே காண்பீர்;
மானிடர் பெருங்குலம் ஒன்ருய்க் கூடும்
பாரதமெனும் மாபெருங் கடற்கரையினிலே.

மக்களை இங்கே பல திசைகளிலிருந்து
அழைத்து வந்தவர் யாரோ?
வெள்ளம் வருவதுபோல் ஒவ்வொருவராய்
இப்பெருங்கடலை வந்தடைந்தனரே!
ஆரியரும், ஆரியரல்லாதவரும்,
திராவிடரும், சீனத்தவரும், சகரும்,
ஹூணரும், பட்டான் மொகலாயருமாய்க்
கலந்தே இங்கு ஓருடல் ஆயினரே!
தருவதுமாய், பெறுவதுமாய்
இணைவதுமாய், இணைப்பதுமாய்
மேலை நாட்டினர் தம் வாயிலைத் திறந்தே
கையுறையுடன் நோக்கினர் இந்நாட்டை;
வந்தவர் யாவரும் தங்கினர், பெருமை மிகு
பாரதபுவி யெனும் மாபெருங் கடற்கரையினிலே.

போர் விருப்புடனே, வெற்றிப் பெருமிதம் கொண்டே
காடு மலை வெளி கடந்தே வந்தவர் எவரும்
திகழ்ந்திடுவர் என் உளத்தினில்; அவர் அயலார் அல்லர்.
தொனித்திடுமே, என் குருதியில் பல விந்தைக் குரல்கள்.
ஒலித்திடு, ஒலித்திடு, உருத்திர யாழே!
வெறுப்புடன் நிற்பவர், இக்கட்டினைக் குலைப்பவர் -
அவர்களும் வந்திடுவர்; சூழ்ந்தே நின்றிடுவர்,
பாரத புவியெனும் மாபெருங் கடற்கரையினிலே.

ஒரு நாள் இங்கே, ஓங்காரப் பேரொலி
நாம் ஒன்றெனும் மந்திரத்தை இசைத்தது ஓய்வின்றி,
இதய யாழினிலே.
தவவலிவால் ஓங்கும் வேள்வித்தியில் ஆவுதி பெய்து
வேற்றுமை மறந்து உள்ளம் ஒன்றெனக் கண்டனரே!
முயன்றெழும் இவ்வழிபாட்டினை இயற்றியே மீண்டும்
இவ்வேள்விச் சாலையைத் திறந்திடுவீரே!
வணங்கியே யாவரும் இங்கு ஒன்று கலந்திடுவீர்,
பாரதமெனும் மாபெருங் கடற்கரையினிலே.

ஓம்பும் எரியினில் குருதி ஒளிர்வதைக் காண்பீர்!
பொறுத்திடல் வேண்டும், உள்ளம் உருகிட;
நம் விதியின் எழுத்தும் இதுவாம்.
துயரினைத் தாங்கியே செவி சாய், மனமே,
இவ்வொருமையின் அழைப்பினுக்கு.
வெட்கம், அச்சம் யாவையும் வென்றிடு!
இழிவைத் தொலைவில் விலக்கிடு!
தாங்காத் துயர் அனைத்தும் மறைந்திடப்
பரந்த உள்ளம் பெற்றிடுவாய்.
கழிந்தது புன்மை இரவு; நம் அன்னை
பரந்த இக்கூட்டினுள் துயிலெழுந்தாள்,
பாரதமெனும் மாபெருங்கடற்கரையினிலே.

ஆரியனே! வருவாய்; ஆரியனல்லாதவனே! வா;
வருவீரே இந்து, முஸல்மான்களே!
ஆங்கிலத்தவரே! வாரீர் இன்று;
கிறிஸ்துவரும் வாரீரே;
பார்ப்பனரே வாரீர், தூய மனத்துடன்
எவருடனும் கை கோத்திடவே;
இழிந்தவர் யாவரும் வாரீர்!
அவமதிப்பு அறவே அகற்றி
அன்னையின் திருமஞ்சன விழாவினில்
சேரத் திரள்வீரே!
மங்கல கலசம் நிரம்பவில்லை இன்னும்
யாவரும் தீண்டிடத் தூயதாம் இத்தீர்த்தம் -
பாரத புவியெனும் மாபெருங்கடற் கரையினிலே!

(2 ஜூலை, 1910) —கீதாஞ்சலி

## 61

# இழிவுக்கு ஆளானோர்

துர்ப்பாக்கியமான என் நாடே,
நீ எவரை இழிவாக நடத்துகின்றாயோ
அவர்களைப் போலவே நீயும்
இழிநிலையில் இருக்க வேண்டியதே!
மனித உரிமையை, யாரிடமிருந்து பறிக்கின்றாயோ,
எவரை உன்முன் நிற்கச் செய்து,
உன் மடியில் இடந் தர மறுக்கின்றாயோ
அவர்களுடன் சமமாக நீயும்
இழிநிலையில் உழல வேண்டியதே!

மெய்தீண்டி மனிதர் உறவு கொள்ளாது,
வெறுத்து, மனிதனின் உயிர்க்கடவுளிடமிருந்து
எவரை நீ ஒதுக்கிவிடுகின்றாயோ,
கடுஞ் சினத்துடன் விதி ஏவும்
இந்த வறுமையின் கொடுமையில்
அவர்களுடன் சேர்ந்தே
உண்டு உழலுவாய்!

நீ அமரும் இடத்திலிருந்து
எவரைத் தள்ளிவிடுகின்றாயோ,
உன் வலிமையால் எவரைக்
காலடியில் கிடத்திப்
புழுதியினும் கேடாக வைக்கின்றாயோ,
அந்த இழிநிலைக்கு நீயும் இறங்கி வா!
இன்றேல் நீ உய்வதற்கு வழி இல்லை.
அவர்களுடன் சமமாக நீயும் இன்று
இழிநிலையில் உழலவேண்டியதே!

எவரை நீ கீழே கிடத்தினையோ,
அவர்கள் உன்னைக் கீழுக்கே இழுப்பார்கள்;
எவரை நீ பின்னால் ஒதுக்கிவிடுகின்றாயோ,
அவர்கள் உன்னைப் பின்னுக்கே இழுப்பார்கள்.
அறிவின்மை இருளில் எவரை மூடி வைக்கின்றாயோ,
அக்கொடிய வேற்றுமை
உன் நலனையும் இன்று மூடிவிட்டது;

அவர்களுக்குச் சமமாக நீயும்
இழிநிலையில் உழல வேண்டியதே!

பல நூற்றாண்டுகளாக இவ்விழிவின் சுமையால்
உன் தலை தாழ்ந்திடினும்,
மனிதனின் கடவுளை நீ வணங்கவில்லையே!
இருப்பினும், கண்ணைத் திறந்து பார்:
உனக்குப் புலப்படவில்லையா,
ஈனர் இழிவுற்றோரின் இறைவன்
இப்புழுதியில் இறங்குவது?
அவர்களுக்குச் சமமாக நீயும்
இழிநிலையில் உழல வேண்டியதே!

இது உன் கண்ணில் படவில்லையா?
கூற்றுவன் உன் வாயிலில் நிற்கின்றான்.
உன் சாதிச் செருக்கைக் கண்டு
தன் சாபத்தை இடுகின்றான்.
எல்லாரையும் நீ அழைக்காது போனால்,
இப்போதே விலகி நில்!
நாற்புறமும் இந்தத் தன்மானத்தில்
கட்டுண்டு இருப்பாய்;
மரித்தவுடன் அவர்களுக்குச் சமமாய்
நீயும் வெந்து நீறாகிடுவாய்.

(4 ஜூலை, 1910) —கீதாஞ்சலி

## 62

# புழுதிக் கோயில்

பஜனை, பூஜனை, சாதனை, ஆராதனை
யாவையும் விட்டொழி;
கதவடைத்த கோயிலுள்ளே
யாரைத் தேடி நீ அலைகின்றாய்?
இருளில் புகுந்து உன் மனத்துள்ளே
யாரைக் குறித்து வழிபடுகின்றாய்!
கண்ணைத் திறந்து நன்றாகப் பார்:
கடவுள் உன் இல்லத்திலும் இல்லை!
உழவர் உழன்று பயனைக் காணும்
வயல் வெளியில் வாழ்கின்றார் அவர்.

உடல் வருந்தக் கல்லை உடைத்தே
பாதை அமைப்போரிடமே பார் அவரை;
வெயில் மழையிலும் இந்த எளியவருடன்
புழுதியில் அவர் பணி செய்வதைக் காண்!

உனது தூய ஆடையைக் களைந்து எழுந்து வா!
அவரைப் போல், புழுதியில் நீயும் உழலடா!
விடுதலை? எங்குளது விடுதலை?
விடுதலை என்பது ஏது?
இறைவனே தன் படைப்பில்
கட்டுண்டு இருப்பதைப் பார்!
தியானத்தைக் கட்டி வை; பூக்குடலையை ஒதுக்கிடு!
கிழிந்து கந்தலாகட்டும் உனது ஆடை!
தூசு படிந்து அது அழுக்கு ஏறட்டும்.
தொழில் புரியும் அவருடனே நீயும்
ஒன்றியே உழைத்திடுவாய்;
நெற்றி வியர்வை நிலத்தில் சொட்டப் பாடுபடு.

*(11 ஜூலை, 1910)* —கீதாஞ்சலி

## 63

# போகும் நாளன்று

நான் பிரிந்து போகும் நாளன்று
கூறுவேன் ஒன்று கேளுங்கள்:
இவ்வியனுலகில் நான் பார்த்தவை பெற்றவை
இவற்றிற்கோர் இணையும் உண்டோ?

இவ்வொளி வாரிதி நடுவே நலந் தரும் தாமரை ஒன்றுண்டு;
அதன் நறுந்தேனை உண்டு உய்ந்தவன் நான்.
விந்தைமிகு இந்தக் கூத்துக் களந்தன்னில்,
என் விளையாட்டுக்கள் கணக்கிலவே!
இரு கண்கள் களிதீர, கண்டறியாதன கண்டேன்!
என் கைக்குள் சிக்கினன் தீண்டற்கரியவன்;
இத்துடன் என் கதையை அவன் முடிப்பினும்
முடித்து விடட்டும்-
போகுமுன் இது ஒன்று கூறுவேன் உங்களுக்கு.

*(5 ஆகஸ்ட், 1910)* —கீதாஞ்சலி

## 64

## சங்கு

உன் வெற்றிச் சங்கு மண்ணில் புரள
  எங்ஙனம் பொறுத்திடுவேன் நான்?
காற்றும் கதிரும் மங்கிப் போயின;
  ஈதென்ன பேரிடும்பை?
கொடியைத் தூக்கிச் செருமுனை சேர்வோர்
  விரைவாய் வந்திடுவீர்!
பாடல் தெரிந்தோரே பள்ளு இசைத்திடுமின்;
  முன் வருவோரே வாரீர், மொய்ம்புடனே;
அஞ்சா நெஞ்சினரே, வாரீர் அனைவருமே!
மண்ணில் புரளும் இச்சங்கினைப் பாரீரே!

பூவும் புனலும் கொள் பூசையை நோக்கி,
  அமைதியின் உறைவிடம் தேடியே நான்
    சுற்றிச் சுற்றி அலைந்தேன் நாளும்.
என் நெஞ்சின் புண் ஆறிடுமோ இனி!
மாசறவே நான் தூய்மை ஆவேனோ
  என்று நினைத்தேன்.
அந்தோ! மண்மிசை விழுந்து புரண்டது
  உன் வெற்றிச் சங்கம்!

என் விழிகள் இன்று உறக்கத்தை இழந்திடுமே;
மழையின் பொழிவு எனவே கூர்ங்கணைகள்
என் மார்பிடைப் பாய்ந்திடும்; இதனை அறிவேன் நான்.
என் பக்கலில் வந்தணைவர் சிலரே;
நெடுமூச்செறிந்தே சிலர் அழுவர் வெருண்டே.
இன்துயில் எழுப்பும் மலர்ப்பள்ளிமீது
தோன்றிடுமே அச்சந் தரும் தீக்கனவுகள்.
உவப்புடன் இன்று ஊதிட வாரீர்,
இப்பேரொலிச் சங்கினை எடுத்தே!
அமைதியை நாடி உன்னிடம் நான் பெற்றது என்ன?
    வெறும் வெட்கம் ஒன்றே!
பூணுவீர் உடலெங்கும் போரின் ஒள்ளிய கோலம்;
புதிதாய் இடுக்கண் வருவது வரட்டும், வாரீரே!
விழுப்புண் உண்டே; நின்றிடுவோம் விலகாமல்.
உளத்தில் இடர் தோன்றிடும்பொழுதினில்
    கொட்டிடும் வெற்றியின் முரசம்;

வன்மை யாவுமே தந்து பெறுவேன்
அச்சம் தவிர்க்கும் உன் அருமைச் சங்கினையே!

(26 மே, 1914) —பலாகா

## 65

## ஓவியம்

நீ ஓவியந்தானே?
கிழியில் வரைந்த வண்ணப் பாவைதானே?

அதோ வெகு தொலைவில்
தாரகை பொதிந்த வான ஆறு;
அங்கே குழுமி
வானக் குடம்பையுள் உறைவோர்,
அல்லும் பகலும் சுடரொளி ஏந்திப்
பேர் இருளிடைப் பயணம் செய்யும்
நாள் கோள் ஞாயிறு,
இவர்களைப் போல
உண்மைப் பொருள் அல்லையோ நீ?
அந்தோ ஓவியமே!
வெறும் ஓவியந்தானே நீ?

இந்தச் சஞ்சல உலகிடை ஏனோ
நீ அமைதி கொண்டு நிற்கின்றாய்?
யாத்திரிகர்களுடன் செல்வாய் நீயும்,
வழி தப்பியவளே!
இரவுபகல் எவரையும் நீத்துத்
தொலைவில் இவ்வாறு
நின்று, நிலைத்த உன் அறையில்
ஏன் உறைகின்றாய்?

இந்தப் புழுதி
தன் பழுப்பேறிய ஆடையைத் தூக்கிக்
காற்றுடன் நாற்றிசையும் விரைகிறது.
வெம்மை வேனில்
கைம்மை அணிகலம் கழித்துத்
தவமகளாம் அவனிக்குத்
துவராடை புனைகிறாள்.

காதலர் கூடும் இளவேனிற் காலையில்
அவளுக்கு அழகிய தொய்யிலை வரைகின்றாள்.

இந்தப் புழுதியும் உண்மை, அந்தோ!
வையத்தின் அடிமிசைப் படரும்
இப்புல்லுந்தான் உண்மை, அந்தோ!
இவை நிலை பெயராதன;
அதனால் இவை யாவும் உண்மைதானே!
அசைவிராத நீ வெறும் ஓவியமோ?

ஒரு நாள் இவ்வழியேதான்
எங்களுடன் சேர்ந்தே வந்தாய் நீ;
உன் மார்பும் உயிர்ப்பால் எழும்பியது.
இவ்வுலகின் தாளத்திற்கு இசைந்தே
நவநவமான தன் சந்தங்களில் உடல் உறுப்பெங்கும்
உனது உயிர், பாடல்கள் எத்தனையோ -
ஆடல்கள் எத்தனையோ - இயற்றியது காண்!
அது நடந்து இன்று
எத்தனை காலமாயிற்று!

இவ்வாழ்வில்
என் உலகினில்
நீ இருந்ததும் உண்மைதானே!
என் கண்ணில் இந்த நிகிலத்தினில்
உருவெனும் தூரிகையால்
சுவைமிகு சித்திரங்கள்
எங்கணும் வரைந்தாய் நீயே.
அந்நாள் காலை
இவ் வையத்தின் குரலாய்
வடிவெடுத்திருந்தாய்.

வாழ்வில் சேர்ந்தே நாம் செல்லுகையில்
ஓர் இருளின் மறைவில்
சட்டென நின்றாய் நீ.
பின்னர் நான்,
துன்பம் இன்பம் எத்தனையோ கடந்து
இரவும் பகலும் ஏகினேன் முன்னால்.
வானம், கடல் எங்கும்,
இருளிலும் ஒளியிலும்
எழுவதும் வடிவதுமாய்ச்
சென்றது காலத்தின் வெள்ளம்.

பாதையின் இருபுறம்
வண்ணங் குலவும் மலர்கள் திரளாய்ச்
சென்றன மெல்லடி வைத்தே.
மரணக் கிண்கிணி ஒலித்து
ஆயிரம் காலாய்க் கட்டுக்கடங்காத
உயிரின் பெருக்கும் ஓடியது.
புரியாததோர் சுருதியின் வசமாய்
தொலைவில் இன்னும் தொலைவை நோக்கி
வழிப்பித்து ஏறி விரைந்தேன், உன்னை விட்டு.

அவ்வழியினின்று இறங்கி
நின்ற இடத்திலேயே
நீ அசையாமல் நிற்கின்றாய்.

இந்தப் புல், இப் புழுதி
அந்தத் தாரகை, ஞாயிறு, திங்கள்
இவற்றின் மறைவில் நிற்கும் நீ
ஓவியமா, வெறும் ஓவியமா?

என்ன பிதற்றுகின்றான் கவிஞன்!
நீ ஓவியந்தானோ?
இல்லை, இல்லை, நீ வெறும் ஓவியம் அல்லை;
அசையாக் கீற்றினில் சிறைப்பட்டே
ஒலியின்றி விம்முகிறாய் என்று உரைத்தவர் யார்?
இந்த ஆறு தன் அலையின் விசையினைத் துறக்குமேல்,
இம் முகில் தன் பொன்னிறப் பொலிவை இழுக்குமேல்
அச்சோ, இப்படைப்பின் ஆனந்தம் நின்றிடுமா?
உனது மணிநிறக் கூந்தலின் நிழல்
இவ்வுலகினின்று ஒளிந்திடுமாயின்
அஃது ஒரு நாள் என் கனவிடைச்
சிறு காற்று அலைக்கும் இளந்தளிர் குலவும்
மாதவிக் கொடியின் இன்னிழலாய்த் தோன்றிடுமே.
உன்னை நான் மறந்துவிட்டேனோ?
எனது வாழ்வின் வேரிடை ஊடுருவி
நீ உறைவதை மறந்துவிட்டேனோ?
வேறெங்கோ உள்ளம் படர
வழி நடந்து செல்கின்றேன்.
நான் காணும் பூ எதுவாயினும்
அதனை மறந்திடவில்லை;

தாரகையோ? அதையும் மறந்திடவில்லை.
அவை இம்மூச்சினுக்கோர்
இன்பத்தைப் பயக்கின்றனவே;
மறதியின் சூனியத்தை
இசையால் நிரப்புகின்றன.
அவளை எப்படி மறக்க முடியும்?
அவள்தான் தன்னையே மறந்தாள்.
என் சிந்தனைக் கருவுள் வீற்று
என் இரத்தத்தை அலைக்கின்றாள் அவள்.
இன்று என் கண்முன் நீ இல்லை.
என் கண்மணியுள் இடங் கொண்டாய்.

அதனால் இன்று
பசுமையில் பசுமையதாய்,
நீலத்தில் நீலமதாய்த் திகழ்கின்றாய்!
என் அந்தரங்கம் அனைத்தும்
இரண்டற உன்னுள் கலந்ததுவே!
நானும் அறியேன், எவரும் அறியார் இதனை;
இருப்பினும், எனது பாட்டில்
அதன் சுருதி ஒலிக்கின்றது.
கவிஞன் உளத்தில் வாழும் கவியே நீ;
ஓவியம் அல்லை, வெறும் ஓவியம் அல்லை!

உன்னை ஓர் இளங்காலையில் பெற்றேன்;
பின்னர், ஓர் இரவினில் இழந்தேன்.
அதன் பின்பு, இருளிடையே
கட்புலனுக்கு எட்டாத உன்னை
என்றும் பெறுகின்றேனே!
ஓவியம் அல்லை நீ, வெறும் ஓவியம் அல்லை!

(20 அக்டோபர், 1914) —பலாகா

## 66

# ஷா-ஜஹான்

பாரத மன்ன, ஷா-ஜஹான்! இதை நீ அறிவாய்:
வாழ்வு, இளமை, செல்வம், புகழ் யாவும்
காலப் பெருக்கில் மறைவன;
உன் உள்ளத்தின் வேதனைமட்டும்
நித்தியமாய் இருக்கட்டும்;
இது வேந்தன் செய்த சாதனையாகும்.
அரச வலிமை, இடியேறு போல் கடுமை மிக்கது;
செக்கர் புன்மாலை ஒளியென
அது இருளிடை மறைந்து உறங்கட்டும்.
ஆனால் ஒரு நெடுமூச்சு மட்டும்
என்றும் பொங்கியே,
வானிலே கருணையைப் பொழியட்டும்.
இதுவே உன் மனத்தில் இருந்த அவா.
வயிரம், வைடூரியம், மணி மாணிக்கம் யாவும்
வானவில் வண்ணத்துடன் திசை முடிவில்
ஒரு மாயாஜாலத்தை எழுப்பிடும்;
அது மறைந்தொழியினும் ஒழியட்டும்.
ஆனால் இது ஒன்றுமட்டும்
  என்றும் நிலைக்கட்டும்:
    ஒரு கண்பனித் துளி -
காலத்தின் நெற்றிமிசை
  தூய்மை ஒளி செய்யும்
    இந்தத் தாஜ்மஹல்!
அந்தோ, மனித உள்ளமே!
அடிக்கடி எவரையும் திரும்பி நோக்கத்தான்
    உனக்குப் பொழுது ஏது?
  இல்லை, இல்லைதான்.
வாழ்வின் கடுவிசைப் பெருக்கினில் மிதந்து
  உலகின் கரையோரம் மோதுண்டே
    நீ செல்கின்றாய்!

ஒரு துறையில் சரக்கினை ஏற்றி
  மற்றொரு துறைக்கண் இறக்கி
    வெறும் படகுடன் செல்கின்றாய்.
மந்திரம் போல் தென்றல்
  உன் புதரிடை மெல்ல முனகுகிறது.
    இளவேனிற் குருக்கத்தி மலர்
      பூங்காவின் மடியைக் கணத்தில் நிரப்பியே

மாலை மங்கலில் விடை பெறுகையில்
இதழை உதிர்த்து மண்மிசை இறைத்துவிடுகிறது.

பொழுது எங்கே இருக்கிறது?
மீண்டும் பனி உகும் இரவிலும் இதுவே.
கொடிப் புதரில் அடுக்கு முல்லை வெடிக்கிறது,
பின்பனிப் பருவத்தின் கண்ணீர் தோய்ந்த
களிப்பினைப் பரப்பியே.
அந்தோ, உள்ளமே!
நீ திரட்டியதை
நாள் முடிவில், இரவு இறுதியில்
வழியோரத்தில் எறிந்தே
செல்ல வேண்டி வருகிறது.

பொழுது இல்லை:
பொழுது சிறிதும் இல்லையே.
பெரு வேந்தே,
இதனால் சற்று ஐயம் கொண்டே
உன் இதயம் அழகினில் ஒன்றிடக்
காலத்தின் உளத்தைக்
கவர்ந்திட விரும்பினை.
உருவிலா மறலியின் அழியா அணிகள் இட்டுக்
காலத்தின் கழுத்தினில் என்ன மாலை யெல்லாம் சார்த்தி
அதைப் போற்றி நின்றாய்!

பன்னிரு திங்களும்
அழுது புலம்புவதற்கு ஒழிவே இல்லை.
அதனால், தணியா வேதனையை,
கடினக் கோப்புடைய
நித்திய மௌனமான இந்த வலையிலே
கட்டிப் பிடித்தாய்.

நிலவுபொழி இரவில், அறையின் தனிமையில்,
உன் இனியாளை, மெல்ல நீ அழைக்கும்
செல்வப் பெயரை
இங்கு எவர் செவியிலும்
ஒலிக்கச் செய்துவிட்டாயே!
அழகின் மலர்கள் மலிந்த
அமைதி நிலவும் இப்பாறை வெண்மையில்
காதலின் உருக்கம் தரும் மென்மை
இதழ் விரிக்கிறது.

வேந்தர்வேந்தே! கவிஞனே!
இது உன் இதயத்தில் எழுந்த ஓவியம்;
இது உன் புதிய மேகதூதம்;
அபூர்வமான, அற்புதச்
சந்தப் பாட்டு இது.

அருணச் செவ்வொளியிலும்,
புன்கண் மாலையில் திசைமுடிவில் மூச்சுவிடும் துயரிலும்,
முழுநிலவில் மறைந்துகொள்ளும்
சாமேலி மலரின் எழில் பூரிப்பிலும்
கலந்து போன அக்காதலியை,
மொழிக்கு எட்டாத ஒரு தொன்மைக் கரைதனில்
கண்கள் தேடி அலைந்து ஏக்கத்துடன்
இந்த இடத்தை நோக்கிச் செல்கின்றன.

உன்னுடைய அழகுத்தூதுவன்
யுகந்தோறும் காலக் காவலனை மீறி,
மொழிக்கு அடங்கா இச்செய்தியை ஏந்திச் சென்றான்:
'மறவேன், மறவேன், மறவேன், காதலியே'.

நீ போய்விட்டாய்,
பேரரசே—
உனது கொற்றமும் சொப்பனம்போல் மறைந்தது;
உன் அரியணையும் இற்றது;
உனது படையினர் நினைவு - எவர் காலடி தீண்டி
இவ்வையமே நடுங்கிற்றோ,
அவர்களது நினைவு - இன்று காற்றில் கலந்து
தில்லித் தெருப் புழுதிமேல் பறந்து சென்றது காண்!

அந்நாள் சிறை புகுந்தவரின் பாட்டு
இன்று கேட்கவில்லை;
யமுனை அலையோசையுடன் இணைந்திடும்
அந்த 'நகபத்' மேளமும் இன்று முழங்கவில்லை.
உனது நகர அரம்பையரின் சதங்கை யொலி,
இடிந்த மாளிகை மூலையில் மரித்தொழிந்து
சிள்வண்டின் ஒலியாய்
இரவு ஆகாயத்தை விம்மச் செய்கிறது.
ஆனால் உன்னுடைய விசித்திரக் காவியத் தூது
சிறிதும் சளைக்காமல் நிலவுகிறது.
எழுவதும் அழிவதுமான அரசுகளை
அது பொருட்படுத்தவில்லை.

வாழ்வு சாவின் ஏற்ற இறக்கத்தைத்
துளியும் இலட்சியம் செய்யவில்லை;
ஒரே தொனியில், ஊழிதோறும்
பிரிவாற்ருது பாடுகிறது;
'மறவேன், மறவேன், மறவேன் காதலியே.''

பொய்யான பேச்சு! யார் சொன்னது,
மறக்கவில்லை என்று?
யார் சொன்னதடா, நினைவின் கதவு
திறக்கவில்லை என்று?
தொன்மையின் அத்தமன இருட்டதனை
இன்றுமா உன் இதயத்துள் அடக்கி வைத்துள்ளாய்?
மறதியின் திறந்த வாயில் வழியே
அது இன்று வெளியே வரவில்லையா?
சமாதி ஓரிடமே என்றும் அசையாது உறைவது;
வையகத்தின் புழுதிமேல் நிற்கும் அது,
நினைவின் போர்வைக்குள் மரணத்தை மூடிக் காத்திடும்;
வாழ்வினை யாரால் கட்டிப் பிடிக்க முடியும்?
வானத்துச் சுடர்கள் எல்லாம்
அதைக் கூவி அழைக்கின்றனவே!
அதன் அழைப்பு வானம் எங்கும்,
புதுப் புது உதய வரையில் தோன்றும்
ஒளியிலும் பரவிச் செல்கின்றது.
நினைவின் முடிப்பு இற்று,
கட்டுக்கடங்காமல் வியனுலகெங்கும்
அதன் புகழ் ஓடுகிறது.

அரசே, எந்த நாளிலும் எந்த வல்லரசாலும்
உன்னை வளைத்திட முடியவில்லை;
கடல்சூழ்ந்த இந்த மேதினி, சக்கரவர்த்தியே,
உனது புகழுக்குப் போதிய இடமன்று;
ஆகவே, இத்தரணியை
உன் வாழ்க்கை விழா முடிவுற்றதும்
மண்பாண்டமென உதறிவிட்டுச்
சென்றுய் நீ!
நீ எழுப்பிய புகழினும் மேலானவன் நீ:
ஆதலால், உன் வாழ்க்கைத் தேர்,
உனது புகழினையும் பின்னுல் தள்ளிச்
செல்கிறது அடிக்கடி.

ஆதலின், உன் அடையாளம்
இங்கு உளதே தவிர, நீ இங்கு இல்லை.
முன் செல்லவும், முன்னே செலுத்தவும்
எந்தக் காதலுக்குத் தெரியாதோ,
எந்தக் காதல் வழியால்
உன் சிங்காதனத்தை நீ பெற்றனையோ,
அதன் கேளிக்கை, பேச்சு யாவும்
தெருப்புழுதியென உன் காலில் படிந்திருக்கின்றன.
ஆதலால், அதைப் புழுதியில் கிடத்திச் சென்றாய்.
உன் காலில் கிடந்த அந்தத் தூசில்,
உன் இதயத்திலிருந்து எழுந்த
ஒரு காற்றின் விசையில்
திடுமெனப் பறந்து வந்த அவ்வித்து ஒன்றே
வாழ்வின் வாடற்பூவிலிருந்து நழுவியதாகும்.
நீ தொலைவில் சென்றுவிட்டாய்.
அந்த வித்து அழியாக் குருத்தாகி
கம்பீரக் குரல் எடுத்தே பாடுகிறது:
நெடுந்தூரம் சென்றிடினும்
அந்த வழிப்போக்கனைக் காணவில்லை;
காதலியால் அவனைக் கட்டிப் பிடிக்க முடியவில்லை.
அரச வாழ்வும் அவன் செல்ல வழி விட்டது:
மலையோ, கடலோ அவன் வழியை மறித்திடவில்லை:
இன்று அவனுடைய தேர்
இரவின் குரலைக் கேட்டு
விண்மீன் மீட்டும் இசையினை நோக்கியே
வைகறையின் பொன் வாயிலுக்கு விரைகிறது,
ஆதலால், அந்த நினைவில் தோய்ந்து
நான் இங்கு நிற்கின்றேன்.
என் வேதனைச் சுமையை நீக்க வல்லவன்
நீ!"

(31 அக்டோபர், 1948) —பலாகா

## 67

# சலனப் பிரபஞ்சம்

மாபெரும் ஆறே!
காட்சிக்கரியது, ஒலியற்றது உன் ஓட்டம்;
இடையறுது என்றும் விரைவது உன் நீர்:
உனது உருவிலா விசையால்
வெற்றுப் பாழ் துடித்துச் சிலிர்க்கிறது.
பொருள் காணுத உனது பெருக்கின்
கடுந் தாக்குதலால்,
நுரைக்குவை போல் தோன்றிடுமே பொருள் உலகு!
இருளினின்று ஒளியின் தீவிரச் சுடர் தெறித்தே,
வண்ண நீத்தத்தினில் மிதந்து
சுற்றிச் சுழலமிட்டு
அண்டத்தின் ஒவ்வொரு புரையிலும்
ஞாயிறு திங்கள் தாரகை யாவும்
நீர்க்குமிழி என மறைகின்றனவே.
ஏ பைரவி, பற்றற்றவளே!
குறிக்கோள் இன்றி நீ விரைந்திடும் சந்தம்
ஒலிக்கு அடங்காத நாதமாகும்:
எல்லையற்ற ஒரு தொலைவு உனக்கு,
என்றும் எதிரொலி தருகின்றதா?
எதனையும் அழித்திடும் அக்காதல் வெறியால்
நீ வீட்டைத் துறந்தாயே!
மயலுற்று நீ குறியிடம் செல்லும் இவ்விரவில்
உன் மார்பின் ஆரம் ஊசலாடித்
தாரகை மணிகளைச் சிந்திடுமே;
வெற்றுப் பாழினை இருளாக்கி,
உனது விரிகூந்தல் பறக்கிறது;
மின் அலையெனப் பாய்கிறது;
புள்தளிர் அசைவினில்,
காடுகள் எங்கும்
சலசலத்திடும் இலைக்குவையில்
உன் ஆடையின் திரைகள் புரண்டிடுமே;

உனது பருவப் புட்டிலிலிருந்து
மௌவல், சம்பகம், மகிழம், பாதிரி போன்ற
பூக்கள் உதிர்ந்திடுமே வழியெங்கும்;
வெறும் ஓட்டம், வெறும் ஓட்டம்;

விரைவாய் ஓடி மறைகின்றாய்,
திரும்பியும் நோக்காய்;
கையிலுள்ளதை வீசி எறிந்தே செல்கின்றாய்.
எதையும் நீ திரட்டவும் இல்லை;
வைத்துக்கொள்ளவும் இல்லை.
துயருமில்லை, அச்சமும் இல்லை உனக்கு.
வழி நடக்கும் களிப்பினில், வழி உணவையும்
வீண் ஆக்குகின்றாய் நீ.
நீ நிறைவாகிடும் நேரம்
உனது என்பது எதுவும் இல்லை.
அதனால், என்றும் நீ தூயவள்.
உனது இணையடி தீண்டி
இவ்வையத்துத் துகள் யாவும்
தம் இழிவை மறந்திடுமே.
ஒவ்வொரு கணமும்
பிராணமாய்ப் பரிணமித்து
மரணம் பளிச்சிடுகிறது;
சிறிது பொழுதாவது அலுப்புற்றே
நீ நிற்பாயேல்,
மலையெனக் குவிந்தே
படைப்பின் பொருள்கள்
இவ்வகிலத்தைச் சேறாக்கிடுமே.
கூனும், குறளும், ஊமையும், செவிடும்
உறுப்பிலா முண்டமும்,
அச்சம் விளைத்திடும் தடங்கல் யாவும்
பாதையில் அடைத்து நின்றிடுமே;
அணுவினும் அணுக்குள் தம் பளுவால்
விகாரக் குவையாகி,
வானத்தின் உட்கருவையே நசுக்கிடுமே.

ஒப்பற்ற நடிகையே,
ஓரிடம் நில்லாது விரையும் ஆரணங்கே,
புலனுக்கெட்டாப் பேரழகியே!
உனது நடனத்தின் நீர் ஓட்டம்
நித்தமும் இவ்வகிலத்தின் உயிர்களை,
மரணப் புனலாட்டி மாசு துலக்கிடுமே.
முடிவிலாத் தூயநீலம் வானமெங்கும் படர்ந்திடுமே.
கவிஞனே! இன்று யார் உனக்கு இந்த மயல் எழுப்பினர்?
உலகினை ஒலிசெய் மேகலையென அணிந்து

நோக்கின்றி எங்கும் நடமாடும் இவளேதான்!
உனது நாடியிலே சலன வேகம் துடிக்கிறது;
படபடக்கிறது உனது மார்பு;
யாருமே அறியார் இதனை.
இன்று உன் இரத்தத்தினில் கடல் அலையின் கொந்தளிப்பு;
கானகத்தின் ஆகுலம் தொனிக்கிறது.
அப்பழஞ் செய்தி
நினைவுக்கு வருகிறது இன்று;
நழுவி நழுவிப்
பையப் பைய
உருவங்கள் பல எடுத்து
உயிர்கள் பலவாகிப்
பல்லூழி இடையே பெருகி வந்துள்ளேன்;
இரவும், பகலும்
கையில் கிட்டியதைப்
பரிசாக வழங்கி
ஒவ்வொன்றுய்த் துறந்து
பாட்டுக்கள் பாடியே வந்தேன்.
அதோ காண்பாய், அந்நீரோட்டம் கொந்தளிப்பதை.
புணையும் செல்லப் பறக்கிறது.

நீ கரையில் திரட்டியவற்றைக் கரையிலேயே கிடத்திடு;
திரும்பிப் பாராதே;
உன் முன் ஒலிக்கும் அக்குரல்
அப் பெருவெள்ளத்திடைப்
பின்னுல் எழும் பேரிரைச்சலைவிட்டு
ஆழங் காணு இருள் வழியே
கரையிலா ஒளியை நோக்கி
உன்னை அழைத்துச் செல்லட்டும்.

(28 டிசம்பர், 1914) —பலாகா

## 68

## பரிசு

அன்பனே, இன்று இவ்வைகறையில்
என் கையால்
என்ன பரிசு உனக்குத் தருவது?
வைகறையின் பாட்டா?
வைகறை, கதிரவனின் வெம்மையால்
தன் காம்பிலேயே வதங்கி விடுகிறது;
களைப்புற்ற என் பாட்டும்
மறைந்து விடுகிறது.
அன்பனே, பகல் முடிவில் என் வாயிலில் வந்து
நீ விரும்பும் பொருள்தான் என்ன?
நான் எதைத் தருவது உனக்கு?
அந்தியில் ஏற்றும் அகல் விளக்கையோ?
ஓசையடங்கிய வீட்டின் மூலையில் உள்ள
[illegible]வ்
நீ போகும் வழியில், பலர்
எடுத்துச் செல்லவா விரும்புகின்றாய்?
ஐயோ, அது வழியிடையே
காற்றில் அவிந்திடுமே!
உனக்குப் பரிசு வழங்கத்தான்
எனக்கென்ன, தகுதி இருக்கிறதா?
நான் தருவது மலராயினும்,
கழுத்தில் அணியும் ஆரமாயினும்
அதன் சுமையைத்தான் பொறுப்பாயோ?
என்றாவது அது உலர்ந்தோ,
மங்கி அறுந்தோ போகையில்
நானாக உன் கையில் தருவதை நழுவச் செய்யும்
உன் விரல்கள்தாம் மறந்திடுமோ?
புழுதியுடன் புழுதியாய்
அது கலந்துவிடுமோ இறுதியில்?
இதைவிடக் கணமாகிலும்
ஓய்வு வரும்பொழுது,
வசந்த காலத்தில் வேறு நினைவாய்
என் பூங்காவில் நீ உலாவும்பொழுது
நீ அறியாததோர் இன்மணம்
மெல்லக் கமழ்ந்திடுமே.

அதனால் மெய் சிலிர்த்து
நீ நின்றிடுவாய்!
வழியிழந்த அப்பரிசே
உனக்கு உரியதாகும்.
என் பூங்காவின் மருங்கே நீ உலாவுகையில்
உன் கண்களின் மயக்கம் தோன்றும்;
அந்தி மாலையின் கூந்தலை விட்டு நழுவிய
ஒரு வண்ண ஒளி,
உரைகல்லெனக் கனவினைத் தீண்டித்
துடிதுடித்திடுமே.
அவ்வொளியே, யாரும் அறியா அப்பரிசே
உனக்கு உரியதாகும்.
சிறப்புடைய என் செல்வமோ,
மின்னிட்டுக் கணத்தினில் மறைந்திடுமே;
தன் பெயரினைச் சொல்லாமல்,
தன் இசையால் அது செல்லும் வழியைச்
சிலிர்த்திடச் செய்து
சிலம்பொலியெனச் சென்றிடுமே!
அதன் வழியோ புரியாது;
கையும் அதை எட்டாது;
குரலும் அதை அணுகாது.
நண்பனே, அவ்விடத்தினின்றும் பெறுவதையே
கொள்வாய்!
நீ அறியாமலே, நீ விரும்பாமலே
அப்பரிசு உனக்கு உரியதாகும்.
நான் உனக்குத் தருவது என்னவோ சிறு பரிசே;
அது பூவாயினும் என் பாட்டாயினும் என்ன!

(25 டிசம்பர், 1914) —பலாகா

## 69

# விசாரணை

என் அழகனே,
வழியே நடந்து செல்லுகையில்
அக்களிப்பினிலே வெறி மூண்டு
உனது மெய்யினைப்
புழுதியாக்கும் அவர்களைக் காணுந்தோறும்
எனதுள்ளம்
துடிக்கின்றதே, ஐயோ!
'என் அழகனே!
இன்று நீ உன் நீதி தண்டத்தை ஏந்தி
இந்த அநீதியை விசாரித்திடு' என்றே
அழுது கூறுகின்றேன்.

பின்னர், நான் காணும்
ஈதென்ன?
உன் நீதி மன்றத்து வாயில் திறந்திருக்கிறது;
உனது நீதி விசாரணை என்றும் நடந்து வருகிறது.
காலையின் ஒளி மெல்லவே
குற்றத்தால் சிவந்த அவர்கள் கண்கள்மீது பரவுகிறது.
தூய வெண் காட்டு மல்லிகையின் நறுமை,
ஆற்ருமையால் எழும்
வெம்மை மூச்சினைத் தொடுகிறது.
அந்தியெனும் தவமகள் கொளுத்திய
ஏழு முனிவரின் சுடர்மாலை,
நீள் இரவெல்லாம் அவர்களது வெறியாடலை
நோக்கியே ஒளிர்கிறது, விண்மிசை -
அழகனே, உன் மேனியில்
புழுதி எழுப்பச் செய்யும் அவர்களை நோக்கித்தான்.

அழகனே,
உனது நீதி மன்றம்,
மலர் வனத்திலும்,
புண்ணியம் தோய் மெல்லிய காற்றினிலும்,
புற்செறிவிடையே பூச்சியின் சிறகொலியிலும்,
இளவேனிற் புள்ளின் குரலிலும்,
அலை முத்தமிடும் இளந்தளிர் அசைவிலும்
பரவியுள்ளது எங்கணும்.

என் காதலனே,
அவர்கள் இரக்கமில்லாக் கொடியர்;
விலக்கற்கரிது அவர்களது ஆவேசம்.
பதுங்கித் திரியும் அவர்கள்
தம் பச்சை எண்ணத்தை நிறைவேற்ற
உன் அணிகலனைக் களவாடுவர்.
அவர்கள் இழைக்கும் தாக்குதல்
காதலை உருக் குலைத்திடுகையில்
அதைப் பொறுப்பது எங்ஙனம்?
கண்ணீர் பெருக,
'வாளினை ஏந்திடு, என் காதலனே,
மறத்தை விலக்கிடு' என்றே கூவி உன்னை அழைக்கின்றேன்.
பின்னர், நான் காண்பது என்ன!
உனது நீதிமன்றந்தான் எங்கே?

கொடியரான அவர்கள்மீது
அன்னை சிந்தும் அன்புக் கண்ணீர் விழுகிறது.
அவர்கள் எதிர்த்து அவள் மார்பில் எறிந்த
அந்த வேலின் புண் ஆறிவிடுமென்றே
எல்லையற்ற நம்பிக்கை என் காதலருக்கு.

என் காதலனே, உன் நீதிமன்றம்
கண் துயிலா அன்பின் மௌன வேதனையில்,
பத்தினிப் பெண்ணின் புனிதக் கற்பதனில்,
உயிர் நண்பன் சிந்திடும் குருதிப் பெருக்கில்,
காதலால் கசிந்து உருகி
அன்பன் வரும் வழி நோக்கிப்
பிரிவால் வாடுவோர் நீந்தும்
இரவுக் கடலில்,
கண்ணீர் இறைத்து உள்ளம் இளகி
ஊடல் நீங்கும் வைகறையில்
என்றும் நிலவிடுமே!

ஏ ருத்திரனே,
உனது தோரண வாயிலைக் கடந்து
ஆற்றுமை மிக்கவரும் அறிவு மயங்கியவரும்
பதுங்கி வருவோரும் அழைத்திடாமலே
உனது கருவூலத்தைக் கன்னமிட்டுக்
கவர்கின்றனரே;
அக்களவின் பெருஞ் சுமை

ஒவ்வொரு நிமிடமும்,
அவர்கள் உள்ளத்தை அழுத்திடுமே!
அதை இறக்கிட அவர்களால் ஆகாது.
அழுது உன்னை நான் அடிக்கடி
கூவி அழைக்கின்றேன்:
'அவர்களை மன்னித்துவிடு, என் ருத்திரனே!'
பெருவளியின் விசையுடன்
அந்த அருள் இறங்குவதைக் காண்கின்றேன்.
அக்கடும்புயலில், புழுதியிடை
அவர்கள் வீழ்கின்றனரே.
களவாடிய பொருளின் பெருஞ்சுமை
துண்டாகி, அவ்வளியின் விசையில்
அடித்துச் செல்கின்றது எங்கோ!

என் ருத்திரனே,
மன்னித்திடும் உனது பேரருள்
சீறிடும் இடியேற்றின் வெஞ்சுடரில்,
அத்தமனத்தில் காணும் ஊழிச் செந்நிறத்தில்,
குருதிப் பெயலில்,
திடுமென முரணிய வெம்போர் அதிர்ச்சியில்
நிலவிடுமே.

(27 டிசம்பர், 1914) —பலாகா

## 70

## குருக்கத்தி மலர்

பல்லாண்டின் தவப் பயனாய் இந்தப் பார்மிசை
பூத்தது இன்று குருக்கத்தி மலர் ஒன்று.
பல்லூழி எவரும் காணாது இயற்கையின் மடியில்
மறைந்தே இருந்தது இவ்வின்பத்தின் ஓவியம்.
'என் கனவிலும், தொலைவான ஒரு யுகத்தில் இதுபோல்
இளவேனிற் காவின் ஒரு மூலையிலே, ஒரு பொழுதாகிலும்
மென்முகம் காட்டி, முறுவல் செய்து
மலர்ந்திடுமோ இம்மலர்?' என்றே
ஆசையொன்று உலவுகிறது, உள்ளத்தின் ஆழத்தில்.

10 ஜனவரி, 1915) —பலாகா

## 71

# காதலின் பரிசம்

ஏ மாநிலமே!
உன்னிடம் நான் காதல் கொள்ளாமல் இருந்தவரையில்
தேடித் தேடி அலைந்தும் உனது ஒளி
அதன் செல்வம் அனைத்தும் பெறவில்லை;
அதுவரை, வானகமே, கையில் விளக்குடன்
வெறும் பாழிடையே வழிநோக்கி இருந்தது.
பாட்டிசைத்தே எனது காதல் வந்தது;
காதோடு காது என்ன உரைத்ததோ! உன் கழுத்தினில்
தன் கழுத்து மாலையை அணிவித்தது.
மயங்கிய கண்களால் மெல்ல நகைத்து,
உன்னிடம் ஏதோ மறைவாய்க் கையுறை தந்தது;
உன் இதய அந்தரங்கத்துள்
அது வானிடைத் தாரகை மாலையாய்
எந்நாளும் ஒளிர்ந்திடுமே.

(12 ஜனவரி, 1915) —பலாகா

## 72

# இரு நாரியர்

படைப்பின் தொன்மையில் என்றோ ஒரு நாள்
கடைந்தெழு கடலிடைத் தோன்றினர் இருவர்;
பேரழகியாம் ஊர்வசி ஒருத்தி-
அகிலமே காதல்கொள் அரசி;
வானவர் உலகின் எழில்மிகு தெய்வமாது;
நலம் தரு திருமகள், மற்றவள்;
அகிலம் போற்றும் அன்னை;
பொன்னுலகமர் கடவுள்.
ஒருத்தி, தவத்தைக் கலைத்தே
இன்பக் கனலின் சாற்றினை
இளவேனில் செப்பினுள் இட்டே,
ரோஜா, முருக்கம்போன்ற சிவப்பூறு
வசந்த ருது மலர்களில் ஏக்கம் தொனிக்க,
அயரா இளமையின் பாட்டால்
உயிரையும் உள்ளந்தனையும் கொள்ளை கொண்டே

இறைத்துச் செல்வாள், இரு கையாலும்.
மற்றவளோ, கண்பனித் துளியில்
இனிமை நினைவினைத் தோய்த்துப்
பொன்னவிர் ஏமந்த ருதுவில்,
வாழ்வும் சாவும் இணைந்திடும்
புனிதக் கூடலின் கரைமிசை
அலகிலாப் பூசனை திகழ் கோயிலிலே
அமைதியின் நிறைவினைக் கொணர்வாள்.
உலகு அனைத்திலும் ஆசியைப் பரப்பி
அசைவிலாச் செவ்வி கொள்
மென்னகை இன்னமுதனைக் கொணர்வாள்.

*(3 பிப்ரவரி, 1915)* —பலாகா

## 73

# கொக்கு

மாலைச் செவ்வொளியில் மின்னிடும் ஜிலம் ஆற்றின்
வளைந்தோடும் நீர், இருளில் மங்கியது -
உறையுள் இட்ட வளைவாள் போலே?
இருள்செறி வானாற்றில் மிதந்திடும்
விண் சுடர் மலர்களுடன்
பகலெனும் பெருக்கு ஓய்ந்து இரவு வெள்ளம் பரந்தது.
கருமைபடர் மலைச் சரிவுகளில்
நெருங்கியே நின்றன தேவதாரு மரங்கள்.
படைப்பு, தன் கனவில் எதையோ பேச விரும்பித்
தெளிவுடன் அதைக் கூற இயலாததே போல்
ஒளிக்குவை ஒன்று அவ்விருளில் குமுறியது.

அவ்வேளை, வானிலே ஒலியின் மின்வெட்டு,
பரந்த வெளியிலே கணப்பொழுது விரைந்து
தொலைவில் - நெடுந்தொலைவில் - மறைவது
என் செவியில் பாய்ந்தது!
அன்னப் பறவைகளே!
கடுவளி என்னும் கள் பருகி,
வெறிகொள் உம் சிறகுகள்
உவகையின் சிரிப்பலை எழுப்பி,
விசும்பெங்கும் வியப்பினை மூட்டிச் சென்றனவே;

ஒலி உருவான அரம்பையராம் நீங்கள்
மோனத்தின் தவத்தைக் கலைத்து விரைந்தீர்கள்;
அதனால்
இருளில் மூழ்கிய மலை வரிசையும்
தேவதாருக் கடிபொழிலும் சிலிர்த்திட்டன;
இந்தச் சிறகின் குரல்
அசையா இயற்கையின் உளத்தில்
விசையின் துடிப்பை இமைப்பொழுது
எழுப்பியதென என்னுள் உணர்ந்தேன்.
வானில் திரியும் வெண்முகிலாய் மாற
ஏங்கியது மாமலை.
மண்சிறையினின்று மீண்டு வெளியேற
சிறகடித்தது மரமும்.
இவ்வொலி வரைந்த கீற்று, சிக்கெனத் தோன்றி
ஒய்யெனத் திசை முடிவில் மறைந்ததுவே.
மாலைப் பொழுதின் சொப்பனம் நீங்கி
அந்த நெடுந்தொலைவை நோக்கிச் செல்ல
எனது உள்ளமும் தாவியது.
ஏ பறவைத் துறவிகளே!
மலர்தலை உலகின் மனத்தினுள்ளும்
துன்பக்குரல் ஒன்று,
'இங்கில்லை, இங்கில்லை; வேறெங்கோ!' என இயம்பியது காண்!
ஏ அன்னப் பறவைகளே!
இப் பெருமோனத்தின் மூடி
இற்றது என் மட்டில், இந்த இரவில்.
வானம், நீர், வையம் எங்கும் சிறகுகள் பல
அசைந்திடும் பேரொலி கேட்டது எனக்கு;
பசும்புல் மண்ணில் தளிர்ச் சிறகை அடிக்கிறது;
வித்தெனும் பறவை எத்தனை இம்மண்ணுள்
சிறகு முளைத்தெழுகின்றனவோ, யார் அறிவார்?
இம்மலைத் தொகுதியும், இம்மரக்காடும்
விடுபட்டே, தீவினின்று தீவுக்கு,
அறிந்த ஒன்றிலிருந்து அறியா ஒன்றினை நோக்கிப்
பாய்வதை இன்று காண்கின்றேன்.
விண்மீன் இமைப்பிலும் அழும் குரல் ஒன்று
ஒளியைக் காண இருளிடை விம்முகிறது.
தெளிவிலாப் பழமையிலிருந்து
தெளிவாகாத ஊழி இறுதிவரை
இவ்வழியே, யாத்திரிகர்களின் பல்வேறு குரல்கள்

எத்தனைதாம் விரைந்து சென்றனவோ?
அல்லும் பகலுமாய்த் தம் இடம் துறந்து,
உலகின் மூலைமுடுக்கெல்லாம் விரையும்
பறவைகளுடன் இணைந்தே
மோனத்தை அலப்பும் இச்சிறகிசையுடன்.
'இங்கில்லை' வேறு எங்கோ, எங்கேயோ....!' என்றே
எனது உள்ளமும் பாடுகிறது.

(அக்டோபர்-நவம்பர், 1915) —பலாகா

## 74

## விடுதலை

வைத்தியர் சொன்னால் சொல்லட்டும்:
தலைப்புறமாக உள்ள சன்னலைத் திறந்துவிடு;
திறந்துவிடு! காற்று உடலில் படட்டும்.
மருந்தா? நான் மருந்து உண்டதெல்லாம் போதும்!
கசப்பும் துவர்ப்புமாய் எத்தனை வகை மருந்துகள்
நான் இந்த வாழ்வில் உட்கொண்டேன்!
நான் தவறாமல், ஒரு கணம் விடாமல்
உயிர் வைத்திருப்பதே ஒரு நோயாகும்:
எத்தனையோ வைத்தியர்களின் மருந்துகளைப் பார்த்தாயிற்று!
பத்தியம் சற்றுப் பிசகினாலோ கடுமையான அநுபவமே.
இது நல்லது, அது ஆகாது - இப்படி யார்
என்ன சொன்னாலும் அதன்படி நடந்துகொண்டேன்:
நிமிர்ந்து பாராமல் முட்டாக்கைத் தலையில் இழுத்துப்
போர்த்து உங்களுடைய வீட்டில்
இருபத்திரண்டு ஆண்டுகளைக் கழித்துவிட்டேன்;
அதனால், நெருங்கியவர், மற்றவர் இப்படி அனைவருமே,
'நல்ல மாதிரியான பெண், இலட்சுமி என்றெல்லாம்'
என்னைப் பாராட்டிப் பேசினர்;

இந்தக் குடும்பத்தில், ஒன்பது வயதுச் சிறுமியாக
இருக்கையில் வந்தேன் நான்;
இவர்களிடையே நீண்ட நாள் பழகி
நாலு பேருடைய விருப்புக்களைச் சுமந்து
இவ்வாழ்வினை மெல்ல இழுத்துக்கொண்டே
கடைசியில் இன்று வழியோரத்துக்கு வந்துவிட்டேன்;
சுக துக்கத்தைப்பற்றி நினைக்கத்தான்
சற்றே பொழுதேது எனக்கு?

இவ்வாழ்வில் நான் கண்டதுபற்றி-அது நன்மையோ தீமையோ
அதைப் பற்றியெல்லாம்-
சிந்திக்கத்தான் முடிந்ததா?

அலுத்துப் போன ஒரே சந்தத்தில்
உழைப்பெனும் சகடின்கீழ்ச் சுழன்றேன்.
இருபத்திரண்டாண்டுகள் சம்சாரச் சகட்டில் கட்டுண்டே
இச்சுழற்சியில் கண்ணவிந்து நின்றேன் நான்.
நான் யாரென்பதையும், என் வரைக்கும் இப்பரந்த உலகு
எத்தகையது என்பதையும் நான் அறியேன்!
காலமெனும் யாழினிலே மனிதர் மொழிதான்
எவ்வாறு ஒலித்திடுமென்பதை நான் கேட்டதில்லை.
இதுமட்டுமே தெரியும்:
சமைப்பது உண்பது, உண்பது சமைப்பது-
இருபத்திரண்டாண்டுகள் இவ்வாறு சுழன்றன
சம்சாரச் சகட்டில்.

நின்று விடும்போல் தோன்றுகிறது இச்சகடம்.
நின்று போகட்டுமே! இன்னும் எதற்கு மருந்து?
இருபத்திரண்டாண்டுகள் மணங் கமழ் தென்றல்
பொழிலிடைப் பாய்ந்தே, நீரிலும் நிலத்திலும்
ஊசல் அலைப்புடன் வந்தது;
கதவைத் திற, கதவைத் திறவாய் என்று கூவியது.
அது எப்படி வருமோ போகுமோ,
அதுகூட எனக்குத் தெரியாது?

என் உள்ளத்தை
அது தட்டி எழுப்பியிருக்கலாம்.
இதனால், வீட்டு வேலையிடையே திடுமென நான்
ஏதாவது பிசகு செய்திருக்கலாம்.
என் முற்பிறவியின் துன்பம்
என் இதயத்தை வாட்டியிருக்கலாம்.
காரணம் மறந்த இன்பதுன்பத்தினிடையே
இளவேனில் தோன்றும் பங்குனியில்
யாருடைய காலடி அரவம் கேட்கவோ
என் உயிர் துடித்தும் இருக்கலாம்.
அலுவல் முடிந்து நீ திரும்பி வருவாய், மாலை நேரம்;
உடனே சொக்கட்டான் ஆட
எங்கேயாவது போய்விடுவாய்.

அது இருக்கட்டும், ஒரு புறம்;
இன்று என் வாழ்வில் கணப் பொழுதாகிலும்
இவ்வேதனை யாவும் என் நெஞ்சில் வருவானேன்?
முதன்முதல் என் வாழ்வில், இன்றே
இருபத்திரண்டாண்டுகளுக்குப் பின்னர்
என் அகத்தே தலைகாட்டியது வசந்த காலம்.
சன்னலைத் திறந்து வானினை நோக்கும்பொழுது
இருந்து இருந்து ஆனந்தத்தால்
இன்று என் உயிர் துள்ளுகிறது.

நான் பெண்; நான் பாக்கியம் செய்தவள்.
எனது வாழ்வின் சுருதியுடன்
கண்படை இராத இந்தத் திங்கள்,
நிலவெனும் வீணையை மீட்டுகிறது.
என்னை இன்றி இந்த அந்தித் தாரகை எழுவதும்
பொய்யாகும்.
காட்டில் மலர்கள் மெல்லிதழ் விரிவதும்
பொய்யாகும்.

இருபத்திரண்டாண்டுகள்,
முடிவிலா ஒரு சிறையுள் கிடப்பது போல்
தோன்றுகிறது எனக்கு.
நான் வருந்துவது இதன் பொருட்டே அன்று.
மனச் சோர்வுடன் இந்நாட்களைக் கழித்தேன்.
நான் பிழைத்தெழுந்தாலும்
இப்படியே கழித்திடுவேன்.
என்னைப் போல் இலட்சுமி உண்டோ என்றே
என் உறவினர் அத்தனை பேரும் புகழ்ந்தனர்.
அதுவே எனக்குப் போதும்.

இந்த வாழ்வில் இப்படி வீட்டில் ஐந்து பேர்
என்னை உயர்த்திப் பேசுவது,
என்னைப் பிணைக்கும் இத்தளையினை அறுத்திடுமே.
வாழ்வும் சாவும் எனக்கு ஒன்றாயின.
இம்மாபெருஞ் சங்கமத்தில், இந்த ஆழ்கடலுள்
நீரின் நுரையென இவ்வறை, உக்கிராணம் யாவும்
எங்கோ மறைந்து போகும்.
இத்தனை நாட்களுக்குப் பிறகே முதன்முதல்
இவ்விசால வானந்தனில்
என் மணமுரசம் கொட்டுவதைக்
கேட்கின்றேன்.

இச்சிறு இருபத்திரண்டாண்டுகள்,
இவ்வறையின் புழுதிபோல் கிடக்கட்டும்.
எமன், அந்தப் பூம்பள்ளிக்கு அழைக்கிறான் என்னை;
அதோ, வாயிலில் அவன் வந்து நிற்கிறான்.
அவன், என்னை ஆளும் பிரபு அல்ல.
அவன், என்னைச் சற்றும் அசட்டை செய்யான்.
என்னையே அவன் கருணையால் நோக்குகிறான்;
என் உள்ளத்தில் அவ்வினிமை குமிழ்க்கிறது.
வானில் சுடரும் கிரக நட்சத்திரங்களுக்கிடையே
கண்ணிமைக்காமல் என்னையே நோக்குகிறான்.
இனிமை உடையது இவ்வுலகு; நான் பெண்ணாய்ப் பிறந்ததும்
இனிமை உடையதே.
இனிமை தருவது மரணம்;
எங்கும் உலவிடும் ஆண்டியே!
திறந்திடு; வாசலைத் திறந்திடு.
வீண்போகிய இந்த இருபத்திரண்டாண்டுகளாய்
நான் வாடிய இந்த இருட்சிறையிலிருந்து
என்னை அக்கரைக்குக் கடத்திடு.

(அக்டோபர், 1918) —பலாதகா

## 75

# தொலைந்து போதல்

என் சிறிய பெண்
கூட்டாளிகள் அழைக்கும் குரல் கேட்டுக்
கீழே இறங்கி வந்தாள் படி வழியே;
இருளுக்கு அஞ்சி நடந்தாள், நின்று நின்று;
கையிலுள்ள விளக்கை மேலாடையால் மறைத்தே
மெதுவாய் நடந்தாள்.

மொட்டை மாடியில் இருந்தேன் நான்;
திரளாய்த் தாரகை ஒளிரும் சித்திரை இரவு.
திடுமென மகளின் அழுகுரல் கேட்கவே,
என்னவோ என்று ஓடினேன் விரைவாய்.
படி வழியே செல்லும்போது, பாதியில்
அவள் கையில் ஏந்திய விளக்கு
காற்றின் விசையால் அவிந்தது.
'என்ன, பாமி?' என்று குரல் தந்தேன்.

அழுதவண்ணம் இருளில் அவள்,
'நான் தொலைந்து போய்விட்டேன்' என்றாள்.

தாரகை மிளிரும் சித்திரை நாள் இரவு;
திரும்பினேன் மாடியில் என் இடத்துக்கே.
வானிடை நோக்கினேன்; ஓர் எண்ணம் வந்தது:
என் பாமியைப் போல் ஒரு மகள்
காற்றில் அணையாமல், கைவிளக்கினை
நீல ஆடையால் மெல்லக் காத்தே
தனியே செல்கின்றாள், வான வழியே.
சட்டென வான்சுடர் அணைந்துவிட்டால்,
'தொலைந்து போய்விட்டேனே' என்று அவளும்
அண்டமே குலுங்கிட அழுவாள் அன்றோ!

(அக்டோபர், 1918) —பலாதகா

## 76

## நினைவு வருகிறது

அம்மாவின் நினைவே வருவதில்லை;
விளையாடப் போகையில், காரணமின்றித்
திடுமென எப்பொழுதாவதுதான் என்னவோ ஓர் இசை
என் காதினில் அன்னையின் செய்தியை முணுமுணுக்கிறது;
என் விளையாட்டிலேயே அது கலந்துவிடுகிறது.
என் தூளியை ஆட்டி, அம்மா இப்படிப் பாடுவாள் போலும்!
அம்மா போய்விட்டாள்; போகையில்
பாட்டினைவிட்டுச் சென்றாள்.

அம்மாவின் நினைவே வரவில்லை எனக்கு.
ஐப்பசி மாதம் இளங் காலை; பவளமல்லிகைச் சோலையில்
பனிதோய்ந்த காற்று அப்பூவின் மணத்துடன் வீசுகையில்,
என் அன்னையின் நினைவு என் மனத்துள் எழுகிறது.
குனிந்து அந்த மலர்களை எடுத்துக் குடலையுள் இடுவாள் அன்றோ!
இந்த அன்னையின் இனிய நினைவு பூசையின் நறுமணமாகியதே!
அம்மாவின் நினைவே வரவில்லை எனக்கு.
என் படுக்கை அறையினில் நான் ஒரு மூலையில் வீற்றுச்
சாளரவழியாய்த் தொலைவில் விரியும் நீலவானை நோக்குவேன்;
கண்ணிமையாமல் அன்னை என்னையே

நோக்குவாள் போன்று தோன்றிடுமே அக்காட்சி.
காலத்திரையிலிருந்து என்னையே கூர்ந்திடும் அப்பார்வையை
வானம் எங்கும் வைத்தே சென்றுள் என் தாய்.
(25 செப்டம்பர், 1921) —சிசு போலாநாத்

77

## தவம் ல்

இளமையின் வேதனைச்சுவை
பொங்கிடும் என் நாட்களை, ஏ காலக்கடவுளே,
தன்னையே மறந்திருக்கும் துறவியே,
வேறு எங்கோ நினைவாய்
மறந்து போனாயோ?

துடித்திடும்
முருக்க மலர்களுடனே
வெற்று வான வெளியின் தாரகை யாவும்
போற்றுவோர் இன்றிப் போயினவோ?
ஐப்பசி மாதம், பெயல் நீங்கிய
மெலிந்த வெண்முகில் ஓடம் ஏறித்
தன் மனம்போல் வீசும் காற்றின் விளையாட்டால்,
கொடிய அலட்சியத்தால்
மறதியின் அக்கரை அடைந்தனவோ?

ஒரு சமயம், அந்த நாட்கள்
உனது செம்மைபடர் சடைக்கற்றையில்
வெண்மையும், இரத்தநிறமும், நீலமும், பசுமையுமான
பல விந்தை மலர்களைக் கொண்டே மாலை சுற்றியது
உன் நினைவில் இல்லையா?

கள்ளம் நிரம்பிய அந்த நாட்கள், பிச்சைக்காரா,
மெல்லச் சிரித்தே
உனது டமருகத்தையும் கோட்டினையும் கவர்ந்தே
உன்னிடம் நூபுரமும் வேய்ங்குழலும் தந்தனவே!

இன்மணம் தாங்காது மெல்ல நகர்ந்திடும்
இளவேனிலின் வெறிதரும் சுவைதனை
உனது குண்டிகையில் நிரப்பி
ஓய்வும் இனிமையும் சேர்ந்த நுகர்வினில் மூழ்கினவே.

அன்று உனது தவம் திடுமென
வெட்ட வெளியில் சருகெனச் சுழன்றடித்துப்
பாட்டொலி கேட்காத பனி மூடிய பாழ்வெளி நோக்கி
வடதிசைச் சென்று மறைந்தது.
உனது தியான மந்திரத்தை,
பூமணத்தால் திசைதப்பிய தென்றலின் குதூகலத்துடன்
வெளிக்கரைக்குக் கொணர்ந்தாய்.
அந்த மந்திரத்தால், செவ்வந்தியும் ஆத்தியும் கனவீரமும்
உன்மத்தமாகி மலர்ந்தனவே;
காட்டகத்து மரங்கள் யாவும்
தம் தளிர்மிசைப் பச்சைக் கனலைக் கொளுத்தினவே.

இளவேனிலின் பெருக்கினில் துறவுக்கோலமெல்லாம்
ஒழிந்தது காண்.
சிக்கு மலிந்த சடைக் கோப்பினுள்,
கங்கையின் கண்ணீர் விசையொலியை
மெய்ம்மறந்து கேட்டனையே!
அன்று உனது பெற்றி யாவும்
புதுப்புது வகையாய்த் தோன்றின காண்.
தன்னுள் தான் மயங்கும் உவகை
பொங்கிய உள்ளத்தினிலே,
உனது உயர்வான எழில் இருக்கும் இடத்தைக்
கண்டுகொண்டாய்.
இவ்வுலகின் பசியைப் போக்கும்
அமுதின் ஒளிமிகு கலயத்தைக்
கையில் ஏந்தினாய்;

அன்று நீ, வெறிமூண்டே, காட்டகந்தோறும்
ஆடித் திரியும்பொழுது,
அக்கூத்தின் தாளத்துக்கேற்ப
நானும் பாக்கள் புனைந்தேன்;
உன் முடிமிசைத் துலங்கும் நிலவொளியிலும்
அழகின் கனவைக் காணும் கண்களிலும்
நித்தியம் புதுமையான ஆடல்களை
எனது நெஞ்சாரக் கண்டேன்.

அழகினில் மறைந்துள்ள உனது குமிழ்ச் சிரிப்பையும்,
நாணத்தால் சிலிர்த்தே வளையும் வடிவின் பாணியையும்
என் மனத்துள் நிறுத்திக்கொண்டேன்;

அன்றைய உண்கலம் இன்று
அதன் நிறைவை இழந்ததோ?
முத்தத்தால் சிவப்பூறும் வளைந்த கீற்றை
அழித்துவிட்டாயோ?
பாடாத இசையும், கண்ணீர்த் தேக்கமும் நிரம்பி
உனது உண்கலம் மன்றினில்
உடைந்து உருண்டு கிடக்கின்றதோ?
உனது தாண்டவக்கூத்தால்
அது துகள் துகளாகியதோ?
மறைந்த அந்நாட்கள்,
ஊதி எறியும் சூறுவளியின் மூச்சால்
கலக்கம் எய்தினவோ?

இல்லை; இல்லை; அந்நாட்கள் மறையவில்லை.
அவற்றைத் திரட்டிக் கண்ணுங் கருத்துமாய்த்
தியானத்தில் ஆழ்ந்திடும் இரவில்
உன் மோனந்தனில் வைத்திடுவாய்.
உன் சடைக்குள் மறைந்துள்ள கங்கை இன்று
அடங்கி ஓடுகிருள்.
உனது நுதலில் பதுங்கிய சந்திரனும் இன்று
அமைதியாய்த் தூங்குகிருன்.
இவ்வாறு உனது வெளித்தோற்றம் இருந்தாலும்
நீ புரியும் அந்தத் திருவிளையாடல்தான் என்னவோ?
திசை எட்டியமட்டும் இருளிடை,
'இல்லையடா இல்லை' என்ற
பெருமூச்சு எழுகிறது:
காலத்தின் உருவெடுத்த ஆயன் நீ;
மாலை நண்ணியதும் கொம்பு ஊதுகிருய்;
பகலெனும் பசுவினம், உன் தொழுவம் நோக்கி
விரைந்து வருகின்றதே.

ஆள் இராத எல்லைக்கு அப்பால்,
கொள்ளிவாயின் ஒளி அசைகிறது.
ஊழிக்கால மேகத்திடை
மின் நெருப்பைக் கக்கும் நாகம்
சீறிப் படமெடுக்கிறது.
வெம்மைத் தவத்தில் திணறியே
இருளில் நிராசையால் துடித்திடும் பொழுதுகள்
அமைதியுற்று வருகின்றன.

இதை நான் அறிவேன்; இந்தத் தவம்
சஞ்சலக் கூத்தின் உவகைப் பெருக்கில் மிதந்து
தன் உன்மத்தத்தின் அழிவினையே
நீள் இரவில் தேடுகிறது.
சிறைப்பட்ட இளமை நாட்கள்
மீண்டும் தளை இற்று எழுகின்றன;
வெறி பொங்கிட உவகை
வெளியே செல்லத் துடித்திடுமே.

புரட்சி மனங்கொண்ட வீர இளைஞன்
முதியவர் ஆட்சியினை அழித்திடவே
இனி அடிக்கடி தோன்றுவான்.
அவனுக்கென்றே நான்
அரியணை அமைக்கின்றேன்.
நான் உரைப்பதும் அவன் குரலே.

தவத்தைக் கலைக்கும் இந்திரன் ஏவிடும்
தூதுவன் நான்;
ஏ பயங்கரத் துறவியே!
வானுலகின் சதிகாரன் நான்;
உன் தவவனத்திற்கு ஒவ்வொரு யுகமும்
வந்து போகும் புலவன் நான்.

தோல்வியைக் காணாத வெற்றி மாலையை
என் தட்டில் ஏந்தி உள்ளேன்.
கண்ணீர் எழுப்பும் என் சந்தத்தினில்
வெறியாடலின் தாளமே ஒலித்திடும்.
என் மலர்கள்தோறும்
வேதனையின் குரலையே கேட்பாய்.
என்பாட்டினை வருத்தியே தளிர்களிடைக்
குதூகலமும் கோலாகலமும் எழுப்பிடுவேன்.

வற்றல் உரி போர்த்த வைராகியே!
உன் சூழ்ச்சி யாவும் தெரியும்;
அழகின் எதிரே நீ உன் தோல்வியை
ஆனந்தத்துடன் ஒப்புக்கொள்ளத்தான் இது செய்கிறாய்
மீண்டும் மீண்டும் ஐங்கணையானைக்
கண்ணழலாற் காய்ந்து
அவனை இருமடங்கு ஒளிபெறச் செய்து

இறுதியில் உயிர்ப்பிக்கின்றாய்;
அவனது அம்புத்தூணியில் பின்னும்
மோகன சக்தியைப் புகுத்தவே
புலவனான யான் இசையின் இந்திரஜாலத்துடனே
இந்த மண்மிசை வருகின்றேன்.

அறிவேன் இதனை:
அடிக்கடி உன் இனியாள் வற்புறுத்தவே
புதிய களிப்பால் உன் கண் விழிப்படைகிறது,
மறதிமிக்கோய்!
அதனாலேயே நீ இந்தத் தியானத்தின் மறைவில்
பிரிவின் வேதனையை நுகர்கின்றாய்.
அவ்வெந் துயரைத் தந்து
உமையவளை நீ அழமூட்டுகிறாய்.
உன் தவம் பாதியில் கலைந்து
அவளுடன் நீ கூடிடும் அழகினைக் காணவே
யுகந்தோறும் யாழினை மீட்டிப்
பைரவிப் பண்ணைப் பாடும் புலவன் நான்!

உன்னுடைய மயான நண்பர்கள்
என்னைப் புரிந்துகொள்ளவில்லை.
வறுமையின் செருக்கினால் அவர்கள்
என் வேடத்தைப் பார்த்து இளித்து
அட்டகாசம் செய்கின்றனர்.
அச்சமயம் இனிமை மிகுந்த இளவேனில் வருகிறது-
ஊடியவர் கூடும் நாள்.

உமையவள் முகத்தில் மென்முறுவலுடன்
நாணம் படர்கிறது;
அன்று புலவனுக்கு அழைப்பு வருகிறது.
மன்றலை நோக்கி அவன்
பூவும் மங்கலப் பொருளும் ஏந்திச் செல்லும்
முனிவர் எழுவருடன் ஒருவனாய் விரைகின்றான்;
இரத்த ஆடை, இளம்பரிதியின் ஒளியென
உனது தூய மேனியில் பொலிவதை,
பைரவனே, அன்று உன் பேய்க்கூட்டம்
சிவந்த கண்கொண்டு நோக்கும்;
நீ பூணும் என்பு மாலை மெல்ல நழுவுகிறது.
மாதவிக் கொடி படர்ந்த அந்த முன்றிலில்

பூப்பொடி திமிர்ந்த உனது நுதலில்
சுடலையின் நீறு எங்கோ மறைந்தது காண்!

மென்னகை புரியும் உமையவள் கண்களும்
இந்தக் கவிஞன்பால் செல்கிறது.
அக்கோமளச் சிரிப்பினுல், புலவன் உளத்தினில்
தண்குரல் வேய்ங்குழல் அழகின் கீர்த்தியைப் பாடுகிறது.

(அக்டோபர் - நவம்பர், 1923) —பூரவி

7?

## நிறைவு

நள்ளெனும் இரவில் ஒரு நாள் நீ
துயிலாது உணர்வு ஒன்று அலைக்க,
விழிநீர் பெருக, தலை குனிந்தே
என் கையை மெல்ல முத்தமிட்டுக் கூறினுய்:
'நீ பிரிந்து போனுல், எல்லை இராத வெறும்பாழ்
என்றுமே என்னை அழுத்திடுமே;
உலகமே வறள் பாலையென மாறிடுமே;
வானிடை விரியும் ஓர் அயர்வால்,
உள்ளத்தை விட்டே என் அமைதி யாவும் போய்விடுமே;
களிப்பின்றி, ஒளியின்றி நிலைத்திடும் இவ்வேதனை
மரணத்தினும் மிகத் துயரினைத் தந்திடுமே.'

இதைக் கேட்டு, உன் முகத்தை என் மார்பில் பதித்து
உன் செவியோடு கூறினேன்:
'நீ என்னை வீட்டுப் பிரிந்தால், உன் குரலே
வேதனை துடிக்கும் பாட்டினிலே ஒளிர்ந்திடுமே;
அவ்வொளியால் எனது உள்ளம் விதிர்த்திடுமே;
எப்பொழுதும் என் கண்ணிலும் கருத்தினிலும்
இப்பிரிவின் விந்தை விளையாட்டுப் பரவிடுமே;
தொலைவிலிருந்தே காண்பாய், இனியாய்,
இம்மறைவின் கதவந்தனையே!
என் உலகம் உன்னுல் நிறைந்திடுமே;
முழுவதும் உன் உரிமையின்கீழ் வந்திடுமே.'

நாங்கள் இருவரும் காதோடு காது பேசிய இம்மொழியை
எழு மீன்கள் வானவெளியில் கேட்டனவே.

இருளிடை மணம் பரப்பிப் பூத்திடும் காவிடை,
நின்று நின்றே, மெல்ல ஒலித்துச் சென்றது இம்மொழி.
பின்னர், மெல்லடி வைத்தே, மரண வடிவில்
பிரிவு குறுக்கிட்டது நம்மிடையே.

ஒருவரை ஒருவர் காண்பதும், பேசுவதும்,
மெய்தொட்டுப் பயில்வதும் போயினவே.
எங்கும் பரவிய அம்மொழியும் இல்லை.
இருப்பினும், எதுவும் பாழ் போய்விடவில்லை.
அவ்வேதனைக் கனலே என் வானில் சுடர்ந்தது.
தன்னந்தனியே, ஒளிபெறும் இசையால்
சொப்பன உலகினைப் படைத்திட்டேனே.

*(1 அக்டோபர், 1924)* —பூரவி

## 79

## அவா

பெரிய செயல்கள் புரிகின்றோம்;
அப்படி உறுதியானவை அல்ல அவை.
உலகோர் நலனுக்கெனப் பாரெங்கும்
சுற்றி வருகிறோம்.
கூட்டாளிகளின் கும்பல்தான் வளர்கிறது.
எழுவதும் படிப்பதும் ஏராளம்;
பல மொழிகளில் பயனற்ற பேச்சுக்கள்;
ஆக்குவதும் அழிப்பதும் எத்தனையோ!
படிப்படியாய் வலையைப் பின்னுகிறோம்,
ஒவ்வொரு முடிச்சாக.
கட்டிடத்திற்கு மேல் கட்டிடம் எழும்புகிறது,
ஒவ்வொரு சுவராய்.
இவ்வாறு உருவாகும் புகழினை
சிலர் நல்லதென்றும்
சிலர் தீயதென்றும் கூறுவர்.
அதை நம்பி அருகில் வருவோரும்,
அதன்மீது ஐயம் கொள்வோரும் உண்டு.
இதில் அப்பட்டமானது கொஞ்சம்;
கலப்படமானது கொஞ்சம்.
மொத்தத்தில் ஏதோ ஒன்று உருவாகும்.
ஆனால் சின்னஞ்சிறு அவாக்கள் -

அவை இரக்கம் மிகுந்தவையாக இருக்கும்;
கேட்க எளியனவாகவே இருக்கும்;
ஆனால் மொத்தத்தில் எளியன அல்ல.
பாட்டினிலே, இசையினிலே, பூ மணத்தினிலே
கலந்ததோர் இன்பம்,
மரநிழலில் கனவு காணும் ஓய்வின் ஒரு மயக்கு -
இவை நினைத்தவுடன் வருவன என்று
என்னுள் நினைத்துக்கொள்வேன்.

விரும்பிப் பற்றப் போகையில்
நிலையில்லா அந்த இன்பம் நழுவிச் சென்றிடுமே.
உருவற்ற, கரையற்றதோர் ஆவிக்கிடையே
விதிபுருடன், கச்சை இழுத்துக் கட்டி, வாளை உலுப்பித்
தன் படைப்புத் தொழிலில் இறங்கியதும்,
பண்டைய கடின உழைப்பினால்
ஓங்கி வளர்ந்தது மலை;
எத்தனையோ ஊழிகள் கண்ட கனவினால்
முதல் பூந்துணர் பூத்ததம்மா!
வெகு நாளாக இத்தரணியின் ஒரு மூலையில்
என் விருப்பம் போல இருந்திட எனக்கு ஓர் ஆசை.
பொன் வேண்டேன், புகழ் வேண்டேன்.
வாழ்வதற்குத் துளி இடமே நான் வேண்டுவது.
அங்கே இன்னிழல் பரப்பும் மரம்,
பக்கலில் சலசலத்தோடும் சிற்றாறு,
பசுக்கள் திரும்பும் மாலை மங்கலில் கண்சிமிட்டும் தாரகை,
சாளரக் கோப்பில் மணங்கமழ் மல்லிகை,
ஆற்றின் அக்கரையில் தோன்றிடும் இளங்காலை ஒலி -
இவையே நான் வேண்டுவன.

இவற்றைச் சூழ்ந்தே என் வாழ்வின் எஞ்சிய நாட்கள்
சிரிப்பிலும் கண்ணீரிலும் தோய்ந்திடல் வேண்டும்.
பொன் வேண்டேன், பீடு வேண்டேன்;
நான் வேண்டுவது, துளி இடமே.
பல நாளாய் எனக்கு ஓர் ஆசை.
உளத்தில் நான் செய்திடும் தியானம்
நிறை வாணியைப் பெறவேண்டும்.
பொன் இல்லை, பெற்றி இல்லை -
நான் வேண்டுவது துளி இடமே.
தாழ்ந்திடும் கதிரோன், மேகத்திடைக்
கற்பனையின் கடைசி வண்ணங் கொண்டு

முடிவின் ஓவியத்தை வரைகின்றான்.
எனது சொப்பன உலகையும்
அந்த மாயத் திறங் கொண்டே
ஒளி - நிழல், நிறம் - சுவை வைத்துச்
சமைத்திட வேண்டுவனே.
இவற்றைச் சூழ்ந்து
சிரிப்பும் அழுகையுமான இந்தச் சில நாட்களை
நிரம்பிடச் செய்வதே என் ஆசை.
பொன் இல்லை, பெற்றி இல்லை;
தியானத்தின் மொழிதனைப்
பெறவே எனக்காசை.

எனது உயிரின் அடங்காத வேட்கை
கடைசியில் ஆரமுதினை மாந்தித்
தணியும் என்று
வெகு நாளாய் எனக்கு ஓர் ஆசை;
பொன் இல்லை, பெற்றி இல்லை.
நான் வேண்டுவது, துளி அன்பே.
இதயக் குரல் தந்து என்னைப் பெயரிட்டு அழைப்பது;
காரணமின்றி என் அருகினில் வந்து
என் கையோடு கை வைப்பது;
விலகிச் சென்றால் பிரிவால் தனியே ஏக்கம் கொள்வது;
அருகே வந்தால் இரு கண்களும் பேசத் தாவுவது -
இவற்றைக் கொண்டே
எனது வாழ்வின் இச்சில நாட்கள்
சிரிப்பிலும் கண்ணீரிலும்
தோய்ந்திட வேண்டும்.
பொன் வேண்டேன், புகழ் வேண்டேன்;
நான் வேண்டுவது துளி அன்பே.

(19 அக்டோபர், 1924) —பூரவி

## 80

# திகில்

காதலுக்குரிய மதிப்பினை இரு கைகளாலும் நீ
அள்ளியே எனக்குத் தந்திடத் தந்திட,
என் உளத்தில் பதுங்கியிருந்த ஓர் ஏமாற்றம்
தானே வெளியே தோன்றிடுமே.
இதைவிடக் கடன் சுமையைக் குறைக்காது
வெற்றுத் தோணியுடன் போக விரும்புவேன் நான்.
பசியுடன் நான் இருந்தாலும், அது மேல் அன்றோ?
இன்னமுது வழியும் உனது உள்ளத்தைத்
திரும்பி எடுத்துக்கொண்டு போய்விடு.
என் வேதனையை ஆற்றிக்கொள்ளப் போனால்
உன் நெஞ்சில் வேதனை படர்ந்திடுமோ என அஞ்சி,
என் சுமைதனை இறக்கப்போனால்
உன்மீது அச்சுமை ஏறுமோ என அஞ்சி,
எனது ஓர் உள்ளம்மட்டும் கூக்குரலிட்டால்
இரவெல்லாம் உன் துயில் கெடுமோ என அஞ்சி,
என் உள்ளத்தை விண்டே கூறவில்லை நான்.
நீ அதை மறப்பாயானால், அதுவே நன்மையாகும்.
யாரும் இராத வழியே சென்றுகொண்டிருந்தேன்.
என் முகத்தை நோக்கியபடியே வந்தாய் நீ.
'என்னுடன் வா, என்னிடம் குலவிப் பேசு'
என்று சொல்ல நினைத்தேன் நான்.
சட்டென, உன் முகத்தைப் பார்த்ததும்,
ஏதனாலோ அச்சம் தோன்றியது எனக்கு.
உனது உள்ளத்தின் இருள்சேர் ஆழத்தில்
உறங்கிய கனல் ஒன்று,
சுடர்ந்தெழுவதைக் கண்டேன்.
தவமகளே, உன் தவத்தின் வெங்கனலைத்
திடுமெனத் தூண்டிவிட்டால்
அதன் வெவ்விய ஒளியில், மறைவு ஒழிந்து
என் வறுமை யாவும் தெளிவாய்த் தோன்றிடுமே!
உனது காதற் கனலிடை அவியெனத் தருவதற்கு
என்னிடம் என்ன உளது?
ஆதலால், சிரம் வணங்கிச் சொல்லிடுவேன்:
உன்னைப் பார்த்த அந்நினைவைக் கொண்டே
தனியே திரும்பிச் சென்றிடுகிறேன்.

(27 நவம்பர், 1924) —பூரவி

## 81

# விடை

காலம் விரைவதன் ஒலி விழுகிறதா உன் செவியில்?
அதன் விசைத்தேர் நிற்காமலே மறைந்திடும்;
வானத்திடை இதயத் துடிப்பினை எழுப்பிடும்;
அதன் உருளையின்கீழ் நசுங்கியே
நெஞ்சு விரியத் தாரகையின் அழுகுரல்
இருளிடைத் தொனித்திடுமே.
அன்பனே, தாவிச் செல்லும் காலம்
என்னைத் தன் வலைக்குள் சிக்க வைத்தது;
விரைந்திடும் தன் தேரினில்
துணிவு மிக்க யாத்திரை வழியே
உன்னை விட்டுத் தொலைவினுக்கே
என்னைக் கவர்ந்து சென்றதுவே.
மரணங்கள் பல கடந்தே
நான் வந்தது போலவே தோன்றியது!

இன்று, புதுமை வைகறைக் குன்றின் உச்சியில்
இத்தேரின் வேகம் என் பழைய பெயரினைக்
காற்றிலே பறக்க அடித்தது காண்!
திரும்பி வர வழி இல்லை எனக்கு.
தொலைவிலிருந்து என்னை நோக்குவாய்.
என்னைப் புரிந்துகொள்ள முடியாது உன்னால்.
அன்பனே, விடை பெற்றுச் செல்கின்றேன்.

ஒரு நாள் என்றோ ஓய்வு நிரம்பிய பொழுதில்
இளவேனில் மாருதத்திலே
கடந்து சென்ற காலக் கரையிலிருந்து
இரவில் நெடுமூச்செழுமே;
உதிரும் மகிழ மலர்கள் கண்பனி சிந்தி
வேதனை தந்திடுமே;
உன் உயிருடன் தொடர்பு ஒன்று உளதோ என்று
என்னைத் தேடி அலைவாய் அச்சமயம்;
மறதி நிலவும் அந்தி வேளை என்றாவது
அந்தச் சுடர் உன்முன் தோன்றிடலாம்;
விளக்கம் இராத கனவின் உருவில் அஃது
உனக்குச் சிக்கிடுமோ என்னவோ!
இருப்பினும், அது கனவே அன்று;

மறக்கவொண்ணு உண்மையே அது;
மரணத்தை வென்ற என் காதல் அது.
உனக்கே அதனைக் கையுறையாகத் தந்து
காலப் பயணத்தினில், மாறுதல் வெள்ளத்தினில்
நான் மிதந்து செல்கின்றேன்.
அன்பனே, 'விடை தருவாய்!

இதனுல், நீ இழப்பது ஒன்றும் இல்லை.
என் உடல் மண்ணில் ஆன வடிவம் காண்!
ஓர் அழியா உருவை அதற்குத் தந்தே
உன் அந்திப் பொழுதில் அதற்கு விளக்கேற்று.
அந்தப் பூசனை விளையாட்டில்
நான் உன் மெய்யினைத் தொடும் மாசு
சிறிதும் படியாதே!
வேட்கையின் சுழற்சியால்
அதற்குத் தூவும் பூப்பலி வீணே போகாது.
என் கண்ணீரில் தோய்ந்தே புழுதியில் படிந்த
இச் செல்வத்தைப்
புலமை வேட்கை கொண்ட நாவால்,
மனத்திற்கு ஏற்ற உணவாய்க்
கருத்துடன் அமைத்து
உணர்வைப் பெய்திடும் செப்பினுள்
நீ கலந்துவிடாதே!

என் நினைவுகளைக் கோத்து
இன்று நீயே புனைவாய்,
கனவடர்ந்த உன் சொற்களை;
பொறுப்போ கடமையோ இராது அவற்றுக்கு;
விடை தருவாய், அன்பனே!

என் பொருட்டுக் கவலையுருதே!
நான் ஆற்றவேண்டிய கடமை ஒன்று உளது,
பரந்த இவ்வுலகு இருக்கிறது;
வெற்ருகி விடவில்லை என் கலயம்;
இதனை நிரப்புவதே
என்றும் என் நோன்பாகும்.
நெகிழ்வுடன் என் பொருட்டுக் காத்திருப்பவர்
எனக்கே பெருமை தருபவராவர்.
நிலவு தோய்ந்திடும் இரவிடைப்
பிரிவின் வெந்துயர்க் கடலினை நீந்தி

*ரஜனீகந்த மலரைக் கொய்து*
*தன் இதயத் தட்டில் வைத்தே*
*எல்லையில்லாப் பொறுமையுடன்*
*நன்மை தீமை யாவும் ஏற்று*
*என்னைக் காண எவர் காத்திருப்பாரோ,*
*அவர் ஆற்றும் பூசனைக்கே*
*பலியாகிவிட நான் விரும்புவேன்.*
*இன்பம் எத்தனையோ உனக்குத் தந்தேன்.*
*அதற்கு முற்றும் உரியவன் நீயே;*
*துளித் துளியாக நான் தந்ததை,*
*என் இதயக் குவையிலிருந்தே*
*என் மூச்சின் ஒவ்வொரு கணமும்*
*வழியும் இன்னமுதினை அது பருகிடுமே.*
*ஒப்பிலி நீயே, பெற்றியனே!*
*உனக்கு நான் ஈந்தவை யாவும்*
*நீ அளித்த பரிசேயாம்;*
*அதனை நீ ஏற்க ஏற்க*
*உனக்குக் கடமைப்பட்டவளாவேன்.*
*அன்பனே, விடை தருவாய்.*

*(25 ஜூன், 1928)* —மஹுவா

## 82

# வழிப்போக்கன்

*விடுதலை எங்குளது? விடுதலை என்பது என்ன?*
*என்னை வினவாதே நீ!*
*நானோ சாதகன் அல்லன்; குருவும் அல்லன்;*
*புலவன் நான்; இவ்வுலகுக்கு*
*அணித்தாய் உள்ளவன்.*
*இக்கரைமிசைப் படகுத் துறையில்*
*என் முன் பிராண நதி*
*பொங்கியும் அடங்கியும், நிழலும் ஒளியும் கூடியே,*
*நன்மையும் தீமையும் கலந்தே என்றுமே ஓடுகிறது;*
*அதில் நிறைந்திடும் பொருள்தாம் எத்தனையோ,*
*நான் மறந்தே போனவை, பெற்றவை, இழந்தவை*
*அழுகையும், சிரிப்புமாக எத்தனையோ!*
*ஒரு புறம் கரை சரிந்து விழ விழ*
*மறு புறம் ஒரு கரை எழுந்திடுமே.*

இவ்வாற்றுப் பெருக்கினிலே
உதயத்தின் செந்நிறம் விரிகிறது.
அன்னையின் மெல்லிய விரலென
நிலவின் கதிரொளி மறைகின்றதே.
இருள்செறி இரவில்
வானத்து மீன்கள் தியான மந்திரம் உரைத்திடுமே
இரத்தநிற உத்தரியம் போர்த்தே
அத்தமனக் கதிரவன் ஞாயிறு செல்கின்றான்.
அலையின் நீரில், குருக்கத்தி மலர்கள்
மிதக்க விடுமே இனிமைப் புட்டிலை;
பறவைகள் தம் தீங்குரலைக் கொட்டிடுமே.
அலையின் நாட்டியச் சதியில்,
அதன் விசித்திர அசைவினில்,
அவ்வுயிர்ப் பெருக்கினில், எனது உள்ளம்
தன் இசையில் மூழ்கி ஆடிடும்பொழுது
அந்தச் சந்தமே என் பந்தமும் விடுதலையுமாகுமே.
எதையும் பெறவே நான் விரும்பவில்லை;
எதையும் பற்ற எனக்கு ஆசையும் இல்லை.
எல்லாருடனும் இந்த வெள்ளந்தனிலே
மிதந்து செல்வதே என் விருப்பு.

பிரிவிடை வருந்தியும்
கூடுகையில் உவகை பொங்கியும்,
இக்காதல் முடிச்சினை அவிழ்த்தவாறே
என் தோணியின் சீலையை
விரைந்திடும் காற்றில் விரித்தே
நான் சென்றிடுவேன்,
வழிப்போக்கனே!

விரிவுடையன உன் திசைகள் பத்தும்;
கோயில் உனக்கில்லை; விண்ணுலகும் இல்லை;
முடிவுறு மாறுதலும் இல்லை.
நீ அடி வைத்திடும் இடமெங்கும்
புனிதத் தலங்களேயாம்;
உன்னுடன் வழி நடக்கும் இப்பெற்றியால்
என் விடுதலையைக் காண்பேனே!
ஓயா ஆடலிலும், ஓயாப் பாடலிலும்
எதையும் மறக்கும் ஓயாக் கொடையிலும்,
இருளிலும் ஒளியிலும்

படைப்பின் ஒவ்வொரு நிலையிலும்,
ஊழியின் ஒவ்வொரு கணத்திலும்
நான் சென்றிடுவேன்.

(7 மே, 1931) —பரிசேஷ

## 83

## வினு

இறைவா, ஊழிதோறும் கருணையற்ற இந்த உலகினுக்கு
அடிக்கடி உன் தூதுவரை அனுப்பியுள்ளாய் நீ.
'பொறுத்தருள்வீர் எவரையும்; அன்பு கொள்வீர்;
உளத்திலிருந்து பகைமையை அகற்றிடுவீர்' என்றே
உரைத்துச் சென்றனர் அவர்கள்.
போற்றற்குரியர் அன்னூர்; நினைவு கூர்தற்குரியர்.
கேடு சூழ்ந்த இக்காலத்தில் வெளி வாயிலிலேயே
வணங்கி, அவர்களைத் திருப்பிவிட்டேன் வீணுக.
இன்று நான் காண்பது என்ன?
இரவின் இருளில் மறைந்தே செய்யும் கொடுமை
துணையற்றவரைத் தாக்குகிறது!
நான் காண்பது என்ன?
கொடுமையை எதிர்க்கும் வன்மை குன்றியே
நேரிய நீதி தனிமையில் புலம்புகிறது!
நான் காண்பது என்ன?
இளைஞன் வெறி கொண்டு ஓடுகிருன்!
என்ன வேதனையோ; பாறையில் தலை மோதிப்
பயன் ஒன்றும் காணுமல் மாய்கின்ருன்!
இன்று, என் குரல் அடைத்துவிட்டது;
என் வேய்ங்குழலும் இசையை மறந்தது.
பேய் இருளின் சிறை அச்சந் தரும் கனவினுள்
இவ்வுலகினை ஆழ்த்தியதே. அதனுல்,
'உன் இனிய காற்றிடை நஞ்சினை நீ நிரப்பியவரை,
உன் ஒளியினை அவியச் செய்தவரை
மன்னித்தருளி அவர்மீது, அன்பு கொண்டனையோ?' எனக்
கண்ணீர் மல்க வினவுகின்றேன் உன்னை.

(டிசம்பர் - ஜனவரி, 1931 - 32) —பரிசேஷ

## 84

# நமனை வென்றவன்

'நீ வெல்லற்கரியவன், இரக்கமற்றவன்;
உலகை ஆட்டிடும் கொடுங்கோலன்;'பயங்கரன்.
உனது கனலின் சுடர்நாவால் துயர் உறுவோர்
உளத்தை எரிப்பவன்' என்றெல்லாம்
தொலைவில் இருந்தே நினைத்தேன் நான்.
புயல் உறுமும் முகிலிடையே உனது வலது கரம்
எறிந்தது கூர் நுனி வேலினை;
அதன் இதயம் பிளந்தே எழுந்தது பேரிடி.
நடுங்கிக் குழைந்தே படபடத்திட
உன் முன்னர் வந்து நின்றேன்.
வர இருக்கும் ஒரு பேரிடும்பையின் அலை
உனது சுளித்த புருவத்திடையே தோன்றியது.
இறங்கியது அந்த இடி.
நடுங்கிற்று எனது உடற்கூடு;
இதயத்தை மெல்ல அழுத்தியே
'உனது இறுதிப் பேரடி
இன்னும் ஏதாவது உண்டா?' என்றேன்.

இறங்கியது அப்பேரதிர்ச்சி.
இவ்வளவுதானா? வேறில்லையா?
நீங்கியது என் அச்சம்.
உனது படைக்கலம் ஓங்கி நின்றபொழுது
என்னிலும் உயர்வுடையன் நீ
என்றே நினைத்தேன்.
உனது இடியுடன் நீயும் இறங்கி வந்தாய்,
உனக்குரிய இடத்துக்கே.
இன்று நீ சிறியவனாகிவிட்டாய்;
எனது நாணம் முற்றும் விண்டது.
'எவ்வளவு உயர்ந்தவனாய் இருப்பினும்
நமனைவிட நீ உயர்ந்தவன் அல்லன்;
மறலியை விட நானே பெரியவன்' என்று இறுதியாய்க்
கூறிவிட்டு நான் சென்றிடுவேன்.

(1 ஜுலை, 1932) —பரிசேஷ

## 85

# முதல் வழிபாடு

மூவுலகுடையானின் கோயில் -
'இமையவர் சிற்பி விசுவகருமன் அதனை எழுப்பினன்;
தொன்மையில் என்றோ மநு மாந்தாதாவின் காலத்தில்
அநுமனே அதற்குப் பாறைகள் சுமந்து வந்தான்
என்று உலகோர் கூறுவர்.

'இதைக் கட்டியவர் கிராத மரபினர்;
அவர்கள் வழிபடும் கடவுளரே
இக்கோயிலில் உறைபவர்' என்று
வரலாற்று அறிஞர் பேசுவர்.
க்ஷத்திரிய வேந்தர் அவர்களை வென்று
நாடு கொண்டபொழுது
கிராதரின் செங்குருதி
இக்கோயில் முன்றிலெங்கும் பெருகியதாம்!
அவர்களுடைய இறைவன்
புதிய பெயரின் மறைவில்,
புதிய பூசனை ஒழுங்கு பெற்றுப் பிழைத்தார்!
ஆயிரம் ஆண்டுகளின் பழமைப் பக்தியின் ஓட்டம்
மீண்டும் தோன்றியது.

இன்று கிராத மரபினர் எங்கேயோ?
இக்கோயிலினுள் அவர்கள் நுழையவும் வழிதான் ஏது?
சமூகம் ஒதுக்கிய இந்தக் கிராத மரபினர்,
ஆற்றின் அக்கரைதனில் வாழ்பவர்.
கிராதன் பக்தன்; ஆனால் அவன் வழிபடும் கோயில் இல்லை.
அவனுடைய பாட்டொலிமட்டும் இருக்கிறது.
கைத்திறம் மிக்கவன், குறி தவறு நோக்குடையவன்;
கல்மீது கல் அமைத்திடும் நுட்பம் அறிந்தவன்;
பித்தளையில் பொன் வெள்ளிப் பணிசெய்வதில் வல்லவன்;
கருங்கல்லில் உருவினைச் சமைக்கும் ஆற்றல் உடையவன்;
அரசியல் உரிமை அவனுக்கில்லை;
அதுவே அவன் கருவியைக் கவர்ந்தது..ஆ, கொடுமை!
உடையிலும் நடையிலும் பாணியிலும்
அவனுக்குரிய மதிப்பினை வஞ்சித்தனர்;
கல்வி தரும் ஒளியிலிருந்தும் அகற்றினர்;

திரிலோகேசுவரர் கோயிலின் பொன்சிகரம்
மேற்கு வான விளிம்பில் தென்படும்;
அப்போது தம்மவர் கைத்திறமையைக்
கிராதர் நினைவில் கொள்வர்;
தொலைவிலிருந்தே தம் இறைவனை வணங்குவர்.

கார்த்திகை முழுமதி; கோயிலில் திருவிழா.
மாடத்தில் குழல், மத்தளம், கைத்தாளம் முழங்கின;
கோயில் புறவெளி எங்கும் பந்தல்கள்.
அவற்றிடையே விதானத்தில் ஆடும் துகில் கொடிகள்;
பாதை இரு புறமும் பண்டம் நிறை சாலைகள்!
செப்புக்கலங்கள், வெள்ளி அணிகள், தெய்வத் திருவுருவங்கள்,
பட்டுக் கலிங்கம், விளையாட்டுப் பொம்மைகள், இலைக்குழல்கள்,
பூசைக் கிண்ணங்கள், கனியின் ஈட்டம், மலரின் குவியல்,
வாசனைப் பொருள்கள், குடங்களில் புனிதத் தீர்த்தங்கள்.
மகுடிக்காரன் உரத்துக் கூவிக் கண்கட்டு வேலை செய்கிறான்;
இராமாயணம் படிக்கிறார் பௌராணிகர் ஒரு புறம்.

பொலிவுறு ஆடையில், பரிமேல் செல்லும்
படை ஏந்திய மெய்காப்பாளர்.
அரசரும் அமைச்சரும் அம்பாரியில் வீற்று
யானையில் உலாப் போவதும்;
அவர்கள் முன்னர்த் தாரை ஊதிச் செல்வபனும்;
பட்டுத் திரைச்சீலைகள் மூடிய சிவிகை ஊரும் சீமாட்டியும்
அவள் முன்னும் பின்னும் பணியாட்களும்;
ஐந்து ஆலரமத்தின்கீழ் ஆண்டிகளின் மடமும்;
உடையற்றவரும், சடை தரித்தவரும், நீறு பூசியவரும்;
இவர்கள் கால்களில் பழமும்
பணியாரமும் பாலும் நெய்யும் அவலும்
வைத்துக் கும்பிடும் பெண்களும் -
இப்படிப் பல விந்தைக் காட்சிகள் அவ்விழாவில்.
நின்று நின்று, 'திரிலோகேசுவரனே, போற்றி, ஜய ஜய' என்று
வானைப் பிளக்கும் வெற்றிக் குரல்.
மறு நாள் நல்ல வேளையில் அரசனின் முதல் வழிபாடு.
பட்டத்து யானைமீது வீற்று
நேரே கோயிலுக்கு வருவான் அரசன்.
அவன் வரும் வழி இரு புறத்திலும்
கதலியோடு நீடுநிலைத் தோரணங்கள்;
மங்கல கலசங்களில் மாவிலைக் கொழுந்து;

உலாப் போகும் வழியெங்கும்
புழுதி அடக்கத் தெளித்திடும் வாசனை மல்கு நீர்.

சுக்கில பட்சத்துப் பதின்மூன்றும் நாள் இரவு;
கோயில் முதல் யாமத்தின் சங்கொலி, மணியோசை,
பேரிகை முழக்கு, பறையோசை யாவும் அடங்கின.
அன்று, மதிவட்டத்தைச் சூழ ஒரு மங்கல் வளையம்;
நிலவொளியும் புகை கப்பியது போல் இருந்தது;
எதனாலோ அதற்கு ஒரு மயக்கின் தோற்றம்.

காற்றே வீசாமல் எங்கும் இறுக்கம்—
வானிடைப் புகைபோல் படரும் ஒரு மூட்டம்.
மரஞ்செடிகளும் ஏதோ திகிலில் அசைவற்றிருந்தன;
நாய்கள் காரணமின்றி அழுதன.
குதிரைகள் காதை நெறித்து
எதையோ நோக்கி மருண்டு கனைத்தன.
பாதலத்து அசுரர்கள் சமர் முரசு கொட்டியதுபோல்
கிடுகிடு குடுகுடுவென
ஆழ்ந்ததோர் இடிக்குரல்
திடுமென மண்ணின்கீழ்க் கேட்டது.
ஆலய மணியும் பெருந்தொனியில்
நாக்கை அசைப்பது கேட்டது.
கந்தில் பிணித்த களிறுகள்
சூறுவளி விரைவது போல்
பிய்த்துக்கொண்டு பிளிறியே ஓடின.
மண்ணில் பெரும்புயல் எழுந்தது!

ஆ! எருமை, ஆடு, செம்மறி யாவும்
மந்தை மந்தையாய் மூச்சு வாங்க ஓடினவே.
ஆயிரக்கணக்கில் மாந்தர், திக்கு முக்காடி,
எதைப் பார்த்தாலும் கிலி கொண்டு,
தம்மவர், பிறர் எனப் பாராது
ஒருவரையொருவர் தள்ளித் துவைத்தனர்.
நிலம் வெடித்துப் புகை எழுந்தது;
வெம்மை நீர் கொப்புளித்தது.
பீமன் குளத்து நீரெல்லாம் வற்றி
மணற் படுகை ஆயிற்று.
கோயிலின் சிகரத்தில் இருந்த மணியும்
குலுங்கிக் குலுங்கி,
'டணங்! டணங்' என ஒலித்தது.

இந்த விபரீதங்கள் ஓய்ந்ததும்
முழு வட்டமான மதி மேற்கு வானில் தாழ்ந்தது.
பற்றி எரியும் பந்தல்களிலிருந்து புகைச் சுருள்
மலைப்பாம்பு சுற்றிக்கொள்வது போல்
வானில் பரவி நிலவை வளைத்துக்கொண்டது.
மறு நாள் தம்மவரைப் பறி கொடுத்தவரின் அழுகை ஓலம்
நாற்றிசையும் விம்மிடும்பொழுது,
புனித இடம் பாழ்படுமோ என்று
அரசனின் படைவீரர் கோயிலை வளைத்து நின்றனர்.
முக்கிய மந்திரி வந்தார்; சோதிடன் வந்தான்;
ஸ்மிருதி அறிந்த அந்தணர் வந்தார்;
கோயிலின் சுற்றுக்கட்டு
இடிந்து தரைமட்டமாகியதைக் கண்டனர்.
இறைவன் உறையும் கருவறையின்
மேல்தளம் தகர்ந்தே போயிற்று.
'வருகிற பூர்ணிமைக்கு முன்னர்ப்
பழுது பார்த்துச் சம்பிரோட்சணம் ஆகவேண்டும்;
இன்றேல் சிலை கடவுள்தன்மையை இழந்துவிடும்'
என ஆகம பண்டிதர் எச்சரித்தார்.
'நடத்துங்கள்' என்றே அரசனது ஆணை பிறந்தது:

'அந்தக் கிராதர்களைத் தவிர
யார் இதனை நடத்த வல்லார்?
அவர்களுடைய அசுசியிலிருந்து
கடவுளை எங்ஙனம் காப்பது?
கோயிலைப் புதுப்பித்தும் என்ன பயன்?'
என்றார் அமைச்சர்.

கிராதர் தலைவன் மாதவனை அழைத்தான் மன்னவன்
வயது முதிர்ந்தவன் மாதவன்;
நரைத்த சிகைமீது வெண் சாதரா அணிந்திருந்தான்.
அரைதனில் பழுக்காத் துணி;
இடையளவு திறந்த செம்புவண்ண மேனி;
அடக்கமும் உருக்கமும் தோய்ந்திடும்
தணிந்த கண்ணோக்கு.
அரசனின் காலைத் தீண்டாமலே
ஒரு கைப்பிடி முல்லை மலரை இட்டுத்
தன் வணக்கம் தெரிவித்தான் முதியோன்.

'நீங்கள் இன்றி இக்கோயிலைச் சீர்திருத்த முடியாது'
என்று அரசன் கூறவும்,
'எங்கள் இறைவனின் கிருபை பிறந்தது'
என்று சொல்லி மாதவன்
தெய்வத்தைக் குறித்துக் கும்பிட்டு நின்றான்.
மன்னவன் நரசிம்மராயன் கூறுவான்:
'கண்ணைக் கட்டிக்கொண்டு
இந்தத் திருப்பணியை ஆற்றுவாய் நீ!
கடவுள் சிலைமீது உன் நாட்டம் விழக்கூடாது!
உன்னால் முடியுமோ சொல்?'
'அந்தர்யாமியான இறைவன்
உளக் கண்ணைக் கொண்டு
இப்பணியை நிறைவேற்றிக்கொள்வான்.
அதுவரை என் கண் மூடியபடியே இருக்கும்'
என்றான் மாதவன்.

வெளியே கிராதர் அனைவரும் தன் ஏவலைச் செய்ய,
கருவறையில் மாதவன் ஒருவனே
திருப்பணியில் ஒன்றியிருந்தான்.
கறுப்புச் சீலை அவன் கண்ணை மறைத்தது.
அல்லும் பகலும் கோயிலை விட்டு அவன்
வெளியிற் போகவே இல்லை.
தியானம் செய்வான்; பாடுவான்;
அவனுடைய விரல்கள் திருப்பணி ஆற்றும்.
'ஆகட்டும், விரைவில் முடிப்பதைப் பார்;
நாளாகிறது; நல்ல வேளை போய்விடப் போகிறது'
என ஏவுவான் அமைச்சன்.
கிருஷ்ணபட்சம் கழிந்து சுக்கிலபட்சம் வந்தது மீண்டும்.
குருட்டுக் கண்ணுடன் மாதவன்
கற்சிலையைக் கையால் தொட்டு
அதனுடன் பேசுவான்;
கற்சிலை, அவனுக்கு மறுமொழி பகரும்.
ஒரு வேளை மாதவனின் கண்கட்டுப் பிரிந்தால்
என் செய்வதென்று,
பக்கத்திலேயே காவலனின் கண்காணிப்பு.

ஆகம பண்டிதர் வந்து எச்சரித்து விட்டார்;
'ஏகாதசி இரவு முதல் பூஜைக்கான நல்ல வேளை.
அதற்கு முன் திருப்பணி முடிந்துவிடுமா?' என்றார்.

மாதவன் வணங்கிக் கூறுவான்;
'இதற்கு உத்தரம் சொல்ல நான் யார்?
இறைவனது கண்ணோட்டம் எப்போது வருமோ
அப்போது சொல்லி அனுப்புகிறேன்.
அதற்குமுன் வந்து துரிதப்படுத்தினால்
தடங்கல்தான் விளையும்.'

ஷஷ்டியும் சென்றது, சப்தமியும் நகர்ந்தது.
கோயிலின் வாயில் வழியே புகும் நிலவொளி
மாதவனின் நரைத்த சிகைமீது விழுந்தது.
கதிரவன் அத்தமனமானான்; பசலைவானில் பால்மதியம் முளைத்தது.
மாதவன் பெருமூச்செறிந்து கூறினான்:
'காவலனே, போய்ச் செய்தியைச் சொல்:
மாதவனுடைய பணி முடிவடைந்துவிட்டது;
நல்ல சமயம் நழுவிப் போய்விடப்போகிறது.

காவலன் ஏகினான் இதை அறிவிக்க.
மாதவன் தன் கண்சீலையைக் கழற்றிவிட்டான்.
திறந்த வாயில் வழியாக
ஏகாதசி மதியத்தின் முழு ஒளியும்
படிவத்தின்மீது படிந்தது.
மாதவன் மண்டியிட்டு அமர்ந்தான்,
இரு கை கூப்பியே.

தன் இறைவனை
வைத்த கண் வாங்காமல் நோக்கினான்.
கண்ணீர் இரு விழிகளிலும் ஆறாய்ப் பெருகியது.
ஆயிரம் ஆண்டுகளாகத் தன் இறைவனைப் பாராத
அந்த வேட்கை அன்று தணிந்த காட்சிதான் என்னே!
அரசன் கோயிலினுள் நுழைந்தான்;
மாதவனின் சிரம் சிலாபீடத்தின்கீழ்த் தாழ்ந்திருந்தது.
அரசனின் வாள் கணத்தில் அதைச் சிதைத்தது!
இதுவே அத்தெய்வத்திற்கு ஆற்றிய முதல் வழிபாடு;
இதுவே அதற்கான இறுதி வணக்கமும்!

*(23 ஆகஸ்ட், 1932)* —புனஸ்ச

## 86

# இந்தப் பறவை போகும் நாள் குறுகியது

இந்தப் பறவை போகும் நாள் குறுகியது;
இனி வெற்றிடமாகும் இது வாழ்ந்த கூடு;
இசை அடங்கி, கூட்டினைத் துறந்து
காட்டின் அசைவினிடையே இது
புழுதியில் படுத்துவிடும்.

உதிர் சருகுடனும், உலர்ந்த மலர்களுடனும்
சுவடு படாமல் பெரும்பாழினை நோக்கியே
அத்தமனக் கடலுக்கு அப்பால்
பறந்திடும், அல்லும் பகலும்.

இவ்வையகம் இதற்கு எத்தனை நாள்
இடந் தந்து விருந்தோம்பியது!
மாமணம் கமழ்ந்திடும் பங்குனி நல்கிய இனிமையில்
உன் அழைப்பினைப் பெற்றேனே.
என் இசையைக் கேட்க
அசோகின் இணர்கள் குறிப்புணர்த்தின.
அதனால், அன்பின் சுவைதனை நிரம்பத் தந்தேன்.
கோடை வெறி எழுப்பிடும் வெம்புழுதி,
இசைத்திடும் என் குரலை என்றாவது அடைக்குமே;
ஓயச் செய்திடுமே என் சிறகின் அலைப்பினை.
இவற்றால் நான் ஆறுதலே கொள்வேன்;
இஃது என் உயிர்க்கு ஈந்த பரிசென மகிழ்வேன்.
இக்கரையில் தளர்வுறு என் பயணம் நின்றதும்
கணமே பின்புறம் நோக்கித் தாழ்ந்து வணங்கி,
இவ்வாழ்வினை ஆண்ட கடவுளரைத்
துதித்தே போற்றிடுவேன்.

(28 ஏப்ரல், 1934) —பிராந்திக்

## 87

# பொழுதின் கடையொளியில் வண்ணம் சேர்...

பொழுதின் கடையொளியில் வண்ணம் சேர்
அன்றைச் சித்திரை மாதம்
உன் கண்களிலே எனது அழிவினைக் கண்டேனே.
இவ்வாழ்வின் தீரா விளையாட்டில்,
எனது வாழ்வின் அன்றுடச் சந்தையில்
வழி துறை எங்கணும் எண்ணற்றவர்
எள்ளியே நகையாட,
உன் கண்களிலே எனது அழிவினைக் கண்டேனே!
காற்று ஊசலாடுகிறது, மாஞ்சோலையிலே;
அரும்புகள் உதிர்கின்றன.
நெடுநாள் பழகிப் போன அந்த நறுமணம்
மெல்லிய தென்றலில் கலந்து வருகின்றது.
இணர் விரித்தே கொம்புகள் எங்கும்
அஞ்சிறைத் தும்பியின் ஒலியுடன்
இளவேனில் நெடிதே மூச்செறிகிறது.
இதனிடையே உன் கண்களில்
எனது அழிவினைக் கண்டேனே!

(அக்டோபர்-டிசம்பர், 1934) —கீத விதான்-3

## 88

# சோர்வுறும் என் சிந்தையின் புன்மாலை

சோர்வுறும் என் சிந்தையின் புன்மாலைப் பொழுதில்
இருள்செறி காளிந்தி வெள்ளத்தில், என் உடல்
மிதந்து போவதைக் கண்டேன்.
அநுபவக் குவையும், விந்தை வேதனையும்,
நினைவுத்திரளும் ஏற்றே, தன் இன்னிசைக் குழலுடன்,
சித்திரப் படாம் போர்த்து, தொலைவில் சென்றிடச் சென்றிட
மங்கியே வருகிறது அதன் உருவம்.
மரநிழல் தழுவிய மக்கள் வாழ் இடங்களில்
மாலைப் பூசனை மணியொலி மங்கியே வருகிறது.
கதவடைத்துள்ளது இல்லந்தோறும்
விளக்குச் சுடர் மறைகிறது;

துறைதனில் தோணி பிணைந்துளது.
இரு கரையிலும் மக்கள் போக்குவரத்து ஒய்ந்து வருகிறது.
இருள்செறி இரவு; காட்டகத்தில் கவைகள் எங்கும்
பறவையின் மௌனத் தீஞ்சுவைப் பாட்டு,
தன்னையே பெருமோனத்தின் அடிமீது பலி தந்தது.
நிலத்திலும் நீரிலும், கருமை படர் ஓர் அருவ நிலை
இவ்விந்தை உலகினில் படர்கிறது.
நிழலாகி, சிறு துளியாகி, இவ்வுடலம்
கலந்துவிடுகிறது, எல்லையிலாக் கார் இருளில்.
விண்மீன் இயற்றும் வேதிகையின்கீழ்த்
தனியனாய் நான் வாளா நின்று
கைகூப்பி, மேல் நோக்கியே கூறுவேன்:
'ஏ கதிரோனே! உன் கிரணத் தொகுதியை இழுத்துக்கொள்.
உனது மங்கல வடிவினைக் காட்டுவாய் எனக்கு;
நம்மிடையே திகழும் அப்பரம்பொருள் ஒன்றென
அவ்வுருவில் காண்பேன்.'

(8 டிசம்பர், 1937) —பிராந்திக்

## 89

# பிறந்த நாள்

இன்று என் பிறந்த நாள்.
கூற்றுவன் அனுப்பிய ஓலையுடன்
யாவையும் தன்னுள் மறைத்திடும்
உயிரின் எல்லையில் முக்குளித்து
இருளிலிருந்து இப்பொழுதுதான்
எழுந்திருந்தேன். அது ஏதனாலோ,
'பழமை ஆண்டுகளுடன் கோத்திட்ட
இந்த வாடிய மாலை அறுந்தே போயிற்று; அங்கே
புதிய நாரிலே இன்று மிடைந்துள்ளது
எனது புதிய பிறந்த நாள்' என்றே எனக்குத் தோன்றியது.

பிறந்த நாள் விழாவிலே
நான் அமர்ந்திருக்கும் இவ்விடத்தில்
வெறும் யாத்திரிகனே நான்;
எமன் குறிப்புணர்த்தும்பொழுது
அவனது வலது கரத்தினிலிருந்தே
நெற்றியில் திலகம் கொண்டு
புதிய வைகறையைத் தொடங்கக் காத்திருப்பேன்.

என் பிறந்த நாளும், இறக்கும் நாளும்
இன்று நெருங்கியே வந்துள்ளன;
இரண்டும் ஒரே இடத்தில் அமர்ந்தனவே.
எனது வாழ்வின் இறுதியில் இரண்டு ஒளிகளும்,
இரவில் ஒளிரும் மதியமும் விடிவெள்ளியும் போல
நேருக்கு நேர் இணைந்தன.
இரண்டினையும் வரவேற்பது ஒரே மந்திரமே.
தொன்மை மிகுந்த பழங்காலமே,
உனது அருக்கியந்தனை இறக்கிடு;
உருவிலாதது உயிரின் பிறப்பிடம்.
உதய மால்வரைமீது, அதன்
தொன்மை ஒளியினைக் காண்பாய்!

எனக்கு ஆசி கூறு; வேட்கையின் வெம்மை பாய்ந்த
மாயக் கானல் நீர் தொடுவானில் மறைந்தொழியட்டும்.
ஆண்டியெனவே, பற்றேதும் இன்றிப் பிச்சைப் பை தன்னை
நிரப்பிக்கொண்டேன். மாசு படிந்த என் கலயத்தைக்
கவிழ்த்து விடு. பிடிபிடியாய் நான் எடுத்த பிச்சையைப்
புழுதியில் கலந்திடு.
என் வாழ்வில் நான் விட்டுச் செல்லும்
அக்கடைசி மிச்சிலைத் திரும்பியே பாராமல்
யாத்திரைப் படகில் ஏறி நான் சென்றிட வேண்டும்.

ஏ மாநிலமே,
நித்தியமுமே எனக்கு நினைவூட்டுகிறாய்:
வாழ்க்கைச் சகட்டில் பலருடன்
என்னையும் பிணைத்தே, இரவு பகல்
பருத்ததும், நுண்ணியதுமான பல கயிறுகளால்
பல திசையே, பல வழியே இழுக்கும்
வேட்கை, பசி யாவும் இன்று
ஓய்வுதரும் இவ்வந்திப் பொழுதில்,
தூங்கி விழும் இவ்வொளியில்
பொருளற்றே போயின.
அதனால், படிப்படியாய் என் வலிவை
நீ அடக்கிக்கொள்கிறாய், உலோபம் மிகுந்தவளே!
உனது தெள்ளிய ஒளிதன்னை
என் கண்ணுக்கும் செவிக்கும் எட்டாமல் மறைக்கின்றாய்;
இருள்கவிந்த திரைக்குப் பின்னர்
என்னை யாரோ இழுக்கின்றனர் நாளும்.
எனக்கும் உனக்கும் இடையே

தொடர்பும் இற்றே போயிற்று.
அதனால், எனக்குரிய மதிப்பினைக் கவர்கிறாய்.
என்னை ஒதுக்கிவிட்ட அடையாளந்தன்னை
நெற்றியில் வைக்கிறாய். அது தெரியும்; ஆனால்,
உன் அவமதிப்பு என்னைத் தொலைவில் ஒதுக்காது.
இனிமேல் உன் தேவைக்கு உதவாத
அம்மனிதனுக்கு, இறுதிச் சம்மானம்-உன்கடைசி வணக்கம் -
நீ செலுத்தியே ஆகவேண்டும்.
நீ என்னை முடமாக்கினும், குருடாக்கினும்,
வலிமை ஒழிந்த இந்த மாலை மங்கலில் மூடிவைப்பினும்,
முதுமையெனும் வலைக்குள் கிடத்தினாலும்,
இடிந்த கோயிலின் பீடத்தில்
பிரதிமை கௌரவத்துடனேயே
அழியாமல் நிற்கும்; அதை அகற்றிடும்
வன்மை உன்னிடம் !

இடியுங்கள், இடியுங்கள்!
இடித்த கற்குவியல் உயரட்டும்!
இதன் மறைவில், ஒளியுடன் ஓங்கியே
எனது ஆனந்த உருவம் திகழும்.
நாளும் வானத்து வாணியின்
சுவைமிகு இன்னமுதினைத் தருவாய் கொணர்ந்தே;
அதற்கு எதிரொலியாகப் பல சந்தங்களில்
'உன்மேல் காதலுற்றேன்' என்றே பாடினான் அவன்.
அந்தக் காதலே, உன் ஆட்சியையும் மீறி
என்னைச் சேர்த்தது பொன்னுலக வாயிலில்.
நான் கொண்ட அக்காதல்
தேய்ந்து சுருங்கினும்
அதில் ஏதாவது மிச்சம் இருக்கும்.
அதன் மொழி, பழக்கத்தின் அழுக்கேறி
ஒளியினை இழந்தும் இருக்கலாம்.
அந்த அழியா உருவம் உடன் இருந்தால்
மரணத்தின் அக்கரையினில்
நான் கண் விழித்தெழுவேன்.
அதன் மேனியில், மாந்துணரின்
பூப்பொடியால் வரைந்த தொய்யில்;
பனித்துளி தோய்ந்த நறுமென்
பவளமல்லிகையின் கோலம்;
அதன் துல்லிய மேலாடையில்

காலைப் புட்களின் தீங்குரல் புனைந்த சித்திரம்;
இனியவள் மெய் தீண்டியதால்
அதன் உடலெங்கும் புளகத்தின் குரல்.

உன் தொழிற்கூடத்தில் இருக்கையில்
திடுமெனச் சிறு ஓய்விடையே, சாளர வழியே,
யாரோ அறியேன், மலர்க் கண்ணியை என் சென்னிமிசைச்
சூடிச் சென்றனர்!
அது பணியாளுக்குத் தரும் பரிசே அன்று.
புலனுக்கு எட்டாது, தொடுதற்கரியவன் அத்தூதுவன்;
எல்லையற்ற அன்பின் உறவை
எவ்வண்ணம், எக்குறிப்பினை உணர்த்திச்
செல்கின்றானோ? மொழிக்கு அடங்காப் பேச்செல்லாம்
எதற்கும் உதவாத மனிதனிடம்
எங்ஙனம் உரைத்துச் செல்கின்றானோ?

ஏ மாநிலமே, அம்மனிதன்
உன் நிழலைவிட்டு அகன்றிடுகையில்
அவனுக்கு நீ அளித்தவை,
நீ கொடுத்த தொழில், உடைகள்,
உன் வழிக்குச் செல்ல உணவு யாவும்
கணக்கிடுவாய்!
அதனால், அவன் வெட்கிக் குன்றிப் போகான்.
இவ்வாறு இழப்பது வறுமையே அன்று.
இருப்பினும், உன் மண் எனக்குத் தந்ததை
நான் வெறுத்திடேன்; தெரிந்துகொள்.
அம்மண்ணுக்கு நான் கடன்பட்டவன்;
அவனுடைய வேலி இடுக்கிலிருந்தே
உருவிலியை நான் கண்டுள்ளதை
அடிக்கடி அறிவித்துள்ளேன்.
சடமாகிய இந்தத் திரை என்று
ஒளியுடன் ஒன்றிடுமோ;
பூவிடையே, புல்தளிரிடையே
பல்வேறு உருவிலே, சுவையிலே
என்று கலந்திடுமோ - அக்கணமே
ஆழ்ந்ததோர் இரகசியம் பெருமூச்செறியுமே.
மரிப்பவர் உலகின் அக்கரையில் இன்று
அவனுடைய கடைசிக் கருத்தினைத் தேடிச்
செல்லுகையில் திரும்பிப் பார்க்கின்றேன்;
உன் அழைப்பினை ஏற்று, பற்றை இழந்து

ஆசையைத் துறந்து நான் போகையிலே -
அந்த நல்ல வேளையில், உனது பொற்கோயில்
வாயில் திறந்தே இருக்கும்.
தீராப்பசி கொண்ட ஆற்ருமையைத்தான்
அவன் வஞ்சித்திடுவான்.
அவனது மட்பாண்டத்தில் தேங்கும்
அந்த ஆரமுது பேராசைப் பித்துப் பிடித்த
பிச்சைக்காரர்களுக்கு அன்ருே!
பொன்னுலகின் பெற்றியினைப் படைத்த மாநிலமே,
தியாகத்தை எதிர்நோக்கி உள்ளாய் நீ,
ஆசை அவிந்தவரை வரவேற்கின்ருய்,
மாளா வழி நடப்போரே
உனது ஈகைக்குரிய விருந்தினராவர்.
சினமுற்றவர், மயக்குடையோர்
இறைச்சியில் மோப்பம் உடையோர்,
ஆன்மிகத்தை அடியோடு மறந்தவர்,
இடுகாட்டினில் திரிவோர் - இவர்கள்
வெட்கம் கெட்ட கொடுமையுடன்
ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு
உனது குப்பைக் குழியைச் சூழ்ந்து
கூச்சலிட்டு இரவு பகல் அலைகின்றனர்.
திசைதோறும் மானிட-விலங்கு செய்யும்
இந்த உங்காரம் இன்று என் செவியை வருத்துகிறது.
பண்டிதரின் மடமை,
எளியவரைப் பொருள் மிக்கவர் படுத்தும் பாடு,
அழகுப் பித்துடையோரின் அலங்கோலம்,
இவற்றையெல்லாம் பார்த்துச் சிரித்தேன்.
துர்த்தேவதை, மனித தெய்வத்தை
எள்ளி நகையாடுவதை நான் தடுத்து,
'இந்நகைச் சுவை நாடகத்தின்
நடு அங்கத்தில், சட்டென மறைந்திடும்
இக்கொடிய கனு; புழுதிக் குவையே எஞ்சி நிற்கும்.
எரிந்து போன தீப்பந்தம்
விதியின் பேய்ச் சிரிப்பு யாவும்
கல்லறை மோனத்துள் ஒடுங்கிடுமே' என்பேன்.
சூதினுல் விளைத்திடும் அநீதத்தின் செய்தி
வரலாற்றின் அழியாத ஏடுகளில்
என்றுமே இடம் பெருது என்பேன்.

வீண் பேச்சு எதற்கு? மணி ஒலி கேட்கிறது,
உனது தோரண வாயிலில்;
இறுதியை அறிவித்திடும் மணியோசை அது!
அதனுடன், களைப்புறும் என் இதயத்தினில்
நான் விடைபெறும் இவ்வேளை,
சூரிய அத்தமனச் செவ்வொளி படிந்த
பூரவிப் பண்ணில், அண்மையிலேயே
உன் மணிக் கதவம் திறக்கும் ஒலி வருகின்றது.
வாழ்வின் நினைவுவிளக்கில் இன்றும்
எவர் திரியிட்டுச் சுடரினை ஏற்றுவரோ
அவ் விளக்கினைக் கொண்டே
வானிடைச் சுழலும் எழுமீன் முன்னால்
ஆலத்தி எடுத்திடுவேன் உனக்கு.
பகலின் முடிவில், உன் திருவடியிணையில்
அடங்கிடுமே, ஒலி ஓய்ந்த இவ்வீணை.
அப்பால், எனக்குப் பின்னால்
அரும்பு எடுக்காத எனது நாககேசரம்,
படகு நீத்த இக்கரையின் ஆசைகள் யாவும் இருந்திடும்.
பிரிவின் நினைவால் வாடி மெலிந்தே
கடையிரவில், அவன் ஒரு முறை
திரும்பிப் பார்த்தே சென்றிடுவான்.

(8 மே, 1938) —ஸேஞ்ஜுதி

## 90

## ஜப மாலை

போவோர் வருவோரது வழியோரந்தனில்
தனிமையில் உள்ளேன் நான்.
பாட்டெனும் தோணி செலுத்தியே
ஒளி-நிழல் என்னும் நாட்டைப் பண் இசைத்தே
உலகெனும் இவ்வியன் துறையை
வந்தடைவோர்,
மாலை மங்கலில் நிழலெனவே மறைகின்றனர்
இன்று என் கனவுலகின் வாயிலிலே
இசை துறந்த தம் வேதனை யாழினைத்
தேடி அலைகின்றனரே!

பொழுதோ விரைந்து செல்கின்றது;
இருளில் இம்மோன மணிமாலையில்
இசையினை உருட்டியே தனியே உள்ளேன்.

(20 அக்டோபர், 1940) -ரோக சஜ்ஜாய்

## 91

## கடன் தீர்த்தல்

அளவிலா நாட்களின் ஒளிதனைக்
கடனாக ஒரு நாள் ஈந்தாய் என் இரு கண்களுக்கும்;
இதை நான் அறிவேன்.
பேரரசே! அதனைத் திரும்பிப் பெற்றிடத்
திருவுள்ளம் தெரிவித்தீர் இன்று.
இக்கடனைத் தீர்த்தே ஆகவேண்டும்;
இதனை நான் உணர்வேன்.
ஆயினும், இந்த அந்தி விளக்கினிலே
நிழலைப் பரப்புவது ஏனோ?
உன் ஒளியால் திகழ்வது இந்த மலர்தலை உலகம்;
அங்கே நான் வெறும் விருந்தினனே.
இங்கும் அங்கும் நிறைவு கொள்ளாச்
சிறு புரைகள் சில இருப்பினும் -
அவை நுண்ணியவே -
அவற்றைப் பொருட்படுத்தாது
விட்டு அகல்வாயே!
இறுதியின் மண்ணிடையே
உனது தேர் ஊர்ந்த சுவட்டினில்
என் உலகினை அமைத்திட அருள் தாராய்!
வெளிச்சம் சிறிது இருக்கச் செய்திடு;
சிறிதே நிழலும், சிறிதளவு உன் மாயையும்
வைத்திடுவாய்.
இந்த நிழல் வழியே மங்கிய ஒளியின் பின்னால்,
இம்மியே ஆயினும் -
நீ ஈந்த கடனில் எஞ்சிய ஒன்றேனும் -
காணக் கிடைத்திடுமோ?

(3 நவம்பர், 1940) —ரோக சஜ்ஜாய்

## 92

# எனது புகழினை நான் நம்பி இருக்கவில்லை

எனது புகழினை நான் நம்பி இருக்கவில்லை;
காலக் கடல் தன் அலையின் விசையால்
வைகலும் வைகலும் அதனை அழித்திடும்-
இதை நான் அறிவேன்.
எனது பற்றுதல் யாவும் உன்னிடமே;
இந்தக் கலத்தினில் நிரப்பியே இருபொழுதும்
வையத்தின் ஆரமுதைப் பருகுகின்றேன்.
கனிந்திடும் அன்பே ஒவ்வொரு கணமும்
இதனுள் நிறைந்துள்ளது.
துயரின் சுமையைத் தாங்காமல் இதனை
உடைத்து வீண் செய்யேன் நான்.
இதன் கலையழகினைப் புழுதியால்
மாசு கொள்ளச் செய்யேன் நான்.
வாழ்வின் ஆடரங்கை விட்டு விலகிடும்போது,
இந்த உலகினிடம் என் அன்புக்குப்
பருவந்தோறும் இப்பூம்பொழிலே
சான்ருய் நின்றிடுமே.
உண்மையானது இந்த அன்பு;
இவ்வாழ்வு தந்திடும் நன்கொடையே இது.
விடை பெறும் வேளையிலே
மங்காத இவ்வுண்மையை உணர்ந்து
மரணத்தை வரவேற்பேனே!

(28 நவம்பர், 1940) —ரோக சஜ்ஜாய்

## 93

# இணையிசை

(ஐக்கிய தானம்)

இம்மலர்தலை உலகினைக் குறித்து நான் அறிந்ததுதான் எத்துணை!
நாடுகள் எத்தனையோ; நகரங்கள் எத்தனையோ;
மானிடரின் புகழ்தாம் எத்தனை; ஆறுகள், மலைகள்,
கடல்கள், பாலை வெளிகள், பார்த்திரா உயிரினங்கள்,
பெயரில்லா மரங்கள் இவைபோல் கண்ணுக்கு எட்டாதன பல!

மிகப் பரந்தது இவ்வுலகின் அமைப்பு.
அதன் குறுகிய மூலை ஒன்றில்
என் மனம் சுருங்கியே நிற்கிறது.
பயண நூல்களைப் படிப்பதில்
அடங்காத ஆர்வம் எனக்கு.
சித்திர விசித்திரமான வருணனைகளை
அவற்றிலிருந்து திரட்டிக்கொள்கின்றேன்.
என் மனத்துள்ளேயே, வறுமை மிகுந்த
என் அறிவினில், முடிந்தமட்டும்
இந்தப் பிச்சையில் கிடைத்த செல்வத்தை
நிரப்பிக் கொள்கிறேன்.

உலகத்துப் பாவலன் நான்.
அதன் ஒலி எழ எழ, என் வேய்ங்குழலிலும்
அதன் நாதம் எதிரொலித்திடும்.
இந்த இசைப் பயிற்சியில் பலவற்றின் குரல் கேட்காது;
புரைகள் பல உண்டு.
கற்பனையாலும், அநுமானத்தாலும்
வையகத்தின் இந்தப் பேரிசை
ஒலியடங்கிய எத்தனையோ பொழுதில்
நிறைவாகியது காண்!
அண்டுதற்கரிய பனிமலை
எல்லையில்லா நீலம் பரவிய மோனச் சூழ்நிலையில்,
செவிப்புலன் உணராத
இசையின் வழியாய், என் உள்ளத்தில்
அடிக்கடி அதன் அழைப்பினை விடுத்ததே!

தென்துருவக் குன்றின்மீது பெயர் தெரியாத தாரகை
மனிதரில்லாத பாழில் இரவெல்லாம் துடிக்கிறது!
நள்ளிரவில் அது தன் அதிசய ஒளியால்
என்னைத் துயிலெழச் செய்யும்.
தொலைவில் எங்கோ கடுவிசையருவி
என் உள்ளத்தின் மறைவினில்
இழுமென் ஒலியை அனுப்பிடுமே.
இயற்கை பாடும் இந்த இசைப் பெருக்கில்
பல திசைகளிலிருந்தும் கவிஞர் பலர்
தம் பாடல் அமுதினைச் சொரிகின்றனர்.
அவர்களுடன் எனக்குள்ள தொடர்பும் ஒன்றேதான்;
அனைவருடன் பழகும் வாய்ப்பு; அதனால்
நான் பெறுவது களிப்பேயாம்.

இசைவாணி எனக்குத் தரும் பேரருள்,
நான் நுகரும் இம்மாநிலத்துப்
பாடலின் இன்சுவைதான்!

எல்லாவற்றையும்விட உட்புக முடியாதது,
மனித உள்ளத்தின் ஒரு மறைவு;
வெளியுலகின் இடம், பொருள், ஏவல் குறித்து
அவன் மட்டில் வரையறை ஏதுமே இல்லை.
தன்னுள் திகழ்பவன் அவன்;
தன்னுள் திளைத்த பின்னரே
அவனது உள்ளக் கருத்து வெளியாகும்.
அதனுள் புக வழி காணவில்லை எங்கும்.
எனது வாழ்க்கையின் வேலிக்குள்
கட்டுண்டு கிடக்கிறேன்.
உழவன், வயலிடை ஏரினை ஓட்டுகின்றான்.
தறியில் நூலைப் பாவுகின்றான் நெசவாளி.
வலையினை வீசுகின்றான் வலைஞன் -
இவர்களுடைய விசித்திரத் தொழிலின் சிறப்பு
வெகு தொலைவு விரிவது;
இவர்களைக் கொண்டே நிலவுகிறது உலகத்தவர் வாழ்வு.
சமூகத்தின் உயர்பீடத்தில், குறுகிய சாளரக்கோப்பிலமர்ந்து
ஒதுங்கிய நான், அவர்கள் ஆற்றும்
தொழிலில் சிறு பங்கே கொண்டு
நடுநடுவே அவர்கள் வாழும்
எல்லைக்குள் சென்றுள்ளேன்.
உட்புகுந்து அவர்களுடன் உறவு கொள்ளும்
திறமை எனக்குச் சற்றும் இல்லை.
வாழ்வுடன் ஒட்டியிராது போனால்
இப்பாட்டின் செல்வம் யாவும்
பயனற்றே போகும்.
எனக்குள்ள இந்த இழுக்கினை
நான் ஏற்கத்தான் வேண்டும்.
என் இசையில் ஏதோ ஒரு சுருதி குறைவுதான்;
இதை நான் அறிவேன்.
எனது கவிதை விசித்திரத் துறைகளில் சென்றிடினும்,
எவ்விடத்திலும் நுழைந்து பார்த்த பெருமை
அதற்கு இல்லை.
செயலிலும் சொல்லிலும்
உண்மை நட்பினைப் பெற்றே

மண்ணோடு இழைந்து நிற்பவனே
உழவர் வாழ்வின் உயர்வை உணர்ந்தவன்.
கவிஞனோ, பாட்டிற்காக ஏங்கி நிற்பவன்.
இலக்கிய அரங்கில் நடக்கும் விருந்துகளில்
எனக்கு ஒன்றுமில்லை கொடுப்பதற்கு.
எப்போதும் அதைத் தேடிக்கொண்டுதான் இருக்கிறேன்.
எனக்குக் கிடைப்பது
உண்மைப் பொருளாய் இருக்க வேண்டும்;
வெறும் பாணி செய்து
கண்ணை மயக்கும் வித்தையன்று.
உண்மை விலை கொடுக்காமல்,
பெற்றிடும் இலக்கியப் புகழ்
வெறுங் கள்ளத்தனமே; இது நல்லதே அன்று.
உடல் வருந்தாத இவ்வேலை வெறும் போலியே.
புகழைக் காணாத எளிய மக்களின்
மனத்தை வெளிப்படுத்தும்
புதுமைக் கவிஞனே, வா!
உணர்விழந்த இந்த நாட்டில்
பாட்டின் சுவையே புகாமல்
புறக்கணிக்கப்பட்டோர் வாழும் -
இன்பம் துளியேனும் காணாத -
அப்பாலையின் வறட்சியைப் போக்க
வாராய் நீ, புதுமைக் கவியே!
உன் சுவைப் பெருக்குடன்
உள்ளுக்குள் கசிந்திடும்
அவ்வூற்று உறையும் இடம்
உனக்குத்தான் தெரியும்.
அதன் வழியை நீ திறந்திடுவாய்!
ஒற்றை நரம்புக் கருவியை மீட்டுவோருக்கும்
இலக்கிய அரங்கில் இடம் வேண்டும்;
துன்பத்திலும் இன்பத்திலும் வாய் அடைத்தே
தலை தாழ்ந்து திடுக்கிட்டிருக்கும்
இவர்களுக்கு இந்தப் பாரினில் இடம் வேண்டும்.
புலவனே! அருகில் இருந்தும் சேய்மையரான
இவர்கள் குரலிசையும் கேட்கவேண்டும்.
இவர்களுடைய உறவினன் நீயே.
உனக்கு வரும் புகழில் அல்லவா
தமக்குரிய சிறப்பினை இவர்கள் பெறுவர்?
மீண்டும் மீண்டும் உன்னை வணங்குகிறேன்.

(21 ஜனவரி, 1941) —ஜன்ம தினே

## 94

## புன்மை சேர் இரவு

புன்மை சேர் இரவு ஓசையின்றி மெல்லவே
வலிமை குன்றிய உடலின் நொய்ந்த தாழினை உடைத்து
வாழ்வின் மாண்புடைய உருவினைக் கவர்ந்திட
நுழைகின்றது உள்ளத்தே.
இருள் செறிந்த அதன் பிடியில் சிக்கித்
தளர்ந்தே தோல்வியுறுகின்றது நெஞ்சம்.
இந்தத் தோல்வியால் வந்திடும் வெட்கமும்,
இந்தத் தளர்ச்சியால் மூண்டெழும் இழிவும்
நெருங்கிச் சேருகையில்,
பொன்னவிர் ஒளிபடர் பகலின் பதாகை
திடுமெனக் காட்சி தருகிறது வானவிளிம்பிலே.
தொலைவில் விசும்பின் நடுவே,
'பொய், பொய்' என்ற பேரொலி கேட்கிறது.
காலைப் பொழுதின் தெள்ளிய ஒளியில்,
இடிந்த என் உடலரண் முகட்டில்
துயரை வென்று நிற்கும்
உன் திருவுருவினைக் காண்கின்றேன்.

*(21 ஜனவரி, 1941)* —ஆரோக்ய

## 95

## அழகின் இனிமை மிகுந்த ஆசிதன்னை—

அழகின் இனிமைமிகுந்த ஆசிதன்னைப் பெற்றேன் இவ்வாழ்வில்;
மாந்தர் அன்பு சொரியும் கலத்தினின்றே
அமுதச் சுவையினைப் பெற்றேனே!
பொறுக்கவொண்ணுத் துன்பம் மிகுந்த நாளில்
சிதைவிராத, தோல்வியுருத உயிரினைப் பெற்று
நான் உய்ந்தேனே!
மறலியின் இருள்நிழல் காணும் நாளில்
அச்சந் தரும் அதன் கைப்பிடியில்
மெலிவடைந்தே நான் தோல்வியுறவில்லை.
பெருந்தகையவர் தொடர்பினையும்
இழந்து நான் நிற்கவில்லை.
அவர்கள் அமுத மொழியினை

*என் உளந்தனில் இருத்திக் கொள்வேன்.*
*வாழ்வினை வகுத்திடும் இறைவனது கருணையைப்*
*பெறலானேன் இவ்வாழ்வதனில்.*
*பதித்திடுவேன் அந்த நினைவின் குறிப்பை*
*நன்றிசேர் எனது நெஞ்சத்துள்.*

*(28 ஜனவரி, 1941)* —ஆரோக்ய

## 96

# இனிமை மிக்கது இம்மண்ணின் புழுதி

*'இனிமை மிக்கது அவ் விண்ணுலகு;*
*இனிமை மிக்கதே இம்மண்ணின் புழுதியும்.'*
*நிறை வாழ்வின் இவ் வாணியை -*
*இம்மாபெரு மந்திரத்தை -*
*என் உளந்தனில் ஏற்றுக்கொண்டேன்.*

*நாளும், இந்த இன்சுவையால் பெற்றிடும்*
*உண்மையின் பரிசுகள் யாவும்*
*அழிவன அல்ல.*
*இம்மந்திரச் சொல்லே ஒலித்திடும்*
*மரணத் தறுவாயில்;*
*இழப்பதென்பதே பொய்யாகி,*
*எல்லையிலா அனந்தம் நிலவுமே.*
*இந்தப் புவியின் தொடர்பை நீத்திடும் வேளை,*
*நெற்றியில் அணிந்தேன் உன் புழுதியை எடுத்து;*
*துன்பம் எனும் மாயத்திரைக்குப் பின்னே*
*அழியாச் சுடரினைக் கண்டேனே.*
*மெய்யின் ஆனந்த வடிவத்தை இந்த மண்ணிலும் கண்டேன்.*
*இதனை உணர்ந்தே, 'இப்புழுதியில்*
*தலை வணங்குவேன்' எனப் புகன்றிடுவேனே.*

*(14 பிப்ரவரி, 1941)* —ஆரோக்ய

## 97

# நாற்காலி

பட்டை உரியக் காய்ந்திடும்
வெயிலின் கொடுமை;
மனிதர் தலை காட்டாத நண்பகல் வேளை;
வெறிச்சென நிற்கும் நாற்காலியை நோக்குவேன்.
அதன் நெஞ்சிடை ஏமாற்றம் குமுறும்;
என்னை உருக்கும் அதன் சூனியக் குரலில்!
சற்றும் விளங்காது அதன் உள்ளக் கருத்து.
தலைவனை இழந்த நாய் ஒன்று
சொல்லத் தெரியாத வேதனையால்
நெஞ்சம் நெகிழத் தேம்பிடுமே,
இது ஏன் என்பது தெரியாமல்.
பகலும் இரவும், நாற்புறமும்
வீணே அவனைக் காண அலைந்திடுமே!
அதைவிட இந்நாற்காலியின் குரலில்
தொனிக்கும் துயரோ மனத்தை இளக்கிடும்:
இனியனைக் காணாது வீட்டின் தனிமையைத்
தன் வேதனை மொழியால் நிறைத்திடுமே!

(26 மார்ச், 1941) —சேஷு லேகா

## 98

# பிறந்த நாளிடையே—

என் பிறந்த நாளிடையே
மறைந்தே போனேன் நான்.
நண்பர் யாவரும் கைகொடுக்க,
இன்சுவை நிறைந்த இந்த அன்பினையும்,
மாந்தர் அளித்திடும் இவ்வாசியையும்
ஏற்றுச் சென்றிடுவேன்.
இன்று என் பைக்குள் எதுவும் இல்லை;
அதில் இருந்ததைக் கவிழ்த்தே கொடுத்திட்டேன்;
என்பால் அன்பினையும்
என் பிழைதனைப் பொறுக்கும் அருளினையும்
இன்று நான் பெற்றது சிறிதாயினும்,
இறுதியில் காணும் அப் பெருவிழவினுக்கே
இக்கரை கடந்து எடுத்துச் செல்வேன்.

(6 மே, 1941) —சேஷு லேகா

## 99

# ரூப நாராயணக் கரையிலே

ரூப நாராயண ஆற்றங்கரையில்
கண் விழித்தெழுந்தேன்.
இவ்வுலகு பொய் என்பதைக் கண்டேன்.
குருதியின் எழுத்தில் உன் திருவுருவினை
நான் கண்டேனே!

என்னைத் தாக்கத் தாக்க
அறிந்தேன் உன்னை இவ்வேதனையூடே.
வன்மை மிக்கது உண்மை;
வன்மையை விரும்புவேன் நான்.
அது எனக்கு ஒருபோதும் வஞ்சனை செய்யாது.
இவ்வாழ்க்கை சாவளவும் கடுந்தவமே.
மெய்ம்மையின் உயர் மதிப்பினைப் பெறுவதற்கு
மரணத்தால் தீர்த்திடுவேன் என் கடன் அனைத்தையுமே;

(13 மே 1941) —சேஷு லேகா

## 100

# முதல் நாள் ஞாயிறு

புதிதாய் உலகு தோன்றியபொழுது
முதல் நாள் ஞாயிறு,
'நீ யார்?' என்றே
வினவியது.
இதற்கு விடை கிடைக்கவில்லை.

ஆண்டுகள் பல ஆயின;
பகலின் முடிவில் தாழும் ஞாயிறு
மேலைக் கடற் கரையினில்
ஒலி அடங்கிய அந்திப் பொழுதில்
'நீ யார்?' என்றே
இறுதியாக வினவியது;
விடை ஏதும் வரவில்லை.

(27 ஜூலை, 1941) -சேஷு லேகா

